

# மதுரை காமராசர் பல்கலைக்கழகம்



(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)

தொலைநிலைக் கல்வி இயக்ககம்

# பி.லிட். (தமிழ்)

மூன்றாமாண்டு

தாள் - 3

இலக்கணம் - 5

# தொல்காப்பியம் எழுத்ததிகாரம்

DEC அங்கீகாரம் பெற்றது

www.mkudde.org

**S 2814**

**அன்புள்ள மாணவச் செல்வங்களே!**

**வணக்கம்**

பி.லிட் மூன்றாம் ஆண்டில் சேர்ந்து தமிழ் இலக்கியம் பயில வந்துள்ள உங்களை மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் தொலைநிலைக் கல்வித் தமிழ்த்துறை அன்போடு வரவேற்கிறது. இந்த ஆண்டு நீங்கள் ஏழு தாள்கள் படிப்பீர்கள். மூன்றாமாண்டில் 'சுற்றுச்சூழலியல்' என்னும் பாடம் அனைத்துப் பட்ட வகுப்பு மாணவர்களுக்கும் பொதுவான பாடமாகும்.

இந்த ஆண்டில் நீங்கள் படிக்க வேண்டிய பாடங்கள் ஏழு.

அவை பின்வருமாறு:

தாள் 1 - பண்டை இலக்கியம்

தாள் 2 - நீதி இலக்கியம்

தாள் 3 - இலக்கணம் - 5 : தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்

தாள் 4 - இலக்கணம் - 6 : தொல்காப்பியம் - சொல்லதிகாரம்

தாள் 5 - இலக்கணம் - 7 : தொல்காப்பியம் - பொருளதிகாரம்

தாள் 6 - மொழிபெயர்ப்பியல்

தாள் 7 - சுற்றுச்சூழலியல்

உங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பாடங்களை நன்கு படியுங்கள். நீங்கள் தானாகவே படித்துப் புரிந்துகொள்ளும் வகையிலேயே பாடங்கள் எளிமையாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. பாடங்களில் உள்ள தன்மதிப்பீட்டு வினாக்களுக்கும், பயிற்சி வினாக்களுக்கும் விடை எழுதிப் பயிலுங்கள். படிக்கும்போது ஐயங்கள் தோன்றின், ஐயத்தைத் தொடர்பு வகுப்புகளில் உங்களுக்குப் பாடம் நடத்தவரும் ஆசிரியரிடம் கேட்டுத் தெளிவு பெறலாம். நன்கு படித்துத் தேர்வில் வெற்றி பெற வாழ்த்துகிறோம். தொடர்பு வகுப்புகளுக்குத் தவறாது வந்து படித்துப் பயன்பெறுக.

# தொல்காப்பியம் - இலக்கணம் - எழுத்து

## நோக்கம்:

### முதன்மை நோக்கம்

தமிழ் மொழியின் இலக்கணம், மொழியமைப்புப்பற்றி மாணவர் தெரிந்துகொள்வர்.

### துணைமை நோக்கம்

தமிழ் இலக்கணத் தொன்மையை அறிந்து கொள்கிறார்கள்.

தொல்காப்பியத்தின் பெருமை, சிறப்பு, வாழும்நிலை ஆகியவற்றினைக் கண்டு வியக்கிறார்கள்.

இனித் தொல்காப்பியத்தின் பாடத்திட்ட அறிமுகம், எழுத்ததிகார அமைப்பு ஆகியவற்றைக் காணலாம். வாருங்கள்.

# பி.லிட்., (தமிழ்) மூன்றாமாண்டு

## பாடத்திட்டம்

தாள் : 3 தொல்காப்பியம் எழுத்ததிகாரம்

கூறு 1 : நூன்மரபு, மொழி மரபு

கூறு 2 : பிறப்பியல்

கூறு 3 : புணரியல், தொகை மரபு, உருபியல்

கூறு 4 : உயிர் மயங்கியல், புள்ளி மயங்கியல்

கூறு 5 : குற்றியலுகரப்புணரியல்

## பாடத்திட்ட அறிமுகம்

தமிழில் நமக்குக் கிடைத்துள்ள இலக்கண நூல்களுள் மிகப்பழமையானது தொல்காப்பியம். எனவே தமிழ் இலக்கியம் பயிலும் மாணவர்கள் அடிப்படையான மொழியறிவு பெறுதற்பொருட்டு இவ்விலக்கணப் பாடம் மாணவர்க்கு அவசியமாக்கப்பட்டுள்ளது.

இவ்வகையில் இந்த நூல் 10 அலகுகள் கொண்டு விளங்குகிறது.

## உள்ளடக்கம்


| அலகு | தலைப்பு | பக்க எண் |
|---|---|---|
| 1 | தொல்காப்பியம் - அறிமுகம் | 1 |
| 2 | தொல்காப்பியம் - நூல் மரபு | 9 |
| 3 | தொல்காப்பியம் - மொழி மரபு | 27 |
| 4 | தொல்காப்பியம் - பிறப்பியல் | 48 |
| 5 | தொல்காப்பியம் - புணரியல் | 55 |
| 6 | தொல்காப்பியம் - தொகை மரபு | 79 |
| 7 | தொல்காப்பியம் - உருபியல் | 102 |
| 8 | தொல்காப்பியம் - உயிர்மயங்கியல் | 117 |
| 9 | தொல்காப்பியம் - புள்ளி மயங்கியல் | 143 |
| 10 | தொல்காப்பியம் - குற்றியலுகரப்புணரியல் | 179 |

## அலகு - I

# தொல்காப்பியம் - அறிமுகம்

1,1 தொல்காப்பியம் - பெயர்க்காரணம்

1.2 தொல்காப்பியர் - அகத்தியருடைய மாணவர்

1.3 தொல்காப்பியத்திற்கு முந்தைய இலக்கண நூல்கள்.

1.4 தொல்காப்பியரின் சமயம்

1.5 தொல்காப்பியமும் பிற இலக்கண நூல்களும்

1.6 தொல்காப்பிய எழுத்ததிகார அமைப்பு,

# இலக்கணம் - எழுத்து

தன் மதிப்பீட்டு வினாக்கள்

1. தொல்காப்பியர் எக்குடியில் பிறந்தார்?

2. தொல் காப்பியத்தின் முதல் நூல் எது?

தொல் காப்பியரின் தந்தை என்று கருதப்படும் முனிவர் யார்?

## I.O. தொல்காப்பியம் - அறிமுகம்

இனிமைத்தமிழ் மொழியானது பழமை வளமும் புதுமை நலமும் பொருந்தியது. முச்சங்கத்திற்கும் உரிய முத்தமிழ் இலக்கணத்திற்கு முதன்மை நூலாக அகத்தியம் விளங்குகிறது என்பர், அது கடல்கோளால் அழிந்திருக்கக்கூடும் என்ற கருத்து நிலவுவதால் தொல்காப்பியமே முதல் இலக்கண நூலின் இடத்தை பெற்றிருக்கிறது.

## I.I. தொல்காப்பியர் - பெயர்க்காரணம்

தொன்மை வாய்ந்த காப்பியக் குடியில் தோன்றியமையால் இப்பெயர் பெற்றதாக இளம்பூரணர் குறிப்பிடுகிறார். பழமைமிக்க காப்பியக்குடி என்ற ஊரில் பிறந்தமையால் இப்பெயர் ஏற்றதாகக் குறிப்பிடுகிறார்கள் சிலர் பழைய நூல்களுக்கு காப்பாக அமைந்த காரணத்தால் இப்பெயர் வந்ததாக வேறு சிலர் கூறுவர். காப்பியன் என்பது இயற்பெயர் நக்கீரர், பல்காப்பியர் என்பது போல தொல் எனும் அடைமொழி சேர காப்பியன் தொல்காப்பியன் ஆனார் என்றும் கூறவர். மேலும் தொல்காப்பியம் எனும் நூலைத் தந்தமையால் தொல்காப்பியர் எனப்பட்டார் என்றும் கூறப்படுகிறது.

## I.2. அகத்தியருடைய மாணவர்

அகத்தியத்தையே முதல் நூலாகக் கொண்டு இலக்கணம் இயற்றினார் தொல்காப்பியர் எனபர் ஒருசாரர், மற்றொரு சாரரோ அவ்வாறெனின் பாயிரம் அக்கருத்தை வலியுறுத்திவதாகச் சுட்டப்பட்டிருக்கும், அவ்வாறு பாயிரத்தில் ஏதும் கூறப்படவில்லை. அன்றியும் அகத்தியத்தை விடப் பன்மடங்கு சிறந்தது தொல்காப்பியம். எனவே முற்கூறியது ஆதாரம் இல்லாத கூற்றாக விளங்குகிறது என்பர் மறு சாரர்.

சமதக்கினிமுனிவரின் மகனார் தொல்காப்பியர் என்றும், பரசுராமரின் உடன் பிறந்தவர் என்றும் கூறுவர்.

"ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்" என்ற பாயிர அடிகொண்டு, பாணினிக்கு முந்திய ஐந்திரம் என்ற நூலை ஓதிய வடமொழிப் புலமையாளர் என்றும் கருத்து நிலவுகிறது. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்று ஐந்து கூறுபாடுகளை (ஐந்திரம்) அலசி உணர்ந்து எழுதிய தொல்காப்பியன் எனவும் கூறுவர்.

## 1.3. தொல்காப்பியத்திற்கு முந்தைய இலக்கண நூல்கள்

என்ப, மொழிய, என்மனார் புலவர், யாப்பென மொழிப யாப்பறிபுலவர், தோலென மொழிய தொன்மொழிப்புலவர் என 250க்கும் மேற்பட்ட இடங்களில் தொல்காப்பியர் எடுத்துக்கூறுவதால் இவற்றுக்கெல்லாம் அடிப்படையாகத் தொல்காப்பியருக்கு முன்பே இலக்கிய இலக்கணங்கள் எண்ணற்றன இருந்திருத்தல் வேண்டும் என்பதும், அவற்றை நன்கு ஆராயந்தே தம் நூலை அவர் உருவாக்கி இருக்க வேண்டும் என்றும் அறிந்து கொள்ளலாம்.

- முந்துநூல் கண்டு முறைப்பட எணணி என்கிறது பாயிரம்.
- நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்றபுலனெறி வழக்கு எனத் தொல்காப்பியரே குறிப்பிடுகின்றார்.

4. ஐந்திறம் எனக் கூறப்படுபவை யாவை?

## 1.4. தொல்காப்பியத்தின் காலம்

- இவர் ஏறத்தாழ கி.மு. 300ல் வாழ்ந்தவராகலாம் என்பர் முனைவர் இராசமாணிக்கர்.
- பௌத்தம் பற்றிய குறிப்பு ஏதும் தொல்காப்பியத்தில் இல்லை. எனவே புத்த மதம் தமிழகத்தில் நுழைவதற்கு முன்பே தொல்காப்பியம் செய்யப்பட்டிருக்கலாம் என்று வேறுபலர் குறிப்பிடுவர்.
- ஆனால் வையாபரிபபிள்ளை கி.பி. 5இல் அதுவும் வச்சிரநந்தி சங்கத்தில் தோன்றிய நூலாகக் கொண்டுவந்து நிறுத்துகிறார்.
- கே.என் சிவராச பிள்ளை கி.பி. 4ஆம் நூற்றாண்டு என்கிறார்.
- டாக்டர் சி. இலக்குவனார் கி.மு. ஏழாம் நூற்றாண்டு என்பார்.
- கா. வெள்ளை வாரணனார் கி.மு. 5320 என்று குறிப்பிடுவார்.
- இரா. இராகவையங்கார் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்னர்த் தோன்றியது என்பார்.

5. தொல்காப்பியர் குறிப்பிடும் இருவகை வழக்குகள் யாவை?

6. தமிழகத்தில் எச்சமயத்த வருக்கு முந்தியது தொல் காப்பியம்?

புறவரலாறுகளால் இந்நூல் 3000 ஆண்டுகளுக்கு முந்தியது என்பதனை யாரும் மறுக்கமுடியாது என்கிறார் நாவலர் சோமசுந்தர பாரதியார்.

கா.சு. பிள்ளை அவர்கள் வால்மீகி இராமாயணம் எழுந்த கி.மு. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகலாம் எனக் கூறியுள்ளார்.

மேற்குறித்த கருத்துக்களால் தொல்காப்பியர் பாணினிக்கு ( கி.மு 350 ) முந்தியவர் ஐந்திரத்திற்குப் பிந்தியவர் எனத் தெரிகிறது. ஆதலால் தொல்காப்பியர் காலம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முந்தியது என எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

## I.4. தொல்காப்பியரின் சமயம்

7 தொல்காப்பியம் எத்தனை ஆண்டு கட்கு முந்தியது?

தொல்காப்பியரைச் சமணர் என்றும், சைவர் என்றும் வைணவர் என்றும் பலவாறு கூறுவர். ஓர் இலக்கண ஆசிரியரின் சமயம் பற்றி ஆய்வது அழகன்று. அன்றியும் அவர் எல்லாத் தெய்வங்களையும் ஒப்ப மதிப்பவர், எனவே இன்ன சமயத்தவர் என்ற அறுதியிட முடியாது. வள்ளுவர் இளங்கோ போல சமயம் கடந்தவர் என்று ஏற்றுக்கொள்ளலாம்.

## I.5. தொல்காப்பியமும் பிற இலக்கண நூல்களும்

கோடிட்ட இடத்தை நிரப்புக
8 இலக்கண ஆசிரியரின்----- பற்றி ஆய்வது ஆழகன்று

இறையனார் களவியல், நம்பியகப்பொருள், மாறன் அகப்பொருள் போன்ற இலக்கண நூல்கள் அகப்பொருள் இலக்கணத்தை மட்டும் உரைப்பன.

பன்னிருபடலம், புறப்பொருள் வெண்பாமாலை போன்றன புறப்பொருள் இலக்கணத்தை மட்டும் எடுத்துரைக்கின்றன.

யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, அவிநயம், காக்கைப் பாடினியம் போன்றவை யாப்பு இலக்கணத்தைப் பற்றிக்கூறுவன.

9. பாட்டியல் நூல்கள் யாவை?

வெண்பாட்பாட்டியல், நவநீதப் பாட்டியல், பன்னிரு பாட்டியல் முதலியன பாட்டியல் நூல்கள் ஆகும்.

தண்டியலங்காரம், மாறன் அலங்காரம், அணி இலக்கணம் என்பன அணி இலக்கணம் பற்றிய நூல்கள் ஆகும்.

10. ஐந்திலக்கணம் கூறும் இலக்கண நூல்கள் யாவை?

வீரசோழியம், நேமிநாதம், இலக்கணவிளக்கம், தொன்னூல் விளக்கம் தென்னூல் விளக்கம் போன்றவை நமக்கு ஐந்திலக்கணத்தையும் உரைக்கின்றன.

நன்னூல் எழுத்து, சொல் என்ற இரண்டை மட்டும் உணர்த்தும்

- தொல்காப்பிய எழுத்ததிகாரத்திற்கு இளம்பூரணர் நச்சினார்க்கு இனியர் என இருவரும் உரை எழுதியுள்ளனர்.
- தொல்காப்பியம் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்ற முப்பெரும் பிரிவுகளை உடையது. இம் முப்பிரிவில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணமும் இடம் பெறுகின்றன. பிற்காலத்தில் தோன்றிய பல இலக்கண நூல்கள் ஐவகை இலக்கணத்தில் ஒன்றிரண்டையே எடுத்து உரைப்பனவாய் அமைந்தன.

## 1.6. தொல்காப்பிய எழுத்ததிகார அமைப்பு

தொல்காப்பிய எழுத்ததிகாரம் ஒன்பது உட்பிரிவுகள் உடையது. அவ்வொன்பது பிரிவுகளுள் உணர்த்தப்பட்டுள்ள கருத்துக்களை வகைப்படுத்திக் கீழ்க்கண்டவாறு அறிந்து கொள்ளலாம்.

### 1. நூல் மரபு

1. எழுத்தின் வகை, அவற்றின் பெயர்
2. மாத்திரை (எழுத்துக்கள் ஒலிக்கும் கால அளவு)
3. எண் (எழுத்துக்களின் எண்ணிக்கை)
4. வடிவு (வரி வடிவம்)
5. மயக்கம் (எழுத்துக்கள் ஒன்றுடன் ஒன்று மயங்கி வருதல்)
6. எழுத்துக்களின் பிற விதிகள்

### 2. மொழி மரபு

1. சார்பெழுத்துக்கள் மொழியில் இடம்பெறம் முறை.
2. அளபெடை
3. எழுத்துக்கள் இணைந்து சொல்லாதல்.
4. எழுத்துக்களின் இயக்கம்.
5. போலி (எழுத்துப்போலி)
6. மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள்.
7. மொழிக்கு இறுதியில் வரும் எழுத்துக்கள்.

**3. பிறப்பியல்**

1. எழுத்துக்கள் பிறக்கும்முறை
2. உயிரெழுத்துக்கள் பிறக்கும்முறை
3. மெய்யெழுத்துப்பிறக்கும் முறை
4. சார்பெழுத்தின் பிறப்பு முறை
5. புறனடை

**4. புணரியல்**

1. சொற்களின் முதலும் ஈறும்
2. புணர்ச்சியின் தன்மை
3. உருபுப்புணர்ச்சி
4. சாரியைப் புணர்ச்சி
5. எழுத்துப்புணர்ச்சி
6. உயிரெழுத்தின் புணர்ச்சி
7. புணர்ச்சியில் பொருள் வேறுபடுதல்.

**5. தொகை மரபு**

1. உயிரீறுமெய்யீறுகளின் புணர்ச்சி - பொது
2. உயிரீறு மெய்யீறுகளின் புணர்ச்சி - சிறப்பு

**6. உருபியல்**

1. உயிர் ஈறுகள்
2. மெய்யீறுகள்
3. குற்றியலுகர, முற்றியலுகர ஈறுகள்
4. புறனடை

**7. உயிர் மயங்கியல்**

1. அகர ஈறு
2. ஆகார ஈறு
3. இகர ஈறு
4. ஈகார ஈறு
5. உகர ஈறு
6. ஊகார ஈறு
7. எகர ஒகர ஈறு
8. ஏகார ஈறு
9. ஐகார ஈறு
10. ஓகார ஈறு
11. ஔகார ஈறு

**8. புள்ளி மயங்கியல்**

1. மெல்லின ஈறு (ஞணநமன)
2. இடையின ஈறு (யரலவளழ)
3. புறனடை

**9. குற்றியலுகரப் புணரியல்**

1. குற்றியலுகரத்தின் இயல்பு
2. குற்றியலுகரம்
3. குற்றியலுகரப் புணர்ச்சி - பொது
4. குற்றியலுகரப் புணர்ச்சி - சிறப்பு
5. குற்றியலுகரப்புணர்ச்சி
6. எழுத்ததிகாரத்தின் புறனடை என 58 (ஐம்பத்து எட்டு)

கருத்து நிலை விளக்கங்களாகத் தொல்காப்பிய எழுத்ததிகாரம் அமைந்துள்ளது. இவற்றை ஒருமுறைக்கு இருமுறை படித்து நினைவில் பதியவைத்துக்கொண்டால் என்ன படிக்கப்போகிறோம் என்பது மனதில் தங்கும்.

இலக்கியம் என்பது எல்லையற்ற விரிந்த பரப்பு, மொழியோ நாளும் வளரும் தன்மையது, பேசும் மக்கட் சமுதாயமும் மாறுதல் பலவற்றைச் சந்திக்கிறது. எனினும் இவற்றினை எல்லாம் கடந்து மொழிக்கு வேலியாக இருப்பதே இந்த இலக்கணம். எனவே இலக்கணத்தில் உள்ளார்ந்த ஈடுபாட்டை வளர்த்துக்கொண்டு தேர்வில் முதன்மை பெற்று முழுமையான வெற்றி பெறுவீர்களாக நல்வாழ்த்துக்கள்!

## I சுயதிறனறிவிடைகள்

1. காப்பியக்குடி 2. அகத்தியம் 3. சமதக்கினி முனிவர்
4. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி
5. நாடக வழக்கு, உலகியல் வழக்கு,
6. பௌத்தம் 7. 3000 ஆண்டுகளுக்கு
8. சமயம்,
9. வெண்பாபாட்டில் நவநீதப் பாட்டியல், பன்னிரு பாட்டியல்.
10. வீரசோழியம், நேமிநாதம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், தொல்காப்பியம்

## பயிற்சி வினாக்கள்

### II குறுவினாக்கள்:

1. தொல்காப்பியரின் பெயர்க்காரணங்கள் கூறுக.
2. தொல்காப்பியத்திற்கு முன்பே இலக்கண நூல்கள் இருந்தமையை எவ்வாறு அறியலாம்?
3. தொல்காப்பியரின் காலம் பற்றிய கருத்துக்கள் யாவை?
4. தொல்காப்பியரின் சமயம் குறித்து எழுதுக.
5. தொல்காப்பியமும் பிற இலக்கண நூல்களும் பற்றிக் கருத்துரைக்க.

### III பெருவினாக்கள்:

1. தொல்காப்பிங் குறித்த அறிமுகச் செய்திகளை தொகுத்துரைக்க.
2. தொல்காப்பிய எழுத்ததிகார அமைப்பினை விளக்குக.

**அலகு - 2**

# நூல் மரபு

2.1 நூல் மரபு பொதுச்செய்திகள்

2,2 நூல் மரபில் இடம்பெறும் செய்திகள்

2.3 எழுத்தின் வகைதொகை

2.4 எண், பெயர், முறை

2,5 சார்பெழுத்தின் வகை

2.6 குற்றியலுகரம், குற்றியலிகரம்

2,7 ஆய்தம்

2,8 . முதல் எழுத்து

2.9 மாத்திரை

2,10 உருவம்

தன்மதிப்பீட்டு வினாக்கள்

# நூல் மரபு

முதற்பாடத்தில் தொல்காப்பியத்தின் பெயர்க்காரணம், தொல்காப்பியத்தின் சமயம். தொல்காப்பியத்திற்கு முந்தைய இலக்கணங்கள், தொல்காப்பிய எழுத்து அதிகாரத்தின் அமைப்பு ஆகியன பற்றி விளக்கமாக அறிந்துகொண்டீர்கள் அல்லவா இனி இரண்டாவது பாடமாகத் தொல்காப்பியத்தின் உள்ளடக்கத்திற்கு வருவோம்.

**நோக்கம்:**

**முதன்மை நோக்கம்:**

எழுத்திலக்கணம் கூறப்பட்டுள்ள முறைமையினை மாணவர் அறிந்து கொளவர்.

**துணைமை நோக்கம்:**

- ❖ தமிழ் எழுத்துக்களின் வகை தொகைகளை அறிந்து கொள்கிறார்கள்
- ❖ எழுத்துக்களின் ஒலி அளவுகள், வடிவம், மயக்கம் ஆகியனவற்றையும் நன்கு புரிந்துகொள்கிறார்கள்.

## 2.1. நூல் மரபு பொதுச்செய்திகள்

எழுத்ததிகாரத்தின் முதல் இயல் நூல் மரபு. நூல் மரபு என்ற பெயர்ப்பொருததம் குறித்துப் பலரும் பலவிதமாக ஆராய்ந்து முடிவு கூறியுள்ளனர்

நூல் மரபு எனப் பெயர் பெற்றது ஏன்?

### இளம்பூரணர் கருதது

“அதிகாரத்தால் செய்யப்படும் எழுத்திலக்கணத்தினை ஓராற்றால் தொகுத்து உணர்த்துதலின் நூல் மரபு என்னும் பெயர்த்து” என இளம்பூரணர் கருத்துரைக்கிறார். (தொல்காப்பியம் - எழுத்து - இளம்பூரணர் - ப-11)

நூல் மரபாகும் துணைக்கு வேண்டுவனவற்றைத் தொகுத்து உணர்த்தியமையால் நூல் மரபு எனப்பெயர் பெற்றது என்பது தெளிவு.

### நச்சினார்க்கினியர் கருத்து

இங்ஙனம் மூன்று அதிகாரத்திற்கும் இலக்கணம் கூறுதலின் இவ்வோத்து நூலானது இலக்கணம் கூறியதாயிற்று என நச்சினார்க்கினியர் விளக்கம் தருகிறார். (தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - நச்சினார்க்கினியர் - பக்-16-17)

### சிவஞான முனிவர் கருத்து

"எழுத்து, குறில், நெடில், உயிர் மெய் என்ற தொடக்கத்துப் பெயர்கள் நூலின்கண் ஆளுதற்பொருட்டு முதனூல் ஆசிரியனாற் செய்து கொள்ளப்பட்டமையின் இவை நூல் மரபு பற்றிய பெயராயின என அறிக" என்று கூறுவார் (தொல்காப்பியம் சூத்திர விருத்தி பக் 24)

### இக்கால இலக்கண ஆய்வாளர்கள்

வேங்கடராஜுலு ரெட்டியார் தமது எழுத்ததிகார ஆராய்ச்சியில் மொழியின் இயல்பு உணர்த்திய இயல்மொழி மரபு எனப்பட்டது போல எழுத்தின் இயல்பு உணர்த்திய இயல் நூல் மரபு எனப்பட்டது" என்று கூறியுள்ளார். (எழுத்ததிகார ஆராய்ச்சி),

2. நூல் மரபின் ஒழிபியலாக விளங்குவது எது?

தொல்காப்பியத்தின் எழுத்தியல் என்று அமையவேண்டிய பகுதி நூல் மரபு, மொழி மரபு எனக் கூறப்பட்டுள்ளது. எழுத்தொலிகளின் வகை, செய்தி, திரிபு முதலியவற்றை நூல் மரபிலும், வழங்கியல் நெறியில் ஒலியின் வருகை பற்றி மொழி மரபிலும் பேசியிருக்க வேண்டும். மாறாக நூற்பாக்கள் இங்கும் அங்குமாக மயங்கிக்கிடக்கின்றன" என்ற டாக்டர் தே. ஆண்டியப்பன் (தே. ஆண்டியப்பன் காப்பிய நெறி - எழுத்தியல் ப 8) அவர்கள் கூறும் கருத்தையும் "நூல் மரபின் ஒழிபியலாக மொழிமரபு விளங்குகின்றது" சிவஞான முனிவர் கருத்தையும் இணைத்துச் சிந்தித்துச் செய்திகளை நிரல்படுத்திக்கொண்டு பொருள் உணரலாம்.

## 2.2. நூல் மரபில் இடம்பெறும் செய்திகள்

- எழுத்தின் எண், பெயர் முறை
- எழுத்தின் மாத்திரை
- எழுத்தின் உருவம்
- எழுத்து மயக்கம்

ஆகிய செய்திகள் காணப்படுகின்றன.

1. எண் : எழுத்துக்கள் இத்துணை எனக்கூறுவது

2. பெயர் : எழுத்தின் பெயரை உயிர் மெய் என்பது போலச்சுட்டி உரைப்பது

3. முறை : எழுத்தின் [illegible] முறை அல்லது ஒலிப்பு முறை என முறை பற்றி எடுத்து கூறல்.

4. மாத்திரை : எழுத்துகளின் அளவு

5. உருவம் : எழுத்தின் வரிவடிவம்

6. மயக்கம் : எழுத்துகள் ஒன்றுடன் ஒன்று கூடி நிற்பது.

என்றவாறு நூல்மரபின் செய்திகளை வரிசைப்படுத்திக் காணுதல் அவசியமாகிறது.

## 2.3, எழுத்தின் வகை தொகை

3. தமிழில் எழுத்து எத்தனை வகைப்படும் யாவை?

தமிழில் எழுத்து முதல் எழுத்து சார்பெழுத்து என இரு வகைப்படும். எழுத்தெனப்படுவ

***அகர முதல***
***னகர இறுவாய் முப்ப:தென்ப***
***சார்ந்து வரல் மரபின் மூன்றலங்கடையே***

என்ற இந்நூற்பாவில் தொல்காப்பியர் எழுத்தின் பெயர், முறை, வகை, தொகை ஆகிய நான்கையும் உணர்த்தக் காணலாம்.

சார்பெழுத்துக்கள் தனித்து நிற்கும் ஆற்றல் இல்லாதன. ஆதலினால் அவற்றை இம்முப்பது எழுத்துகளின் தொகுதியுடன் சேர்த்துக்குறிப்பிடவில்லை.

4. தனித்து நிற்கும் ஆற்றல் இல்லாத எழுத்துக்கள் எவை?

எழுத்து என்பது தொகை;
முப்பது என்பது அதன் வகை;
முப்பத்து மூன்று என்பது அதன் விரி என்பார் இளம்பூரணர்.

## 2.4. எண், பெயர், முறை, சார்பெழுத்து

சார்பு என்பதற்குப் பற்றுக்கோடு எனப்பொருள். சார்பெழுத்து எனில் ஒன்றைப் பற்றுக்கோடாகக் கொண்டுவரும் எழுத்தாகும்.

முதல் நூற்பாவில் சார்ந்துவரல் மரபின் மூன்று என்ற குறிப்பிட்ட சார்பெழுத்துகள் இன்ன என்று அடுத்த நூற்பாவில் விளக்கிக்கூறுகிறார் தொல்காப்பியர்.

***"அவைதாம்,***
***குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற***
***முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன"***
என்ற நூற்பா சார்பெழுத்தினை அறிமுகப்படுத்துகிறது.

"மூன்று புள்ளியா? மூன்றும் புள்ளியா?" என்று தே. ஆண்டியப்பன் அவர்கள் இந்நூற்பாவில் வினாப்பொருளுடன் உரை கூறியிருக்கிறார். (தே. ஆண்டியப்பன், காப்பியநெறி - எழுத்தியல் பக் 9, 10)

சார்பெழுத்து நூற்பாவினைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

- ஆய்தம் என்பது முப்பாற் புள்ளி என்ற கருத்தும் ஏற்புடையது.
- குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றுமே புள்ளிபெறும் என்ற கருத்தும் அடிப்படையானதே.

### மூன்றும் புள்ளி பெறும்

குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆய்தம் எனும் மூன்றுமே புள்ளி பெறும் தன்மையன எனக்குறிப்பர் கருத்தே கூடுதல் வலிமையுடையதாகத் திகழ்கிறது. ஏனெனில் புணரியலில் தொல்காப்பியர்,

"மெய்யீறு எல்லம்; புள்ளியோடுநிலையல்"" என்று கூறிவிட்டு குற்றியலுகரமும் "அற்றென மொழிப" என்று குறிப்பிட்டுள்ளார். குற்றியலுகரமும், குற்றியலி கரமும் ஆய்தம் போலப் புள்ளிப்பெறும் என்பதே சிவஞான முனிவர், மயிலை நாதர், பேராசிரியர், சங்க யாப்புடையார் ஆகியோரின் கருத்தாகவும் திகழ்கின்றது. ஆனால் இளம்பூரணரும் நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்களும் ஆய்தம் மட்டுமே முப்பாற்புள்ளி என்ற கருத்துடையவர்களே!

## 2.5. .சார்பெழுத்தின் வகை

தொல்காப்பியர் சார்பெழுத்துகள் என மூன்றை மட்டும் சுட்டுகிறார். இளம்பூரணரோ "எனப்படும் என்று சிறப்பித்த அதனால் அளபெடையும் உயிர்மெய்யும் சிறப்பில்லா எழுத்தாகக் கொள்ளப்பட்டன" எனக்கூறி அளபெடையையும் உயிர்மெய்களையும் சேர்ப்பார்.

| | | |
|---|---|---|
| தொல்காப்பியர் கூறும் சார்பெழுத்து | - | 3 |
| வீர சோழியர் | - | 13 |
| நேமிநாதர் | - | 244 |
| இலக்கண விளக்க ஆசிரியர் | - | 210 |
| நன்னூல் | - | 269 |

எழுத்து என்று சிறப்பித்துச் சொல்லப்படுவன முப்பதாம். சிறப்பில்லா சார்பெழுத்து மூன்றுமாம். சிறப்பு இல்லாமைக்குச் சார்ந்து வருதலே காரணமாகும் என்று கருதுபவர் அந்நிலையில் துணை நிலை வழக்கு என்ற முறையில் சார்பெழுத்தை ஆராய்ந்தால் தொல்காப்பியர் கருத்தே சிறப்பானதாக விளங்கும்.

## 2.6, குற்றியலுகரம், குற்றியலிகரம்

உகரம் இகரம் என்ற உயிர்களோடு குறுகிய உகரம் குறுகிய இகரம் என்று இவற்றை ஒப்பிடும்போது பல கருத்துக்கள் எழுகின்றன.

இளம்பூரணர், "சந்தனக் கோல் குறுகிய இடத்துப் பிரப்பங்கோல் ஆகாது. அதுபோல இகர உகரங்கள் குறுகிய இடத்தும் அவை உயிர் ஆகற்பாலன" என்பார். சிவஞான முனிவரோ, "இவை அரை மாத்திரை பெறுதல் மகரக் குறுக்கம், போலச் செயற்கையினால் பெற்றதன்று. இவை இங்ஙனம் ஒலித்தல் இயல்பு என்பதற்காகவே குற்றுகரம் குற்றிகரம் எனப்பெயரிடாமல் குற்றியலுகரம், குற்றியலிகரம் எனப்பெயரிட்டார்" என்பதைத் தெளிவாகக்கூறி விளக்கியுள்ளார்.

5. குற்றியலுகரம் எங்கு இடம் பெறும்?

### குற்றியலுகரம்

இது தனிமொழியிலும் புணர்மொழியிலும் இடம் பெறுகின்றது. "நுந்தை" என்ற ஒன்றைத்தவிர ஏனைய இடங்களில் வரும் குற்றியலுகரம் யாவும் வல்லின மெய் மேல் ஏறிச் சொல்லின் ஈற்றில் இடம் பெறுகின்றன,

இன்றைய பேச்சுத்தமிழ் ஈற்றில் மெல்லின இடையின மெய்களை அடுத்தும் குற்றியலுகரம் வழங்குகிறது எனக்கொள்ள வேண்டும் என்ற கருத்தினை வேங்கடராஜுலு ரெட்டியார், டாக்டர் முத்துச்சண்முகனார் ஆகியோார் வலியுறுத்துகின்றனர்.

இப்போதுள்ள ஒலிப்பு முறை கொண்டு ஆய்ந்தால், பெரும்பாலான உகரங்கள் குற்றியலுகரமாக ஒலிக்கப்படுவதைக் காணலாம். பேச்சுத்தமிழிலில்

(எ.டு.) அது, இது

வரவு, செலவு

எனவரும் இடங்களில் உகரம் முற்றுகரமாக ஒலிக்காது குற்றுகரம் போல ஒலிக்கப்படும்.

- குற்றியலுகர ஈற்றிற்குப்பின் யகரம் வரின் உகரம் திரியவோ அல்லது உகரம் கெட்டு இகரம் தோன்றிக் குறுகி ஒலிக்கவோ செய்கிறது.
- "மியா" எனும் அசைச்சொல்லின் இகரம் குறுகி ஒலிக்கிறது

(எ,டு) நாகி யாது

கேண்மியா

## 2.7. ஆய்தம்

ஆய்தம் பற்றிய கருத்துக்கள் இன்றளவும் சிக்கல்கள் உடையனவாகவே விளங்குகின்றன. ஆய்தத்தை மூன்றுவித நிலைகளில் கூறக்காண்கிறோம்.

1. தனிமொழியில் ஆய்தம் குறுகிய எழுத்தின் முன் உயிரோடு புணர்ந்த வல்லெழுத்து ஆறன்மிசையும் தோன்றும்.

   (எ.டு) எஃகு, கஃசு, பஃறி

2. புணர்ச்சியில் தோன்றும் ஆய்தம் கீழ்க்கண்டவாறு வரும்.

   கல் + தீது = கஃறீது

   முள் + தீது = முஃடீது

3. நிறம், ஓசை பற்றிய குறிப்பு மொழிகளிலும் ஆய்தம் இடம்பெறும்

   கஃறென்றது : நிறம்

   சுஃறென்று : ஒலி

6. ஆய்த எழுத்தின் வேறுபெயர்கள் யாவை?

ஆய்தம், தனிநிலை, அஃகேனம், முப்பாற்புள்ளி எனப்பல பெயர் பெறுகிறது.

புள்ளி என்று குறிப்பிட்டதால் இதனை மெய்ப்பாற்படுத்துக்கொள்க என்பார் இளம்பூரணர். அவரே "இசைமை" என்பதற்கு ஆய்த ஒலி என்றும் கூறுவார். இக்கருத்து கவனிக்கத்தக்கது. இதலால் ஆய்தத்தை வழுக்கொலி எனக் கருத வாய்ப்பு ஏற்படுகிறது. தொல்காப்பியர் முப்பஃது மஃகான் என்று கூறுமிடத்தில் ஆய்தம் வழுக்கு ஒலியாக வருகிறது.

“செப்பேடுகளில் இய்து என்ற வடிவம் உள்ளது. குறளில் செய்க எஃகு என்பன எதுகையாகின்றன. இதனால் எய் என்பதினின்று எஃகு தோன்றியிருக்குமோ என ஐயம் எழுகின்றது. எல் என்பதினின்று கூடத்தோன்றியிருக்கலாம். எவ்வாறாயினும் ல, ள, வ என்ற மூன்றுமே இசையை நாடின. இம்மூன்று புள்ளிகளின் மாற்றொலியாக முப்பாற்புள்ளியாக ஆய்தம் நிற்கின்றது என்ற முடிவுக்கு வரலாம்” என்று காப்பியர் நெறியில் (எழுத்தியல் ப - 23) பேராசிரியர் தே. ஆண்டியப்பன் அவர்கள் கருத்துரைக்கிறார்.

வீர சோழியம், “மாணிக்கத்திற்கும் மரகதத்திற்கும் இடையே உள்ள படிகம் மாணிக்க ஒளியால் மாணிக்கம் போலும். மரகத ஒலியால் மரகதம் போலும் தோன்றினாலும் இந்த இரண்டுமே அல்லாமை போல், உயிரும் அல்லாது, மெய்யும் அல்லாது இரண்டனுக்கும் இடை நிற்கும் தன்மையால் நடு ஆய்தம்” என உரைக்கிறது.

## ஆய்தத்தின் வடிவம்

- ஆய்தத்தை அடுப்புக் கூட்டு போன்றது என்றார் நச்சினாக்கினியார். இக்காலத்தார் நடுவு வாங்கிவிட்டு எழுதுப என்றும் கூறுகிறார்.
- பல்லவர் காலத்திய காசக்குடிப்பட்டயத்தில் வெ+கா என்று குறிக்கப்பட்டுள்ளது
- பாண்டியர் சாசனத்தில் விசர்க்க வடிவாக + என ஆய்தம் எழுதப்பட்டுள்ளது. வடமொழி விசர்க்கம் : என எழுதப்பெறும்.
- ஆய்தம் என்றால் நீண்ட கோடு என்று பொருள். அதன் திரிபே பெற்றது. “ஆஸ்தரம்” என்ற எழுத்து.
- “ஆய்தத்திற்கும் விசர்க்கத்திற்கும் ஒலி வடிவம் வரிவடிவம் ஒன்றாகவே அக்காலத்தில் அமைந்திருந்தன” என்பார் மு. இராகவ ஐயங்கார்.
- தமிழில் ஆய்தம் என்ற சொல் உருவும் அதன் பொருளும் அப்பெயருடைய எழுத்தின் ஒலியும் வேறு. வடசொல்லாகிய ஆய்தரம் என்பது திரிந்தது என்றால் எவ்வாற்றானும் பொருந்தாது என்பர் வெள்ளை வாரணர் (தொல் - நன்னூல் - எழுத்து - ப - 29) அதிகாரம்.

ஆய்தம் என்ற உரிச்சொல்லடியாகப் பிறந்து ஆய்தம் என்றாகி நுணுகிய ஓசையை உடைய எழுத்து என்ற பொருளில் வழங்கியிருத்தல் கூடும் என்று அவர் கருதுகின்றார்.

- ❖ டாக்டர் மு.வ. அவர்கள் ஆய்தத்தை தொடர்கின்ற வல்லெழுத்துக்களின் மாற்றொலிகளாகவே கருதுவார்.
- ❖ தேவ நேயப் பாவாணர் அவர்களோ ககரத்தினின்று எழுந்த நுண்ணிய ஒலி என்பார்.
- ❖ பி.எஸ்.எஸ். சாஸ்திரி அவர்கள் ஆறு வல்லெழுத்துடனும் இயைந்த போது ஆறுவகையாக ஒலித்தது என்ற கருத்தும் ஏற்புடையதே.
- ❖ தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் "ஆய்தம் ஓர் எழுத்து அல்ல. அது ஓர் அடையாளமே" (A Diacritical Mark) என்று உரைப்பதும் கூர்ந்து நோக்குதற்கு உரியதாகும்.
- ❖ ஆயுதத்தை ஆராயும் பலரும் பல நிலைகளில் கருத்துரைத்த போதிலும் பாட்டியல் நூலார் அலி எழுத்து என்பர். தொல்காப்பியர் ஆய்த எழுத்துப் பயிலும் வண்ணத்தை நலிவு வண்ணம் என்பர்.
- ❖ தமிழில் ஆய்தம் என்ற ஓர் எழுத்தில்லை. அது இலக்கண ஆசிரியர்களின் கற்பனையே என்று கருத்துரைப்பாரும் உண்டு.

## 2.8. முதல் எழுத்துக்கள்

தொல்காப்பியர் முதல் எழுத்து என்று தனியே பெயரிடவில்லை. சார்பு எழுத்து என்று கூறியதால் முதல் எழுத்து என்ற பெயரைக் கொண்டனர் முதல் எழுத்து என்பது வேறு. மொழிக்கு முதலில் வரும் எழுத்து என்பது வேறு.

7. முதல் எழுத்துக்கள் யாவை?

முதல் எழுத்து உயிர், மெய் எனப்பெயர் பெறும்.

<u>உயிர்</u>

"***ஔகார இறுவாய்ப்***

***பன்னீர் எழுத்தும் உயிரென மொழிப***" (சொல் - எழுத்து - 8)

என உயிரெழுத்தின் பெயரையும் முறையையும் அவை 12 என்ற எண்ணையும் உணர்த்துகிறது தொல்காப்பியம்.

<u>மெய்</u>

***"னகார இறுவாய்ப்***

***பதினெண் எழுத்தும் மெய்யெனமொழிப"*** (தொல் - எழுத்து - 9)

என மெய்யெழுத்தின் பெயர், முறை, எண் ஆகியன உணர்த்தப்பட்டன.

<u>உயிரெழுத்து</u> குறில், நெடில் என்று பகுக்கப்படும்.

"அவற்றுள்

அ இ உ

எ ஒ என்னும் அப்பால் ஐந்தும்

ஓரளவு இசைக்கும் குற்றெழுத்து என்ப" (தொல் - எழுத்து - 3)

***"ஆ ஈ ஊ ஏ ஐ***

***ஓ ஔ என்னும் அப்பால் ஏழும்***

***ஈரளவு இசைக்கும் நெட்டெழுத்து என்ப"*** (தொல் - எழுத்து - 4)

இவ்வாறு குறில், நெடில் எழுத்துக்கள் அவற்றின் எண், பெயர், மாத்திரை ஆகியவற்றோடு விளக்கப்பட்டுள்ளன.

மெய்யெழுத்து

1. வல்லினம்
2. மெல்லினம்
3. இடையினம் என மூவகைப்படும்.

"வல்லெழுத்து என்ப கசடதபற" ( தொல் - எழுத்து - 19)

"மெல்லெழுத்து என்ப ஙஞண நமன" ( தொல் - எழுத்து - 20)

"இடையெழுத்து என்ப யரல வழள" ( தொல் - எழுத்து - 21)

"வல்லலென்று இசைத்தலான் வல்லெழுத்து எனப்பட்டது. மெல்லென்று இசைத்தலானும் மெல்லென்ற மூக்கின் வளியால் பிறத்தலானும் மெல்லெழுத்து எனப்பட்டது. இடைநிகரவாகி ஒலித்தலானும் இடைநிகர்த்தாய மிடற்று வளியால் பிறத்தலானும் இடையெழுத்து எனப்பட்டது" என்று தனது உரையில் இளம்பூரணர் விளக்குவார்.

சுட்டெழுத்து

"அ இ உ அம்மூன்றும் சுட்டு" (தொல் - எழுத்து - 31)

என்பது சுட்டெழுத்தின் எண், பெயர் உணர்த்திற்று.

8. சுட்டெழுத்துக்கள் எவை?

வினா எழுத்து

"ஆ ஏ ஓ அம் மூன்றும் வினா" (தொல் - எழுத்து - 32)

என வினா எழுத்தின் எண், பெயர், உணர்த்தப்பட்டன.

உயிர்மெய்

உயிர்மெய் எழுத்தாவது மெய் முதலாகவும் உயிர் பின்னாகவும் கூடிநிற்கும் எழுத்து

க் + அ = க

த் + உ = து என்றாற் போல்வன

எல்லா மெய்யெழுத்தும் தம் புள்ளியை இழந்து அகர உயிருடன் கூடி ஒலிக்கும் போது, தன்முன்னைய வடிவே வடிவாகப் பெறும். பிற உயிருடன் கூடும்போது வடிவு வேறுபட்டு வரும்.

"***புள்ளி இல்லா எல்லா மெய்யும்***
***உரு உருவாகி அகரமொடு உயிர்த்தலும்***
***ஏனை உயிரோடு உருவுதிரிந்து உயிர்த்தலும்***
***ஆயீரியல உயிர்த்தலாறே***" (தொல் - எழுத்து - 17)

இவ்வாறு வடிவம்பெறும் உயிர் மெய் ஒலிப்பு முறையில் மெய் முதலாகவும் உயிர் ஈறாகவும் ஒலிக்கப்பெறும்.

"மெய்யின் வழியது உயிர் தோன்றும் நிலையே" (தொல்-எழுத்து - 18)

என்பது இதனை விளக்கும்.

உயிர்மெய்யின் கூட்டமானது "பாலும் நீறும் போல உடன் கலந்தன. விரல் நுனிகள் தலைப் பெய்தாற் போல வேறு நின்று கலந்தன அல்ல" என இளம் இளம்பூரணர் உவமை கூறி எடுத்துக்காட்டுவார்.

9. இலக்கணிகள் எதன் அளவை மாத்திரை எனக் கணக்கிடுவர்?

## 2.9. மாத்திரை

இலக்கணிகள் எழுத்தின் அளவை மாத்திரை எனக் கணக்கிடுவர்

***"கண்ணிமை நொடி என அவ்வே மாத்திரை***
***நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறே"*** ( - தொல் - எழுத்து - 7)

இமைத்தலும், விரல் நொடித்தலும் ஆகிய இவை மாத்திரைக்கு அளவு என்பது உரைக்கப்பட்டது.

ஓரளபுடையது குறில்

"அ, இ, உ, எ, ஒ என்ற ஐந்து குறிலும் ஓரளவு" - ஒரு மாத்திரை பெறும் குற்றெழுத்துக்கள்.

ஈரளபுடையது நெடில்

"ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்ற ஏழு நெடிலும் ஈரளவு" - இரு மாத்திரை பெறும் நெட்டெழுத்துக்கள்,

அரையளவு

மெய்யெழுத்தும் சார்பெழுத்தும் அரை மாத்திரை அளவு பெறும்.

***"மெய்யின் அளவே அரையென மொழிப***
***அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே"*** (தொல் - எழுத்து - 11, 12)

உயிர்மெய் அளவு

உயிரின் அளவே உயிர்மெய்க்கு அளவாகும் க் + அ = ஒரு மாத்திரை பெறும். க் ½ மாத்திரை, அ 1 மாத்திரை ஆனால் க 1½ மாத்திரை என ஆகாது. "ஒரு நாழி நீரில் உப்புக் கரைந்தால் ஒன்றரை நாழியாய் மிகாதவாறு போல" என்று நச்சினார்க்கினியர் பொருத்தமாகச் சான்று காட்டுவார்.

கால் அளவு

மகரம் வேறோர் எழுத்தினது ஓசையின்கண் தனி அரை மாத்திரையில் குறுகி ஒலிக்கும். பெரும்பாலும் னகர மெய்யின் பின்னும் வகரத்தின் முன்னும் குறுகும்.

***"அரையளவு குறுகல் மகரம் உடைத்தே***
***இசையின் அருகும் தெரியும் காலை"*** (தொல் - எழுத்து - 13)

மூவளபுடையது

மூவளபுடைய தனி எழுத்து இல்லை. மூன்று மாத்திரையாக ஒலித்தல் - விகாரமாகிய ஈரெழுத்துக்கூடினால் நிகழும் அளபெடையின் போது ஒரு நெடிலும் ஒரு குறிலும் இணையும் நிலையில் மூன்று மாத்திரை பெறும். ஆனால் இயல்பாகிய ஓர் எழுத்து மூன்று மாத்திரை பெறுதல் இல்லை.

இதற்கு நூற்பா தொல்காப்பியத்தில் "மூவளபிசைத்தல் ஓர் எழுத்து இன்றே" (தொல் - எழுத்து - 5) என இடம்பெற்றுள்ளது.

அளபெடை

நீண்ட மாத்திரையை உடைய அளபெடை பெற வேண்டின் மேற்குறித்த ஈரளபுடைய நெடிலையும். ஓரளவுடைய குறிலையும் கூட்டி எழுஉதல் என்பர் புலவர்.

***"நீட்டம் வேண்டின் அவ்அளபுடைய·***
***கூட்டி எழுஉதல் என்மனார் புலவர்"***

(தொல் - எழுத்து - 6) என்பது தொல்காப்பியம்.

மாத்திரைக்குப் புறனடை

இசைப்பாடலில் ஒலிக்கும்போது
உயிர் எழுத்துகளும், மெய்யெழுத்துகளும் தமக்குச் சொன்ன மாத்திரை அளவுகளில் இருந்து நீண்டு ஒலிக்கும்.

"அளவு இறந்து உயிர்த்தலும் ஒற்று இசைநீடலும் உளஎன மொழிய இசையொடு சிவணிய நரம்பின் மறைய என்மனார் புலவர்"

( தொல் - எழுத்து - 33)

என்பது மாத்திரைக்குப் புறனடை பண்டமாற்றிலும் விளிவேற்றமையிலும் மாத்திரை அளவினை மீறி ஒலிக்கும்.

## 2.10. உருவம் (வடிவம்)

எல்லா எழுத்திற்கும் தொல்காப்பியர் வரி வடிவம் உரைக்கவில்லை. மகரம் மெய்யெழுத்து, எகர , ஒகரம் ஆகியவற்றுக்கு வடிவம் கூறியுள்ளார்.

மகரம்

பகரமெய்க்கும் மகரமெய்க்கும் உள்ள வரிவடிவ வேறுபாட்டைத் தொல்காப்பியர் உணர்த்துகிறார். புறத்துப் பெறும் புள்ளியோடுப்) உள்ளே யும் புள்ளி பெறும்.

"உட்பெறு புள்ளி உருவாகும்மே" (தொல் - எழுத்து - 14)

கி.மு. 3-ம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டில் பப் என்பன முறையே ப, ம என்னும் ஒலிகளைக் குறிக்கும். ம என்பதில் நடுவில் உள்ளே கோடுதான் தொல்காப்பியம் கூறிய உட்பெறு புள்ளி என்று திரு. நாகசாமி அவர்கள் தம் கல்வெட்டியலில் குறிப்பிடுகின்றார். இந்நூற்பா, பகர மகர வேற்றுமையைக் குறிப்பிடவில்லை. இதற்கு முன்னைய நூற்பா, அரையளவு குறுகல் மகரம் உடைத்தே" என்று மகரக் குறுக்கம் பற்றிக் கூறுவதால் இந்நூற்பாமகரக் குறுக்கத்தின் வடிவை விளக்குவது என்றும் கொள்வர். மகரக் குறுக்கம் போன் என்று உள்ளே புள்ளிவைத்துக் குறிக்கப்படும் என்பது அவர் கருத்து.

மெய்

"மெய் எழுத்துக்கள் புள்ளி பெற்று நிற்கும் மெய்யின் இயற்கை புள்ளியோடு நிலையல்" (தொல் - எழுத்து - 16)
மெய் எழுத்துக்கள் எல்லாம் புள்ளி வைத்து எழுதப்படும்.

எகர ஒகரம்

எகர ஒகரங்களும் மெய்போலப் புள்ளி பெறும்.

எ் ஒ்

"எகர ஒகரத்தியற்கையும் அற்றே" (தொல் - எழுத்து - 16)

எனவே புள்ளி இன்றி எழுதினால் ஏஓ என்று பொருள்படு என்பதாயிற்று. ஏ, ஓ என்று வடிவச் சீர்திருத்தம் செய்தவர் வீரமாமுனிவர் என்று கூறுவர்.

"நேரிழையர் கூந்தல் ஓர் புள்ளி பெற நீள் மரமாம் நீர் நிலையோ புள்ளி பெற நெருப்பாம்".

என்பது பாடல்

ஓதி - ஓதிமரம்

ஓதி - கூந்தல்

எரி - நெருப்பு

ஏரி - நீர்நிலை

உயிர்மெய்

அகரத்தோடு மெய் கூடி உயிர் மெய்யாகும்போது மெய் புள்ளி நீங்கி முன்னைய வடிவே பெறும். ஏனைய உயிர்களோடு மெய் கூடும்போது அவ்வுயிர் மெய்கள் உருவம் திரிந்து வரும். கோடு, விலங்கு போன்றன பெற்ற வடிவு வேறுபட்டு வரும்.

## 2.II. மயக்கம்

10. மயக்கம் என்பது யாது?

அடுத்ததாக நாம் காணவிருப்பது மயக்கம் பற்றியதாகும். மெய்யெழுத்து தம்முள் கூடுவது இது.

மெய்யொடு மெய் கூடுதல் மயக்கம் எனப்படும். மெய்யொடு மெய் சேருவதை சையோகம் என வடநூலார் கருதுவர் மெய்ம்மயக்கம் இரு வகையாகக் கூறப்படும்.

1. உடனிலை
2. மெய்ம்மயக்கு

***"அம் மூவாறும் வழங்கியல் மருங்கின்***
***மெய்ம்மயக்கு உடனிலை தெரியும் காலை"*** (தொல் - எழுத்து - 22)

மெய்ம்மயக்கம்

1. ட, ற, ல ள முன்னர்க் க, ச, ப மயங்கும் வெட்கம், கற்க, செல்க, கொள்க, வெட்சி, பொற்சிலை, வல்சி (உணவு) நீள் சிறை, திட்பம், கற்பு, கொல்படை, நீள் பகல்.
2. ல, ள, முன்னர் ய, வ மயங்கும் கொல்யானை, வெள்யாறு, செல்வம், கள்வன்.

   அவற்றுள்

   லளஃகான் முன்னர் யவவும் தோன்றும் (தொல் - எழுத்து - 24)
3. ங, ஞ, ண, ந, ம ன முன்னர் க, ச, ட, த, ப, ற மயங்கும், தெங்கு, மஞ்சு, வண்டு பந்து கம்பு, கன்று.

   "ஙஞண நமன என்னும் புள்ளி முன்னர்த்

   தத்தம் மிசைகள் ஒத்தன நிலையே" (தொல் - எழுத்து - 25)

4. ண, ன, முன், க, ச, ஞ, ப, ம, ய வ மயங்கும்

வெண்கலம், எண்சான், வெண்ஞாண், வெண்பல், கண்மை, மண்யாறு, மண் வளம்.

புன்கண், புன்செய், பொன்ஞாண், அன்பு, வண்மை, இன்யாழ், புன்வரகு.

"அவற்றுள்

ணன, கான் முன்னர்க் க ச ஞ ப ம ய வ ஏழும் உரிய"

(தொல் - எழுத்து - 20)

5. ஞ, ந, ம, வ முன் யகரம் மயங்கும் உரிஞ்யாது, பொருந் யாது, திரும் யாது, தெவ் யாது.

"ஞ ந ம வ என்னும் புள்ளி முன்னர்

யஃகான் நிற்றல் மெய் பெற்றன்றே" (தொல் காப்பியம் எழுத்து 27)

6. மகரத்தின் முன் வகரம் மயங்கும் நிலம் வலிது.

மஃகான் புள்ளி முன் வவ்வும் தோன்றும் (தொல் - எழுத்து 28)

7. ய் ர் ழ் முன் மொழி முதல் எழுத்துக்களும் ஙகரமும் மயங்கும். வேய், வேர், வீழ் என்பவனவற்றோடு சிறிது, பெரிது, தீது, ஞான்றது, நீண்டது, யாது, வலிது என்பனவற்றைக் கூட்டுக. வேய்ஙனம், வேர்ஙனம், வீழ்ஙனம் எனவும் வரும்.

"யரழ என்னும் புள்ளி முன்னர்

முதலாகு எழுத்து ஙகரமோடு தோன்றும்" (தொல் - எழுத்து - 29)

<u>உடனிலை மயக்கம்</u>

ரழ என்ற மெய் தவிர எஞ்சிய எல்லா மெய்யும் தம்மொடு தாம் மயங்கும்.

காக்கை, எங்ஙனம், பச்சை, மஞ்சை, பட்டை, பண்ணை, தத்தை, செந்நெல், அப்பம், அம்மி, பொய்யர், அல்லி, செவ்வி, கள்ளி, காற்று கன்னல்

"மெய்நிலை சுட்டின் எல்லா எழுத்தும்

தம்முன் தாம் வரூஉம் ரழ அலங்கடையே" (தொல் - எழுத்து - 30)

மெய்ம்மயக்கத்தை நினைவில் இருத்திக்கொள்ள கீழ்க்கண்டவாறு தொகுத்துக் கொள்ளலாம்.

1. ர,, ழ - தம்மொடு தாம் மயங்குவதில்லை. - பிறவொடு மயங்கும்
2. க, ச, த, ப, தம்மொடு தாம் மயங்கும் - பிறவொடு மயங்குவதில்லை.
3. ட, ற, ங, ஞ, ண, ந, ம, ய, ல, வ, ள - தம்மொடும் பிறவொடும் மயங்கும்.
4. மெல்லினத்தைத் தொடர்ந்து தத்தம் வல்லினம் வரலாம்.
5. யகரம் ஞ், ந், ம், ண், ன், முதலியவற்றின் பின்னரும், ளகரம் ம், ண், ன், முதலியவற்றின் பின்னரும் வரும்.
6. அன்புள்ள மாணவர்களே!

   நூல் மரபு பெயர்க்காரணம், முதல் எழுத்து சார்பெழுத்து என்ற பாகுபாடு பற்றி அறிதல் இன்றியமையாதனவாகும்.

ஆய்தம் என்பது இலக்கண ஆசிரியரின் கற்பனை என்று சொல்லப்படுவனவற்றை மேலும் சிந்தியுங்கள். எழுத்துக்களை இலக்கணியும் உரையாசிரியர்களும் எவ்வாறு பாகுபடுத்துகின்றனர் என்பதைப் பதிவு செய்யுங்கள்.

மாத்திரை, வடிவம், மயக்கம், ஆகியன பத்திக் கேள்விகளில் கேட்கக் கூடும். ஒவ்வொரு பாடத்தையும் நீங்கள் படித்து முடித்ததும் அதில் இணைக்கப்பட்டுள்ள பத்தி வினா, கட்ரை வினா ஆகியவற்றைக் குறித்துக்கொண்டு அதற்கு விடைக்குறிப்பைத் தயார் செய்து உடனுக்குடன் வைத்துக்கொண்டு தேர்வு நேரத்தில் மீண்டும் ஒருமுறை நினைவில் இருத்துங்கள். அனைவருமே முதல் வகுப்பில் தேர்ச்சிபெற்றுவிடலாம்.

வாழ்த்துக்கள்!

## I சுயதிறனறி வினாவிற்குரிய விடைகள்

1. நூல் மரபாகும் துணைக்கு வேண்டுவனவற்றைத் தொகுத்து உணர்த்தினமையால்
2. மொழிமரபு
3. இரண்டு முதல் எழுத்து, சார்பெழுத்து
4. சார்பெழுத்துக்கள்
5. தனி மொழியிலும் புணர்மொழியிலும்
6. தனி நிலை, அஃகேனம், முப்பாற்புள்ளி
7. உயிர், மெய்
8. அ இ உ என்பன
9. எழுத்தின் அளவை
10. மெய்யெழுத்து தம்முள் கூடுவது.

**பயிற்சி வினாக்கள்**

## II குறு வினாக்கள்

1. எழுத்தின் வகை தொகைகளை எடுத்துரைக்க.
2. குற்றியலுகரம், குற்றியலிகரம் குறித்து எழுதுக.
3. ஆய்த எழுத்து பற்றிக் கருத்துரைக்க.
4. எழுத்துகளின் மாத்திரைபற்றி விளக்கு.
5. எழுத்துக்களின் உருவம் பற்றிக கூறுக.

## III பெரு வினாக்கள்

1. நூல் மரபில் இடம்பெறும் செய்திகளை விவரிக்க.
2. சார்பெழுத்தின் வகைகளை விவரிக்க.
3. முதல் எழுத்துக்களை விளக்கு.
4. எழுத்துகளின் மாத்திரை, உருவம் பற்றி விளக்குக.

## அலகு - 3

# மொழி மரபு

3.1 உரையாசிரியர்தம் விளக்கம்

3.2 மொழி மரபுச் செய்திகள்

3.3 குற்றியலுகரம்

3.4 குற்றியலிகரம்

3.5 ஆய்தம்

3.6 அளபெடை

3.7 (சொல்) மொழி

3.8 எழுத்தின் இயக்கம்

3.9 மொழி முதல் எழுத்துக்கள்

3.10 மொழியிடை எழுத்துக்கள்

3.11 மொழியிறுதி எழுத்துக்கள்

3.12 போலி

# மொழி மரபு

தொல்காப்பியம் பற்றிய பொது சிறப்புச் செய்திகளையும், நூல் மரபு குறித்துத் தொல்காப்பியர் கூறும் கருத்துக்களையும் முதலிரு பாடங்களில் கண்டு தெளிந்தோம். இனி அதன் தொடர்ச்சியாக மொழி மரபு குறித்துத் தொல்காப்பியர் கூறும் கருத்துக்களை இம்மூன்றாம் பாடத்தில் காண இருக்கிறோம்.

**நோக்கம்:**

மாணவர் எழுத்துக்கள் இணைந்து உருவாகும் மொழி பற்றி அறிந்துகொள்வர்.

**துணைமை நோக்கம்:**

மொழி உருவாக்கத்தின்போது எழுத்துகள் தம்முள் தொடரும் முறைகளைத் தெரிந்துகொள்கிறான்.

தெடர்ந்து மொழியின் செயல்பாடுகள் இப்படித்தான் அமையவேண்டும் என்பதனையும் புரிந்துகொள்ள முயலுகின்றனர்.

## 3.1 உரையாசிரியர்தம் விளக்கம்

"மொழிகளுக்கு எழுத்தான் வரும் மரபு உணர்த்தினமையின் மொழி மரபு எனப்பட்டது" என்பார் இளம்பூரணர்.

1. மொழி மரபென்று ஆனது எவ்வாறு?

**நச்சினார்க்கினியர்**

"எழுத்துக்கள் தம்முள் தொடருமாறும் அவ்வெழுத்துகளால் ஆகும் மொழியது மரபும் உணர்த்தினமையின் மொழி மரபாயிற்று" என்பார் நச்சினார்க்கினியர்.

**சிவஞானமுனிவர்**

"மொழி மரபிற் கூறும் விதியெல்லாம் நூன் மரபின் ஒழிபு" என்பது சிவஞான முனிவர்தம் கொள்கை (சொல் - சூத்திர விருத்தி ப - 30)

தொல்காப்பியர் இயல்கட்குப் பெயரிட்ட வகை நோக்குதற்குரியது. நூல் மரபில் முதல் எழுத்துக்களை விளக்குகின்றனர். சார்பெழுத்துக்களைச் சுட்டிச் செல்கின்றனர். சார்பெழுத்துகள் தனித்து வருவன அல்ல. மொழியைச் சார்ந்து வருவன. ஆதலால் மொழி மரபில் அவற்றை விளக்கி உரைக்கின்றார். இதனைச் சிவஞான முனிவர் "இவை மொழி கட்டுப்படுத்திக் காட்டவேண்டுதலின் ஈண்டு வையாது மொழி மரபில் வைத்தார்" என்று தெளிவு படுத்துவர்.

மேலும் சிவஞானமுனிவர் நூல் மரபின் ஒழிபே மொழி மரபு என்பதைப் பின்வருவம் கருத்தினால் நிறுவ முற்படுகிறார்.

1. குற்றியலுகரம் என்ற நூல் மரபு நூற்பாவின் ஒழிபுக் கருத்துக்கள் குற்றியலிகரம் நிற்றல் வேண்டும் முதலாக உள்ள நூற்பாக்களில் உணர்த்தப்படுகின்றன.

2. நீட்டம் வேண்டின் என்று நூல் மரபில் சுட்டப்பட்ட அளபெடை இங்கு மொழி மரபில் விளக்கமாகப் பேசப்படுகிறது.

3. ஆ, ஈ, ஊ, ஏ என ஈரளவிசைக்கும் நெட்டெழுத்துக்கள் நூல் மரபில் உணர்த்தப்பட்டன. அவை ஓரெழுத்து ஒரு மொழியானது இங்கு மொழி மரபில் உணர்த்தப்படுகிறது.

4. "ன கார இறுவாய் என நூல் மரபில் மெய்யெழுத்து உணர்த்தினார். மெய்யின் இயக்கம் அகரமொடு சிவனும்" என அவைபயின்றுவரும் விதத்தை மொழி மரபில் உணர்த்தினர்.

எனவே மேற்கண்டவற்றில் நூல் மரபின் ஒழிபியலே மொழி மரபு என்பதை உணரலாம்.

## 3.2 மொழி மரபுச் செய்திகள்

மொழி மரபில் பின்வரும் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன.

| | | நூற்பா |
|---|---|---|
| 1. குற்றியலுகரம் | - | (36 - 37 |
| 2. குற்றியலிகரம் | - | (34 - 35) |
| 3. ஆய்தம் | - | (38 - 40) |
| 4. அளபெடை | - | (41 - 42) |

| | | | நூற்பா |
|---|---|---|---|
| 5 | எழுத்து மொழியாதல் | - | (43-45, 59, 53, 57) |
| 6. | எழுத்தின் இயக்கம் | - | 46 |
| 7. | மொழி முதல் எழுத்து | - | (56 - 68) |
| 8. | மொழி இடை எழுத்து | - | (47-48, 51-52) |
| 9. | மொழி இறுதி எழுத்து | - | (46 - 69, 82) |
| 10 | போலி | - | (54-56, 58-69) |

தொல்காப்பியர் குற்றியலுகரம், குற்றியலிகரம் இரண்டையும் நூல் மரபில் சுட்டினார் என்றாலும் அவற்றின் இடமும் பற்றக்கோடும் முதலி யனவற்றை மொழி மரபிலேயே விளக்க முற்படுகிறார்.

## 3.3 குற்றியலுகரம்

"நெட்டெழுத்தின் பின்னும் தொடர் மொழியின் இறுதியிலும் குற்றியலுகரம் வல்லெழுத்து ஆறன்மீதும் ஊர்ந்து நிற்கும்.

நெட்டெழுத்தின்பின் : நாடு
தொடர்மொழி இறுதியில் : வரகு, தென்கு, எஃகு, கொக்கு

"நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றியலுகரம் வல்லாறு ஊர்ந்தே" (தொல் - எழுத்து - 36)

2. புணர்மொழியல் குற்றியலுகரம் எவ்வாறு ஒலிக்கும்?

### புணர்மொழியில் குற்றியலுகரம்

குற்றியலுகரம் குறுகி ஒலித்தல்

குற்றியலுகரம் புணர்மொழி இடையே வரினும் குறுகியே ஒலிக்கும் என்பது,

"இடைப்படின் குறுகும் இடனுமாருண்டே
கடப்பாடு அறிந்த புணரியலான". (தொல் - எழுத்து - 36)

என்பதால் விளக்கப்படும் "குறுகும்" என்பது "வந்து நிற்றல்" என்ற பொருளையும் தரும்.

செக்குக்கணை, சுக்குக்கோடு என வருவனவற்றால் அது பெறப்படும்.

இதற்கு நச்சினார்க்கினியார், குற்றியலுகர புணர்மொழி இடைப்பாட்டின் அது தனக்குரிய அரை மாத்திரையினின்றும் மேலும் குறுதி ஒலிக்கும். செக்குக்கணை, சுக்குக்கோடு என்பவற்றில் குற்றியலுகரம் அரை மாத்திரையில் குறுகி ஒலித்தன. இது சிறுபான்மை நிகழும் என்று உரை கூறுவார்.

## 3.4. குற்றியலிகரம்

தனி மொழியில் குற்றியலிகரம்

"மியா" என்பது உரையசைச்சொல். அதில் யா என்னும் சினை மீது ஒற்றினை ஊர்ந்து நிற்கும் இகரம் குற்றியலிகரமாகும்.

மியா என்னும் சொல்லே இடமாகும். மகரம் பற்றுக்கோடாம் 'யா' எனும் சொல்லுறுப்பு குற்றியலிகரம் தோன்றுவதற்கு ஒரு சார்பு" என்பது இளம்பூரணர் கருத்து.

"கேள்" என்பது உரையசைச் சொல். மியா என்பது சார்ந்து நின்ற இடைச்சொல், யா அதற்கு உறுப்பு என்பது நச்சினார்க்கினியர் கருத்து. இது ஒருமொழிக் குற்றியலிகரம் ஆகும்.

***"குற்றியலிகரம் நிற்றல் வேண்டும்***
***யாவென் சினை மிசை உரையசைக் கிளவிக்கு***
***ஆவயின் வருஉம் மகரம் ஊர்ந்தே"*** (தொல் - எழுத்து - 34)

என நூற்பா கூறுகிறது.

### புணர்மொழியில் குற்றியலிகரம்

இருமொழி தம்முள் புணரும் போது குற்றியலிகரம் வருதல் உண்டு. இருமொழியுள் நிலை மொழி குற்றியல் உகர ஈறாகவும், வருமொழி யகர முதலாகவும் இருத்தல் வேண்டும். குற்றியலிகரப் புணரியலுள் இச்செய்திகள் விரிவாகப் பேசப் பெறுகின்றன.

***"புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே***
***உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்"*** (தொல் - எழுத்து - 35)

எனச் சுட்டுவர் தொல்காப்பியர்

பின்னர் குற்றியலுகரப் புணரியலில் யகரம் வரு வழி இகரம் குறுகும் உகரக் கிளவித் துவரத் தோன்றாது (தொல் - எழுத்து - குற்றியலுகரம் - 5) என விளக்கமாக உரைப்பர்.

வீடு + யாது - வீடியாது

குரங்கு + யாது - குரங்கியாது

இங்கு யகரம் இடம், உரகம் சார்ந்த வல்லெழுத்து - பற்றுக்கோடு

## 3.5. ஆய்தம்

ஆய்தம் மொழியில் எவ்வாறு பயின்று வருகின்றது என்பதனைக் காண்போம்.

<u>ஆய்த எழுத்து</u>

1. தனி மொழியுள் வரும்.
2. புணர்மொழியுள் வரும்
3. நிறம் ஓசை பற்றி வரும்.

3. ஆய்தம் எவற்றின் மேல் வரும்?

### தனி மொழியில் ஆய்தம்

குற்றெழுத்தின் முன்னர் உயிரொடு சேர்ந்த வல்லெழுத்து ஆறன் மேலும் ஆய்தம் வரும்.

"குற்றியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரோடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே"

( தொல் - எழுத்து - 38)

குறியதன் முன்னர் வல்லாறன் மிசை என்பது இடம், இரண்டு எழுத்திற்கும் இடையே நிற்கும் என்பதை உணர்த்தவே குறியதன் முன்னர் என்றும், வல்லாறன் மிசைத்து என்றும் தெளிவு படுத்துகிறார். இது உயிரில்லை. ஆதலால் இதற்குப் பற்றுக்கோடு இல்லை. என்பார் இளம்பூரணார்.

- எஃகு, கஃசு, கஃடு, அஃது, கஃபு, பஃறி எனவரும் இடங்கள் சான்றாகின்றன.

இவ் ஆய்த ஒலி வல்லெழுத்து ஆறன் மேலதாய் நின்று அவற்றின் வல்லோசையை மெலித்து நிற்பதாகும். இதனை உணர்த்திய பா. வே. மாணிக்க நாயகர் அவர்கள், இனவெழுத்தின் துணையால் பிறமொழியில் வழங்கும் எல்லா ஒலிகளையும் தமிழ்மொழிகள் குறித்து வழங்குதல் கூடும் என்று ஆராய்ந்து விளக்கியுள்ளார். இவ்வெழுத்தின் துணையால் "காஃபி" என எழுத வழி காட்டியவரும் அவரே.

## புணர்மொழியில் ஆய்தம்

நிலைமொழி ஈறு, வருமொழி முதலொடு புணரும் இடத்தில் ஆய்தம் தோன்றும்.

"ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும்" (தொல் - எழுத்து - 39) என்பது தொல்காப்பியம். இசைமை என்பது ஆய்த ஒலி என்று இளம்பூரணர் உரை எழுதுவார்.

பல் + துளி - பஃறுளி

ஆனால் இப்புணர்ச்சி விதிகள் இங்கு விளக்கிஉரைக்கப்படவில்லை. புள்ளி மயங்கியலில் இவ்விதிகள் கூறப்பட்டுள்ளன.

***"தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்***
***புகரின்று என்மனார் புலமையோரே"*** (தொல் - எழுத்து - 369)

***"ஆய்தம் நிலையலும் வரைநிலை அன்றே***
***தகரம் வருஉம் காலை யான"*** (தொல் - எழுத்து - 369)

"வேற்றுமை அல்வழி ஆய்தம் ஆகும்" (தொல் - எழுத்து - 399)

"வேற்றுமை அல்வழி ஆய்தம் ஆகும்" (தொல் - எழுத்து - 379)

என்பன அவையாகும்.

கல் + தீது - கஃறீது - லகரம் ஆய்தமாதல்

முள் + தீது - முஃடீது - ளகரம் ஆய்தமாதல்

அவ் + கடிது - அஃகடிது - வகரம் ஆய்தமாதல்

இவற்றில் ல, ள, வ என்ற மெய்களோடு ஆய்தம் உறழ்ந்து நிற்கிறதா அல்லது அம்மெய்களே ஆய்தமாகத் திரிந்து நிற்கின்றனவா என்ற வினா எழும்.

## நிறம், ஓசை பற்றி ஆய்தம்

நிறமும் ஓசையும் பற்றி வரும் ஆய்தத்தைத் தொல்காப்பியர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> ***"உருவினும் இசையினும் அருகித்தோன்றும்***
> ***மொழிக் குறிப்பெல்லாம் எழுத்தின் இயலா***
> ***ஆய்தம் அஃகாக் காலை யான"*** (தொல் - எழுத்து - 40)

ஒரு பொருளினது உருவத்தைக் கூறுமிடத்தும், ஓசையை உரைக்குமிடத்தும், சிறுபான்மையாய்த் தோன்றும் குறிப்பு மொழிகள்.

ஆய்த எழுத்தால் குறிக்கப்படும்

கஃறென்பது - நிறம்

சுஃறென்பது - ஓசை

"இதற்கு இளம்பூரணர் ஓசையையோ, நிறத்தையோ குறித்து வரும் அவ் ஆய்தம் சுருங்கி அரை மாத்திரையாய் ஒலிக்காமல் நீட்டி ஒலிக்கப்படினும் அவை எழுத்தைப் பெறா" என விளக்கமுரைப்பார். அதாவது நிறம் ஓசை பற்றி அலபெடுத்த போதும் அதனைப் பல ஆய்தப் புள்ளிகளால் எழுதிக்காட்டவேண்டியதில்லை என்பது அவர் கருத்து.

ஆனால் நச்சினார்க்கினியரோ "இது எதிரது போற்றல் உத்தியாகும்" என்பார். செய்யுள் இயலைக் கருதி நின்றது இச்சூத்திரம் செய்யுளியலில்,

"கஃஃஃ றென்றும் கல்லதர் அத்தம்"

"சுஃஃஃறென்னும் தண் தோட்டுப் பெண்ணை"

என ஆய்தம் ஒரு மாத்திரை பெற்றுச் சீர்நிலை எய்தும் ஆண்டுப் பெறுகின்ற ஒரு மாத்திரைக்கு ஈண்டு விதி கூறினார் எனக் கருதுவர்.

4. எவ்வெழுத்துக்கள் அளபெடுக்கும்?

### 3.6. அளபெடை

செய்யுளில் ஓசை குன்றும்போது நெட்டெழுத்துகள் அளபெடுத்து இசை நிறைப்பதுண்டு.

நெட்டெழுத்துகளின் பின் அவற்றிற்குப் பிறப்பாலும், புணர்ச்சியாலும் ஓசையாலும் இனமொத்த குற்றெழுத்துகள் வந்து அளபெடுக்கும் ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்பன ஓரெழுத்து ஒருமொழிகள்.

இவை தனித்து நின்றும் அளபெடுக்கும். இதை இளம்பூரணார் "அளபெடை எழுத்தானாய மொழி" எனச்சுட்டுவர்.

குன்றிசை மொழிவயின் நின்று இசை நிறைக்கும்.

நெட்டெழுத்து இம்பர் ஒத்த குற்றெழுத்தே (தொல் - எழுத்து - 4)

என்பது தொல்காப்பியம்.

இதனால் நெட்டெழுத்துக்குரிய இரண்டு மாத்திரைக்கு மேற்பட்ட அளபெடைக்குரிய ஓசையினைத் தருவது அங்கு நிற்கும் குற்றெழுத்தே என்பது பெறப்படும்.

"மூவளபு இசைத்தல் ஓரெழுத்து - இன்றே"

என்று முன்னர்க் கூறிய விதிக்கு முரணாகாமல் இவ்விதியை அமைத்துள்ளார் தொல்காப்பியர்.

"மூன்று மாத்திரையாக ஒலித்தல் ஓர் எழுத்திற்கு இல்லை" என்றவர். இங்கு அளபெடையில் நெட்டெழுத்தின் இரு மாத்திரை ஓசைக்கு மேற்பட்ட ஒரு மாத்திரை ஓசையைப் பின்னர்க் கூறிய குற்றெழுத்து இசைத்தது என்று கூறியுள்ளமை கருதத்தக்கது.

ஐ. ஒள அளபெடுத்தல்

ஒத்த குற்றெழுத்து இல்லாத ஐ. ஒள என்பனவற்றின் முன் இ. உ என்பன முறையே நின்று அளபெடுக்கும்.

ஐ ஒள என்னும் ஆயீரெழுத்திற்கு
இகர உகரம் இசை நிறைவு ஆகும். (தொல் - எழுத்து - 42)

## 3.7 மொழி (சொல்)

எழுத்துக்கள் மொழியாக மாற்றம் பெறுவதனை மூவகையாகப் பகுப்பார் தொல்காப்பியர்.

5. மொழியாக மாற்றம் பெறும் எழுத்துக்கள் எத்தனை வகை?

1. ஓரெழுத்து ஒருமொழி
2. ஈரெழுத்து ஒரு மொழி
3. தொடர் மொழி

ஓரெழுத்தொரு மொழி

ஓர் எழுத்தே நின்று ஒரு மொழியாகப் பொருள் தருவது ஓர் எழுத்து ஒருமொழி எனப்படும். நெட்டெழுத்து ஏழும் தனித்தனியே நின்று ஓரெழுத்து ஒரு மொழியாகத் திகழும்.

ஆ - பசு　　ஊ - ஊன்

ஈ - கொடு　　ஐ - தலைவன்

ஏ - அம்பு　　ஓ - மதகு நீர் தாங்கும் பலகை

இவை தம்மை உணர்த்தி நின்றவழி எழுத்தாம். பொருள் உணர்த்திய வழிச் சொல்லாம் என்பர் நச்சினார்க்கினியர்.

நெட்டெழுத்து ஏழும் ஓரெழுத்து ஒரு மொழி ( தொல் - எழுத்து - 43).

குற்றெழுத்துக்கள் ஐந்தும் ஓரெழுத்து ஒரு மொழியாய் வந்து பொருள் உணர்த்துவன அல்ல. அ, இ, உ, சுட்டாக வரும். எகரம் வினாவாக வரும். ஆனால் அவை முழுப் பொருளைத் தருவதில்லை. ஆதலால் அவை மொழி நிறையில அவை இடைச் சொற்களாக மதிக்கப்பெறும்.

"குற்றெழுத்து ஐந்தும் மொழி நிறைபு இலவே"

(தொல் - எழுத்து - 43)

உயிர்க் குறில்கள் தனித்து நின்று மொழியாவதில்லை. ஆனால் அவை மெய்யோடு இணைந்து நின்று மொழி ஆகும்.

(எ-டு) து, நொ - என்பன

ஈரெழுத்து ஒரு மொழி

இரண்டெழுத்தான் ஆகிய மொழி ஈரெழுத்து ஒரு மொழி எனப்படும்.

தொடர் மொழி

இரண்டிறந்த பல எழுத்துக்களால் ஆகிய மொழி தொடர் மொழி எனப்படும்

*"ஓரெழுத்து ஒரு மொழி ஈரெழுத்து ஒருமொழி*

*இரண்டு இறந்து இசைக்கும் தொடர் மொழி உளப்பட*

*மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே"*

(தொல் - எழுத்து - 45)

என்ற நூற்பா இவற்றை விளக்கும்.

தொடர்மொழியில் எழுத்தின் தன்மை

எழுத்துக்களை மொழியில் சேர்த்துக்கூறினும், தனித்தனியே கூறினும் அவை தத்தம் மாத்திரை இயல்பு ஆகியவற்றில் வேறுபடாது திகழும். எடுத்தல், படுத்தல், முதலிய ஓசை வேற்றுமையிடத்தும் எழுத்தின் தன்மை திரியாது என்பார் இளம்பூரணர்.

6. சேர்த்துக் கூறினும் தனியே கூறினும் எழுத்துக்கள் மொழியில் எவ்வாறு இருக்கும்?

***"மொழிப்படுத்து இசைப்பினும் தெரிந்து வேறு இசைப்பினும்***
***எழுத்தியல் திரியா என்மனார் புலவர்"*** (தொல் - எழுத்து - 53)

இங்கு எழுத்தியல் திரியா என்றது மொழியிடையே வரும் முப்பது முதல் எழுத்துகளை மட்டுமே குறிக்கும்.

மொழியிடையில் ஐ

மொழியில் இடம் பெறினும், எழுத்துத் தன் இயல்பில் திரிவதில்லை என்பதற்கு ஒரு புறனடையாக ஐகாரம் திகழ்கிறது. மொழியில் வரும்போது ஐகாரம் ஒரு மாத்திரையாயக்குறுகி ஒலிக்கும்.

***"ஓரளபாகும் இடனுமாருண்டே***
***தேரும் காலை மொழி வயினான"*** (தொல் - எழுத்து - 57)

(எ.டு) இடையன், குவளை.

இவ்விதி ஐகாரத்திற்கு மட்டுமே உரித்து எனவும், இதுவும் மொழியிடையிலும், இறுதியிலும் மட்டுமே நிகழும் எனவும், இது சிறுபான்மை எனவும் இளம்பூரணர் கருதுவர். நச்சினார்க்கினியரோ, ஐகாரம் மொழிக்கு முதல் இடை, கடை என மூவிடத்தும் குறுகும் எனவும் ஔகாரமும் இவ்வாறு மொழி முதலில் குறுகும் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

தொடர்மொழி இயல்பு

தொடர்மொழி அமைப்பில் ர, ழ ஆகிய மெய்களைப் பற்றிக் கூறுகையில் தொல்காப்பியர் ஒரு விதி கூறியுள்ளார். உயிர்எழுத்துக்களில் குறில், நெடில் என்ற வேறுபாடு மாத்திரை வேறுபாட்டால் அமைவதாகும். தொடர் மொழிக் கீழ் நின்ற ர, ழ என்ற மெய்களை (அவர், அகழ்) நெட்டெழுத்தின் கீழ் நின்றவையாகக் கொள்ள வேண்டும். புலவர் என ஈரெழுத்தின் மிக்கு நின்றவற்றையும் தன்னின முடித்தலால் நெடிற்கீழ் ஒற்றாகக் கொள்ள வேண்டும் என்று இளம்பூணரர் உரைப்பர்.

*"குறுமையும் நெடுமையும் அளவிற்கோடலின்*
*தொடர் மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல"*

(தொல் - எழுத்து - 50)

## 3.8. எழுத்தின் இயக்கம் (தனிமெய்)

தனிமெய்களைச் சுட்டும்போது அவை அகரத்தோடு பொருந்தியே கூறப்படும்.

"மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்"

(தொல் - எழுத்து - 46)

<u>மொழி முதல் இடை கடை எழுத்துக்கள்</u>

ஒன்றையொன்று தொடர்வதில் ஒவ்வொரு மொழிக்கும் குறித்ததொரு மரபு உண்டு. இதனை மொழி வழங்கும் நெறி எனவும் கூறுவர்.

## 3.9 மொழிமுதல் எழுத்துக்கள்

1 பன்னிரண்டு உயிர்களும் மொழி முதலாகும். உயிரோடு கூடியநிலையில் மெய் எழுத்தும் மொழி முதலாகலாம். ஆனால் எல்லா மெய்யும் எல்லா உயிரோடும் கூடி மொழி முதலாவதில்லை.

"பன்னீர்ருயிரும் மொழி முதலாகும்" (தொல் - எழுத்து - 59)

"உயிர்மெய் அல்லன மொழி முதல் ஆகா" (தொல் - எழுத்து 60)

என்பவை தொல்காப்பியர் விதி.

(எ-டு) அவை, ஆசை, இமயம், ஈகை, உரம், ஊக்கம், எவை, ஏற்றம், ஐவர், ஒருமை, ஓவியம், ஔடதம்.

2. க த ந ப ம என்ற மெய்யெழுத்துக்கள் எல்லா உயிரோடும் சேர்ந்து மொழி முதலில் வரும்.

<u>ககரம் :</u> கதிர், காலை, கிளை, கீற்று. குமரி, கூடி, கெடுமதி, கேடு கைதை, கோமாதா, கௌவை.

தகரம் : தலைமை, தாவரம், திடம், தீர்ப்பு, துணிவு, தூமணிமாடம், தெம்மாங்கு, தேவாரம், தையல், தொண்டி, தோவாளை, தௌவை.

நகரம்: நந்து, நாவல், நிறம், நீலம், நுகத்தடி, நூல், நெய்தல், நேற்று, நைவளம், நொச்சி, நோக்கம், நௌவி

பகரம்: பரிவு, பாடல், பிடி, பீடம், புகழ், பூவனம், பெடை, பேடு, பைதல், பொன், போராடு, பௌவம்.

மகரம் : மனது, மாயம், மின்னல், மீன்பார்வை, முற்றம், மூவாமருந்து, மென்மை, மேதாவி, மையல், மொழி, மோதகம், மௌவல்.

***"க த ந ப ம எனும் ஆவைந்தெழுத்தும்***
***எல்லா உயிரோடும் செல்லுமார் முதலே"*** (தொல் - எழுத்து - 61)

3. சகரம் :

***"சகரக்கிளவியும் அவற்றோரற்றே***
***அஐ ஔ எனும் மூன்றலங்கடையே"***

(தொல் - எழுத்து - 62)

என்ற நூற்பாவுக்கு பொருள் காண்பதில் கருத்து வேறுபாடு உண்டு. ஏனெனில் சகரமானது அ, ஐ, ஔ என்ற மூன்று உயிர்கள் தவிர பிற உயிர்களோடு மொழி முதல் ஆகும் என்ற கருத்துக்கு மாறாகச் சகரம் மொழி முதலாக பல சொற்கள் தமிழில் வழக்கில் உண்டு. சான்றாக சட்டி, சமழ்ப்பு, சழக்கு, சங்கு, சடங்கு என்பவை. இதனால் ஏடுபெயர்த்து எழுதினவரின் பிழையாக இது இருக்கலாம் என்று கருதுவாரும் உண்டு.

4. வரகம்

உ, ஊ, ஒ, ஓ நான்கும் உயிரும் வகரத்தோடு வருவதில்லை.

***"உ ஊ ஒ ஓ என்னும் நான்கு உயிர்***
***வ என் எழுத்தோடு வருதல் இல்லை"*** (தொல் - எழுத்து - 63)

எ.டு - வளை, வாளி, விளரி, வீடு, வெள்ளி, வேட்டுவன், வையம், வௌவுதல்.

5 <u>ஞகரம்</u>

ஆ எ ஒ என்னும் மூவுயிர் ஞகாரத்துரிய (தொல் - எழுத்து - 64)

ஞகாரம் ஆ, எ, ஒ என்ற மூன்றோடு மட்டுமே மொழி முதலாகும். ஏனைய எழுத்துக்களுடன் மொழி முதலாக வராது.

(எ.டு) ஞாலம், ஞெண்டு, ஞொள்கிற்று.

6 <u>யகரம்</u>

"ஆ வோ டல்லது யகரம் முதலாது" யகரம் ஆகாரத்தோடு மட்டுமே மொழி முதலாக வரும்.

(எ-டு) யானை, யாடு முதலியன.

யவனர், யுத்தி, யூபம், யோகம், யௌவனம் என்பன வடசொற்கள்

7. <u>குற்றியலுகரம்</u>

முறைப்பெயரைக் குறிக்கும் சொல்லாகிய நுந்தை என்பதில் மட்டும் குற்றியலுகரம் மொழிக்கு முதலாகிய 'நகர' மெய்யின்மீது இணைந்து மொழி முதலில் வரும். இதனை மொழி முதற் குற்றியலுகரம் என்பர்.

இம்மொழி முதற் குற்றியலுகரம், இதழ் குவித்துக் கூறிய வழியும், இதழ் குவியாமற் கூறிய வழியும் ஒரு பொருளே தரும்.

"குற்றியலுகரம் முறைப்பெயர் மருங்கில்
ஒற்றிய நகர மிசை நகரமொடு முதலும்" (தொல் - எழுத்து - 67)

"முற்றியலுகரமொடு பொருள் வேறுபடா அது
அப்பெயர் மருங்கின் நிலையிய லான" (தொல் - எழுத்து - 68)

என்பன நூற்பாக்கள்.

8. <u>எழுத்துக்கள் தம் பெயர் சுட்டுதல்</u>

மொழிக்கு முதலாகா என்ற மெய் எழுத்துகளும் கூடத் தம் பெயரைக் கூறும்போது மொழிக்கு முதலாகும்.

"முதலா ஏன தம்பெயர் முதலும்" (தொல் - எழுத்து - 66)

டப்பெரிது, ணந்நன்று, ளக்குறிது என முதலாகா எழுத்துகள் தம்பெயரைக் குறித்த போது முதலாயின.

## 3.10. மொழியிடை எழுத்துக்கள்

மொழியிடையில் எழுத்துக்கள் மயங்கும் தன்மை

மொழியிடையில் மெய்கள் மயங்குவதை முன்னரே நூல் மரபில் தொல்காப்பியர் கூறியுள்ளார். அங்குக் கூறாது விட்ட விதிகளை இங்கு மொழி மரபில் கூறுகிறார்.

மெய் மயக்கம் தனி சொல்லுக்குக் கூறப்பட்டதா, இரு சொற்கள் சேரும் புணர்ச்சியாகிய கூட்டுச் சொல்லுக்கும் கூறப்பட்டதா என்ற கருத்து வேறுபாடு உண்டு. தனிச் சொல்லிலும் மயங்கும் கூட்டுச் சொல்லியும் மயங்கும் என்ற கருத்துடையவர் இளம்பூரணர். ஆனால் நச்சினார்க்கினியரோ, இருசொற்களின் இடையே வரும் மெய்ம்மயக்கம் புணரியல் ஆகிவிடும். ஆதலால் ஒரே சொல்லில் மெய் மயங்குவதனை மட்டுமே கொள்ள வேண்டுமென்று கருதுவர்.

ஒரே சொல்லில் மெய்கள் மயங்குவதற்கு உரிய சான்றுகள் நச்சினார்க்கினியர் காலத்திலேயே மறைந்து விட்டன. அதனால் இரு மொழிப் புணர்ச்சியுள் மெய்ம்மயக்கமாவதையும் சான்றாகக் காட்ட வேண்டிய நிலை ஏற்பட்டது. வடமொழியில் சையோகம் எனக் குறிக்கப்படும் மெய்ம்மயக்கம் தனிச் சொல்லிலும் நிகழும் கூட்டுச் சொற்களிலும் நிகழும்.

மெய்யொடு உயிர் மயங்குவது உயிர்மெய் எழுத்தாகிவிடும். உயிரோடு மெய் மயங்குவது ஆங்காங்கே புணர்ச்சியில் விளக்கப்படும். உயிரோடு உயிர் மயங்குவதை உடம்படுமெய் தந்து விளக்குவார். மெய்யொடு மெய் மயங்குவது வரையறைக்கு உட்பட்டது. ஆதலின் அதனை விளக்கமாக உரைத்தார் தொல்காப்பியர்.

### ஈரொற்று உடனிலை

ய, ர, ழ என்ற மெய்கள் குறில் அல்லது நெடிலின் கீழ் நிற்க, க, ச, த, ப, ங, ந, ம என்ற ஒற்றுக்கள் இணைந்து ஈரொற்றாக வருவது ஈரொற்று உடனிலையாகும்.

**"*யரழ என்னும் மூன்றும் முன் ஒற்றக்***

***க ச த ப ங ஞ ந ம ஈரொற்று ஆகும்*"** (தொல் - எழுத்து - 48)

என்பது நூற்பா.

| (எ - டு) | க | ச | த |
|---|---|---|---|
| ய | தாய்க்கிளி | பேய்ச்சி | சாய்த்தான் |
| ர | பீர்க்கு | நேர்ச்சி | ஆர்த்தது |
| ழ | வாழ்க்கை | தாழ்ச்சி | தாழ்த்தது |
|  | ப | ங | ந |
| ய | வாய்ப்பு | காய்ங்கனி | சாய்ந்தது |
| ர | சேர்ப்பன் | தேர்ங்கல் | ஊர்ந்தது |
| ழ | தாழ்ப்பு | தாழ்ங்குலை | வீழ்ந்தது |

இவை போலவே, நேர்ஞ்சிலை, நேர்ம்புறம், தாழ்ஞ்சினை, வீழ்ம்படை என ஞகர மகரங்களடனும் வரும்,

இவற்றுள் ர ழ் என்பன குறிலின் கீழ் ஒற்றாய் வராது.

"அவற்றுள் ரகார ழகாரம் குற்றொற்று ஆகா"

தொல் - எழுத்து - 49)

(எ-டு)

தார், தாழ் என நெடிலின்கீழ் ஒற்றாய் வரும்.

கரு, மழு எனக் குறிலின் கீழ் உயிர் மெய்யாய் வருமெயன்றி கர், மழ் எனக் குற்றொற்றாக வருவதில்லை.

**<u>செய்யுள் ஈரொற்று</u>**

செய்யுளுள் 'போலும்' என்ற சொல் வருகையில் ல, ம என்ற இரண்டும் இணைந்து "போன்ம்" என வரும்.

மீ கானும் போன்ம்

***"செய்யுள் இறுதிப் போலும் மொழிவயின்***

***னகாரை முன்னர் மகாரம் குறுகும்"*** (தொல் - எழுத்து - 51)

என்பது தொல்காப்பியர் கூறும் விதி.

இவ்வாறு வருமிடத்து மகரம் தன் அரை மாத்திரையினும் குறுகிக் கால் மாத்திரையாய் ஒலிக்கும்.

"னகாரை முன்னர் மகரம் குறுகும்" (தொல் - எழுத்து - 52)

மெய்ம்மயக்கத்திற்குப் புறனடை

எல்லா மெய்யெழுத்தும் தம் வடிவத்தைச் சொல்லுமிடத்து மெய்ம் மயக்க விதிகளிலிருந்து மாறுபட்டு மயங்கி வரினும் குற்றம் ஆகாது.

"தம்மியல் கிளப்பின் எல்லா எழுத்தும்
மெய்ந்நிலை மயக்கமானமில்லை."

(தொல் - எழுத்து - 47)

## 3.II. மொழி இறுதி எழுத்துக்கள்

இனி மொழியின் இறுதியில் வரும் எழுத்துக்கள் பற்றித் தொல்காப்பியர் கூறும் கருத்துகளைக் காண்போம்.

1. ஔகாரம் நீங்கலாக எல்ல உயிர் எழுத்துக்களும் மொழிக்கு இறுதியில் வரும்.

   "உயிர் ஔ எஞ்சிய இறுதியாகும்" (தொல் - எழுத்து - 69)

2. ஔகாரம் க வ என்ற மெய்களுடன் இணைந்து மொழி ஈறாக வரும். எ.கா. - கௌ, வௌ

   "கவ வொடு இயையின் ஔவும் ஆகும்" (தொல் - எழுத்து - 70)

3. எகரம் மெய்யோடு இணைந்து ஈறாகாது , தானே தனித்து ஈறாகும்

   "எ என வரூஉயிர் மெய் ஈறாகாது" (தொல் - எழுத்து - 71)

4. ஒகரம் ந கரத்தோடு மட்டுமே மொழி ஈறாக வரும்.

   எ-டு நொ.

   "ஒவ்வும் அற்றே நவலங்கடையே" (தொல் - எழுத்து - 72)

5. ஏகார ஓகாரங்கள் 'ஞ' கரத்துடன் சேர்ந்து மொழிக்கு இறுதியாவதில்லை. ஏஓ எனும் உயிர் ஞகாரத்து இல்லை

   (தொல் - எழுத்து - 74)

6. உகர ஊகாரங்கள் நகர வகர மெய்களோடு இணைந்து மொழி ஈறாவதில்லை,

   "உ ஊகாரம் நவவோடு நவிலா" (தொல் - எழுத்து - 74)

7. உகரம் சகரத்தோடு கூடி இரு மொழிகளில் மட்டுமே ஈறாகும்

   "உச்சகாரம் இருமொழிக்கு உரித்தே" (தொல் - எழுத்து - 75)

   எ-டு - உசு, முசு

8. உகரம் பகரத்தோடு கூடி ஒரே சொல்லில் ஈறாகும். அச்சொல்லானது தபு என்பது. அது தன்வினை, பிறவினை என்ற இரண்டு பொருண்மையிலும் இடம் பெறும்.

தபு - படுத்தல் ஓசை - நீசா (தன்வினை) தபு - எடுத்தல் ஓசை - நீ ஒன்றினை சாகச்செய் (பிற வினை)
தபு என்ற சொல் அழித்தல், அழிதல் என்ற இருபொருளும் தருகிறது.

## மொழி ஈற்றுப் புறனடை

மொழிக்கு ஈறாகாது என முன்னே சொன்ன எழுத்துக்களும் தம் பெயரைச் சுட்ட வந்தவிடத்து ஈறாகும்.

"எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே" (தொல் - எழுத்து நூ 77)

## மொழி ஈறாகும் மெய்கள்

1. ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்ற பதினொரு மெய்யும் மொழி ஈறாக வரும்.

   ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும்
   அப்பதி னொன்றே புள்ளி இறுதி (தொல் - எழுத்து - 78)

   எ - டு உரிஞ், மண், பொருந், மறம், அவன், பாய், பல், தெவ், பாழ், அவள்.

2. நகர மெய் உச்சகார மொழிபோல் இரண்டு சொற்களிலேயே ஈறாகும்.
   எ - டு பொருந், வெரிந்

   "உச்சகாரமொடு நகாரம் சிவனும்" (தொல் - எழுத்து - 79)

3. ஞகாரம் உப்பகாரம்போல் ஒரு மொழிக்கு மட்டுமே ஈறாய் வரும். ஆனால் உப்பகாரமாகிற 'தபு' இரு வகையாகத் தன்வினை பிறவினை என்று பொருள் பட்டது போல் இச்சொல் இரு பொருள் படாது. (எ-டு) உரிஞ்

   உப் பகாரமொடு ஞகாரையும் அற்றே
   அப்பொருள் இரட்டாது இவணை யான் (தொல் - எழுத்து - 80)

4. வகரமெய் நான்கு சொற்களில் மட்டுமே ஈறாம்.
   (எ-டு) அவ், இவ், உவ், தெவ்
   வகரக் கிளவி நான்மொழி ஈற்றது (தொல் - எழுத்து - 81)

5. னகரம் மெய்யானது மகர வீற்றுடன் மயங்காது, ஒன்பது அஃறிணைப் பெயர்களில் சொல்லின் ஈறாக வரும்.

எ - டு எகின், செகின், விழன், பரின், அழன், புழன், குயின், கடான், வயின்

***"மகரத்தொடர்மொழி மயங்குதல் வரைந்த***
***னகரத்தொடர் மொழி ஒன்ப:து என்ப***
***புகர் அறக் கிளந்த அ:றிணை மேன"*** (தொல் - எழுத்து - 82)

இதனால் மகரத்தோடு னகரம் மயங்கிய சொற்களும் உண்டு என அறிகிறோம் அவை :

நிலம் - நிலன் அகம் - அகன்
கலம் - கலன் மரம் - மரன்
குளம் - குளன்

என வரும்.

வல்லினம் ஒருபோதும் மொழிக்கு ஈறாவதில்லை. ஙகரம் ஒழிந்த மெல்லினம் ஐந்தும் மொழி ஈறாகும். இடையினம் ஆறும் மொழி ஈறாகும். மெல்லினத்தில் ஞ, ந இடையினத்தில் வ என்பன எண்ணிக்கைக்கு உட்பட்ட சொற்களில் இறுதியாகின்றன,

மேற்குறித்த கருத்துக்களால் தமிழ் . எழுத்துக்கள் தொடர்ந்து, மொழியாகும்போது வரையறைக்கு உட்படுகின்றன. கணக்கியல் சேர்க்கைக்கு அதில் இடமில்லை என்னும் உண்மைகளை அறிந்து கொள்கிறோம்.

7. போலியாவது யாது?

## 3.12 போலி

இனி எழுத்துப்போலி பற்றிக் காண்போம். போலியாவது ஓர் எழுத்தினைப் போன்று பிற எழுத்துக்கள் நின்று ஒலித்தல்.

8. அகரத்தின்பின் எம்மெய் ஐகாரம் ஒலிக்கும்?

1. அகரமும் இகரமும் சேர்ந்து ஐகாரம் போல இசைக்கும்.

எ - டு ஐவனம் - அஇவனம்

"அகரம் இகரம் ஐகாரம் ஆகும்" (தொல் - எழுத்து - 54)

2. அகரத்தின் பின் யகரமாகிய மெய் சேர்ந்தும் ஐகாரம் ஒலிக்கும்.

எ - டு ஐவனம் - அய்வனம்

"அகரத்திம்பர் யகரப்புள்ளியும்
ஐஎன் நெடுஞ்சினை மெய் பெறத்தோன்றும்" (தொல் -எழுத்து - 56)

9. அகரமும் உகரமும் கூடி ஒலிக்கும் எழுத்து எது?

"மெய் பெறத் தோன்றும்" என்று கூறியதனால் அகரத்தின் பின் உகரமே அன்றியும் வகர மெய்யும் ஔகாரம் போல வரும் எனக் கொள்க என்று விளக்கம் உரைக்கும் இளம்பூணர் அதற்கேற்ப ஔவை - அவ்வை என எடுத்துக்காட்டுவர்.

3. "அகரமும் உகரமும் கூடி ஔகாரம் போல் இசைக்கும்
அகர உகரம் ஔகாரம் ஆகும்" (தொல் - எழுத்து - 55)
அகரத்திம்பர் யகரப் புள்ளியும் ஐ ஔ நெடுஞ் சினை மெய் பெறத் தோன்றும் என்று வ.உ சிதம்பரம்பிள்ளையவர்கள் தம் பதிப்பில் வேறு பாடம் செய்வார்.

அகரமும் வகரமும் கூடி ஔகாரமாக ஒலித்தல் தொல்காப்பியர் கால வழக்கன்று என்பார் வெள்ளைவாரணார்.

"அன்னை" விளியேற்கும்போது அன்னாய் ஆகிறது. அன்னாய் என்றிருந்து வழங்கி வருகிறது என்பது ஆராயப்பட வேண்டியது.

"கய்களை நெறித்தாள் கண்ணில் மோதினாள்" என்ற கம்பராமயான வரியில் கை ⟶ கய் என வருவதையும்,
அவ்வை உயிர் வீவும் கேட்பாயோ தோழி என்று சிலப்பதிகாரத்தில்,
ஔ ⟶ அவ் என வருவதையும் கலித்தொகையில் அவ்வாறே,
பௌவம் ⟶ பவ்வம் என வருவதையும் எடுத்துக் காட்டுவர் தே. ஆண்டியப்பன்

10 யகரத்திற்கு மாற்றாக வருவது எது?

4. இனி மொழியின் இறுதியில் இகரமும் யகரமும் உறழ்ந்து நிற்கும் என்கிறார் தொல்காப்பியர்
"இகர யகர இறுதி விரவும்" (தொல் - எழுத்து - 58)
எ-டு நாய் ⟶ நாஇ ஐ > அய் > அஇ

இங்கு ய், இ என்பன ஒன்றுக்கொன்று மாற்றாக அமைகின்றன எனலாம்.

இவ்வாறாக மொழி மரபில் குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம், அளபெடை, எழுத்து மொழியாதல், எழுத்தின் இயக்கம், மொழி முதல் இடை, கடை எழுத்துக்கள், போலி ஆகியன குறித்துத் தொல்காப்பியர் கூறுயிள்ள கருத்துக்களை அறிந்து கொண்டோம். இனி எழுத்துக்கள் எவ்வாறு பிறக்கின்றன என்பதை அடுத்த பாடத்தில் காண்போம்.

## I சுயதிறனறி வினாவுக்குரிய விடைகள்

1. மொழியது மரபு உணர்த்தினமையின்
2. குறுகி ஒலிக்கும்.
3. வல்லெழுத்து ஆறன்மேல்
4. நெட்டெழுத்துக்கள்
5. மூன்றுவகை
6. தத்தம் மாத்திரை இயல்பு வேறுபாடு திகழும்
7. ஓர் எழுத்தினைப்போலப் பிற எழுத்துக்கள் நின்று ஒலித்தல்
8. ஔகாரம்
9. யகரமாகிய மெய்
10. இகரம்

## பயிற்சி வினாக்கள்

## II குறு வினாக்கள்

1. மொழி மரபில் இடம்பெறும் செய்திகள் யாவை?
2. குற்றியலுகரம் பற்றி எடுத்துரைக்க
3. ஆய்தம் பற்றிக் கருத்துரைக்க
4. அளபெடை பற்றித் தொல்காப்பியர் கூறுவன யாவை?
5. எழுத்தின் இயக்கம் பற்றிக் கூறுக.

## III பெரு வினாக்கள்

1. மொழி முதல் எழுத்துக்கள் பற்றி விளக்குக.
2. மொழி இடை எழுத்துக்கள் பற்றி விவரி
3. மொழியிறுதி எழுத்துக்கள் பற்றி விளக்கியுரைக்க.
4. போலி பற்றித் தொல்காப்பியம் கூறும் கதுத்துக்களை விவரி.

# அலகு - 4

## பிறப்பியல்

4,1 எழுத்துக்களின் பொதுப்பிறப்பு

4.2 உயிரெழுத்துக்களின் பிறப்பு

4.3 மெய்யெழுத்துக்களின் பிறப்பு

4.4 சார்பெழுத்துக்களின் பிறப்பு

4.5 எழுத்துப்பிறப்பிற்குப் புறனடை

# பிறப்பியல்

அன்பு மாணவர்களே! இதுவரை நாம் தொல்காப்பியம் பற்றிய அடிப்படைச் செய்திகள், நூல்மரபு, மொழிமரபு ஆகியன பற்றி தொல்காப்பியர் கூறும் கருத்துகள் ஆகியவற்றை அறிந்து கொண்டோம். இனி இப்பாடத்தில் எழுத்துக்கள் எவ்வாறு பிறக்கின்றன என்பதைத் தொல்காப்பிய வழிநின்று காணவிருக்கிறோம்.

சுயதிறனறி வினாக்கள்

## முதன்மை நோக்கம்

தமிழ் எழுத்துக்களின் பிறப்பிலக்கணத்தை தெரிந்து கொள்கிறான்.

## முதன்மை நோக்கம்

❖ உயிர் எழுத்துக்களின் பொதுப்பிறப்பு சிறப்புப் பிறப்பு ஆகியனவற்றைத் தெரிந்துகொள்கிறான்.

❖ மெய்யெழுத்துக்களின் பிறப்பு, சார்பு எழுத்துக்களின் பிறப்பு, புறனடை ஆகியன பற்றியும் தெரிந்துகொள்கிறான்.

## 4.1 எழுத்துக்களின் பொதுப்பிறப்பு

1. எத்தனை இடங்களை அடியாகக் கொண்டு எழுத்துக்கள் பிறக்கின்றன?

தமிழ் எழுத்துக்கள் எல்லாவற்றிற்கும் உரிய பிறப்பிலக்கணத்தைத் தொல்காப்பியர் கீழ்க்காணுமாறு விளக்குவார்.

தொப்புள் (கொப்பூழ்) அடியாகத் தோன்றி / மேலே கிளர்கின்ற உதானன் என்னும காற்று தலையிலும் மிடற்றிலும் (கழுத்திலும்) நெஞ்சிலு நிலைபெற்று பல்லும், இதழும் (உதடும், நாக்கும், மூக்கும், அண்ணமும் உட்பட எட்டாகிய முறைமையுடைய இடங்களில் / ஓர் உறுப்போடு ஓர் உறுப்புத் தம்மிற் பொருந்தி அமைதலாலே அவ்வெழுத்துகளின் பிறப்பு வேறு வேறாகப் புலப்படும். அவற்றைத் தம் அறிவால் ஆராய்ந்து அவற்றின் பிறப்பு வேறுபாடுகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். இனி நூற்பாவினைக் காணலாம்

*“உந்தி முதலா முந்துவளித் தோன்றித்*
*தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலை இப்*
*பல்லும் இதழும் நாவும் மூக்கும்*
*அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்*
*உறுப்புற்றமைய நெறிப்பட நாடி*
*எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்*

*பிறப்பின் ஆக்கம் வேறு வேறியல*

*திறப்படத் தெரியும் காட்சியான*" (தொல் - எழுத்து - பிறப்பு 1)

## 4.2. உயிரெழுத்துக்களின் பிறப்பு

<u>உயிரெழுத்துக்களின் பொதுப்பிறப்பு</u>

பன்னிரண்டு உயிர் எழுத்துக்களும் தத்தம் மாத்திரை திரியாமல் மிடற்றின்கண் பிறந்த காற்றான் ஒலிக்கும். இவற்றுள் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் தந்நிலை திரியும்.

2 உயிரெழுத்து களின் பிறப்பிடம் யாது?

*"அவ்வழிப்*

*பன்னீர் உயிரும் தந்நிலை திரியா*

*மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும்"*

(தொல் - எழுத்து - பிறப்பியல் 2)

<u>உயிரெழுத்துக்களின் சிறப்புப்பிறப்பு</u>

உயிர் பன்னிரண்டில் அகர ஆகாரங்களாகிய அவ்விரண்டும் அங்காந்து கூறும் முயற்சியால் பிறக்கும். இ. ஈ. எ. ஏ. ஐ ஆகிய ஐந்தும் அங்ஙனம் பிறக்குமாயினும் அண்பல்லை (பல்லின் அணிய இடத்தின்) அடிநா விளிம்பு (நா அடியின் விளிப்பு) சென்று உறப்பிறக்கும் வேறுபாடுடைய. உ, ஊ, ஒ, ஓ, ஔ என்ற ஐந்தும் இதழ் குவித்துக் கூறப்பிறக்கும்.

"அவற்றுள்

அ ஆ ஆயிரண்டு அங்காந்து இயலும்" (பிறப்பியல் - 3)

"இ, ஈ, எ ஏ ஐ என இசைக்கும்

அப்பாலைந்தும் அவற்றோரன்ன

அவை தாம்

அண் பல் முதல் நா விளிம்புறலுடைய" (பிறப்பியல் - 4)

"உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும்

அப்பா லைந்தும் இதழ் குவிந்தியலும் (பிறப்பியல் - 5)

உயிரெழுத்துக்கள் இன்னின்ன இடத்துப் பிறக்கும் என்று குறிப்பிட்டாலும் அவை எடுத்தல் படுத்தல், நலிதல், விலங்கல் முதலியவற்றால் சிறிது வேறுபடப் பிறத்தலும் உண்டு. இவ்விதி அடுத்துச் சொல்லப்படவிருக்கும் மெய்யெழுத்துப் பிறப்புக்கும் பொருந்தும் கருத்தாகும்.

## 4.3 மெய்யெழுத்துக்களின் பொதுப்பிறப்பு

மெய் பதினெட்டில் ககாரமு ஙகாரமும் நாமுதலிலும் அண்ண முதலிலும் உறப்பிறக்கம்.

'சகாரமும், ஞகாரமும்' நா இடையும் அண்ண இடையும் உறப் பிறக்கும்.

'டகாரமும் ணகாரமும்' நா நுனியும் அண்ண நுனியும் உறப் பிறக்கும். இவ்வகையில் க, ங, ச, ஞ, ட, ண, இவ் ஆறும் நாமுதல் அண்ணமுதல், நாஇடை, அண்ண இடை, நாநுனி, அண்ண நுனி என அறுவகைப்பிறப்பின் என்று கொண்டு விடக்கூடாது. நாமுதலும் அண்ண முதலு ஒருவகை. நா இடையும் அண்ண இடையும் ஒரு வகை நாநுனியும் அண்ண நுனியும் ஒரு வகை. எனவே மூவகைப் பிறப்பினவே என்று கொள்ள வேண்டும்.

"அவ்வாறெழுத்தும் மூவகைப் பிறப்பின" (தொல் - பிறப்பியல் - 10)

தகாரமும் நகாரமும் அண்ணத்தைப் பொருந்திய பல்லினது அடியாகிய இடத்திலே, நாவினது நுனி பரந்து சென்று தன் வடிவு மிகவும் உறும்படி சேரப் பிறக்கும். றகார, னகாரமாகிய அவ்விரண்டும் நாவின் நுனி மேல் நோக்கிச் சென்று அண்ணத்தைத் தடவப் பிறக்கும். நா, மேல் நோக்கிச் சென்று தன் விளிம்பு அண் பல்லின் அடியிலே உற அவ்விடத்து அவ்வண்ணத்தை அந்த நா ஒற்ற லகாரமும் நாத்தடவ ளகரமும் பிறக்கும். மேல் இதழும் கீழ் இதழும் தம்மிற்கூடப் 'பகாரமும் மகாரமும்' பிறக்கும். மேற்பல்லும் கீழ் உதடும் கூட வகாரமும் பிறக்கும் உந்தியில் எழுந்த காற்று, மிடற்று இடத்துச் சேர்ந்த அதனாற் பிறந்த ஓசை அண்ணத்தை அணைந்து உரலாணி இட்டாற்போல் செறிய யகாரம் பிறக்கும்.

"ககார ஙகாரம் முதல்நா அண்ணம்"
"சகார ஞகாரம் இடை நா அண்ணம்"
"டகார ணகாரம் நுனிநா அண்ணம்"
"அவ்வாறெழுத்தும் மூவகைப்பிறப்பின"

(தொல் - எழுத்து - பிறப்பியல் 7, 8, 9, 10)

இனிப்பிற எழுத்துக்கள் பற்றிக் கூறக் காண்போம்.

"அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்
நாநுனிபரந்து மெய்யுற ஒற்றத் தாமினிது பிறக்கும் தகார நகாரம்"
(தொல் - பிறப்பியல் - 11)

"அணரி நுனி நா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்" (தொல் - பிறப்பியல் - 12)

"நாவிளிம்பு வீங்கி அண்பல் முதல் உற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும்"
(தொல் - எழுத்து - பிறப்பியல் - 14)

"இதழ் இயைந்து பிறக்கும் பகரமகாரம்"
"பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும்"
"அண்ணம் சேர்ந்த மிடற்று எழுவளியிசை
கண்ணுற்றடைய யகாரம் பிறக்கும்"
(தொல் - எழுத்து - பிறப்பியல் 15, 16, 17)

என்பன பிறப்பு குறித்த நூற்பாக்கள் ஆகும்.

மெல்லினம் ஆறும் மேற்கூறியவாறு பிறக்குமாயினும் அவை மூக்கின்கண் உளதாகிய வளியின் இசையான் பொருத்தமுறப் பிறக்கும். இவ்வாறே இடையினும் மிடற்றுவளியாலும் வல்லினம் தலை வளியாலும் பிறக்கும்.

## 4.4 சார்பெழுத்துக்களின் பிறப்பு

சில எழுத்துக்களைச் சார்ந்து தோன்றின் அல்லாமல், தமக்கெனத் தோன்றுவற்கு ஓரியல்பு இல்லாதவை சார்பெழுத்துக்கள். அவை குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகிய மூன்றுமாம். இவற்றின் பிறப்பியல்பு யாதெனின், தத்தமக்கு உரிய சார்பாகிய மெய்களின் சிறப்புப் பிறப்பிடத்தே பிறத்தலோடு பொருந்தி நடக்கும்.

"சார்ந்துவரின் அல்லது தமக்கியல்பு இலவெனத்
தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும்
தத்தஞ் சார்பிற் பிறப்போடு சிவணி
ஒத்த காட்சியின் தமக்கியல்பியலும்"
(தொல் - எழுத்து - பிறப்பியல் - 19)

எனத்தொல்காப்பியம் உரைக்கின்றது.

இவற்றுள் ஆய்த எழுத்து தலைவளியாற் பிறக்கும் என்பர் இளம்பூரணர். ஆனால் நச்சினார்க்கினியரோ நெஞ்சுவளியாற் பிறக்கும் என்பர். இனி அளாபெடையும் உயிர்மெய்யும் தம்மை ஆக்கிய எழுத்துக்களது பிறப்பிடமே இடமாக வரும் என்பர் உரையாசிரியர்கள்.

## 4.5 எழுத்துப் பிறப்பிற்குப் புறனடை

தொல்காப்பியர் இப்பிறப்பியலில் "எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்த" என்ற நூற்பாவில் எழுத்துப் பிறப்பிற்கு புறனடையாகப் பின்வருமாறு கூறுகின்றார்.

"எல்லா எழுத்துகளும் பிறக்குமாறு, எனக்கு முன்னோர் கூறிய முறைப்படியே யானும் எண்வகை நிலத்தும் பிறக்கும் எழுத்துக்களைக் கண்டு கூறினேன். யான் கூறியவாறன்றி, உந்தியில் தோன்றும் காற்றினது திரிதரும் கூற்றின் கண்ணே மாத்திரை கூட்டிக் கோடலும், மூலாதாரத்தில் எழுகின்ற காற்றின் ஓசையைக் குற்றமற நாடிக் கோடலும் அந்தணரது வேதத்தில் உண்டு. அந்நிலையை அவ்வேதத்திற் கண்டு உணர்க. யான் ஈண்டுக் கூறவில்லை. உந்தியில் தோன்றிப் புறத்தே புறப்பட்டு ஒலிக்கும் பொருள் தெரியும் காற்றினது துணிவிற்கே யான் மாத்திரை கூறினேன். அவற்றினது மாத்திரையை உணர்க!

இதற்குப் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி, பின்வருமாறு விளக்கம் தருவார்.

"அகத்தின்கண் உண்டாம் எழுத்துக்களின் நிலை, மூவகைப்படும். எனவும், அவை வைகரி, பைசந்தி, மத்திமம் எனவும், வைகரி நிலையில் எழுத்துக்கள் எல்லாம் ஒரே தன்மையாய் இருக்கும் எனவும், அது மூலாதாரத்தில் நிகழும் எனவும், பைசந்தி, உந்தியில் தோன்றும் எனவும் அது யோகிகளுக்கே புலப்படும் எனவும், மத்திமை நெஞ்சினில் தோன்றும் எனவும், தோன்றி வரும் காற்றுத் தலை, மிடறு, நெஞ்சு ஆகிய இடங்களில் நிலைபெற்றுப் புறத்து வந்து பொருளுணர்ச்சி தரும் எழுத்துக்களாக வருவனவற்றையே ஈண்டுக் கூறினார் தொல்காப்பியர்.

தொல்காப்பியர் கூறும் எழுத்துக்களின் பொதுப்பிறப்பு, உயிரெழுத்துப் பிறப்பு, மெய் எழுத்துக்களின் பிறப்பு, சார்பெழுத்துக்களின் பிறப்பு, எழுத்துப் பிறப்பிற்கான புறனடை ஆகிய கருத்துக்களை இப்பிறப்பியலில் கண்டோம். இனி எழுத்துக்கள் பிறந்து பின் பிற எழுத்துக்களோடு சேர்வது எவ்வாறென அடுத்துவரும் புணரியலில் காணவிருக்கிறோம்.

## I அறிவறி வினாவுக்குரிய விடைகள்

1. எட்டு இடங்கள்
2. மிடறு
3. பல்லிதழ் இயைய
4. தலைவளியாற்
5. உந்தியில் தோன்றிப் புறத்தே புறப்பட்டு ஒலிக்கும் பொருள் தெரியும் காற்றினது துணிவிற்கே மாத்திரை உரைத்தேன்.

## பயிற்சி வினாக்கள்

### II குறு வினாக்கள்

1. எழுத்துக்களின் பிறப்பு பற்றித் தொல்காப்பியரின் கருத்துக்கள் யவை?
2. உயிரெழுத்துக்களின் பிறப்பு பற்றிக் கூறுக
3. மெய்யெழுத்துக்களின் பிறப்பு பற்றிக் கூறுக
4. சார்பெழுத்துக்களின் பிறப்பு பற்றிக் கூறுக
5. எழுத்துப்பிறப்பிற்குப் புறனடையாக அமைவன யாவை?

### III நெடு வினாக்கள்

பிறப்பியல் பற்றித் தொல்காப்பியர் கூறும் கருத்துகளைத் தொகுத்துரைக்க.

## அலகு - 5

# புணரியல்

5.1 மொழிகளும் முதலும் ஈறும்

5.2 நிலைமொழியும் வருமொழியும்

5.3 புணர்மொழி இயல்பு

5.4 புணர்ச்சித்திரிபுகள்

5.5 அடைமொழி மரூஉ மொழிப்புணர்ச்சி

5.6 அல்வழி வேற்றுமைப் புணர்ச்சிகள்

5.7 உருபுப் புணர்ச்சி

5.8 சாரியைப் புணர்ச்சி

5.9 எழுத்துச் சாரியை

5.10 உயிரெழுத்துப் புணர்ச்சி

5.11 புணர்ச்சியுள் பொருள் வேறுபாடு

# புணரியல்

தொல்காப்பியம் குறித்த நூல்மரபு, மொழி மரபு, பிறப்பியல் பற்றிய செய்திகளை இதுவரை கண்டோம். இனி எழுத்துக்ளும் அவற்றின் கூட்டாம் சொற்களும் எவ்வாறு இணைகின்றன என்பதை இனிக் காண்போம்.

## நோக்கம்

தமிழில் மொழிகள் தம்முள் புணரும் விதத்தை அறிந்துகொள்கிறான்.

## துணை நோக்கம்

- சொற்புணர்ச்சியின் சூழல் பற்றித் தெரிந்துகொள்கிறான்.
- தொல்காப்பியர், அவற்றைக் கூறும் முறை, கொள்கைகள், ஒலிப்பு முறைகள், நிலைகள் ஆகியன வற்றையும் தெரிந்துகொள்கிறான்.

எழுத்துக்களின் புணர்ச்சி உணர்த்தும் இயல் புணரியல் எனப்பட்டது. தொல்காப்பியர் நூல்மரபில் எழுத்துக்களை உணர்த்தினார். மொழி மரபில் எழுத்துக்கள் தெடர்ந்து மொழியாவதை உணர்த்தினார். இவ்வியலில் மொழிகள் தம்முள் புணருமாற்றை உணர்த்துகிறார். புணர்ச்சியை விடச் சொற்புணர்ச்சியின் சூழல்கள், அவை பற்றிய தம் கொள்கைகள், வகைப்படுத்தும் முறைகள், ஒலி நிலைகள் ஆகியவற்றையே மிகுதியும் விளக்குகின்றார் எனலாம். இதனால் புணரியல் என்று இதனை அழைப்பதைவிடப் புணர்மொழியியல் என்று அழைத்தலே பொருந்தும் என்பார் டாக்டர் தே. ஆண்டியப்பன் (காப்பியர் நெறி - எழுத்தியல் - ப - 50)

<u>புணரியல் செய்திகள்</u>

தொல்காப்பியப் புணரியல் செய்திகள் கீழ்க்கண்டவாறு அமைந்துள்ளன.

1. மொழிகளின் முதலும் ஈறும்.
2. நிலைமொழி, வருமொழி
3. புணர்மொழி இயல்பு
4. புணர்ச்சியில் திரிபுகள்
5 அடைமொழி, மரூஉ மொழிப் புணர்ச்சி

6. அல்வழி, வேற்றுமைப்புணர்ச்சி
7. உருபுப் புணர்ச்சி
8. சாரியைப் புணர்ச்சி
9. எழுத்துச் சாரியை
10. உயிரெழுத்துப் புணர்ச்சி
11. புணர்ச்சியில் பொருள் வேறுபாடு

இனி இவ்வகையாகப் புணரியற் செய்திகளை முறைப்படிக் காணலாம்.

## 5.1 மொழிகளும் முதலும் ஈறும்

1. மொழியின் இரு நிலைகள் யாவை?

தமிழ் மொழிக்கு உரிய எழுத்துக்கள் முப்பத்து மூன்று. இவற்றுள் மொழிக்கு முதலில் வருவன 22 மொழிக்கு இறுதியில் வருவன 24. இங்ஙனம் எந்த ஒரு சொல்லுக்கும் மொழியின் முதல், மொழியில் ஈறு என்ற இருநிலை உண்டு. எல்லா வகையான மொழிக்கும் இறுதியும் முதலுமாக மெய் உயிர் என்ற இருவகை எழுத்துக்களையே கருதுவர்.

<u>மொழி முதல் எழுத்துக்கள் - 22</u>

உயிர் 12
க ச த ப ஞ
ந ம ப வ
மொழி முதற் குற்றியலுகரம்

<u>மொழி இறுதி எழுத்துக்கள் 24</u>

உயிர் 12
ஞ ண ந ம ன
ய ர ல வ ழ ள
குற்றியலுகரம்

மூன்று தலையிட்ட முப்பதிற்று எழுத்தின்
இரண்டு தலையிட்ட முதலாகு இருபஃது
அறுநான்கு ஈறொடு நெறிநின்று இயலும்
எல்லா மொழிக்கு இறுதியும் முதலும்
மெய்யே உயிர் என்று ஆயீரியல (தொல் - எழுத்து - 104)
மொழி முதல் எழுத்துக்கள் - 22
மொழி இறுதி எழுத்துக்கள் - 24

எனினும் அந்த 46 எழுத்துகளும் முன்னே கூறிய 33 எழுத்துக் களுக்குள்ளே அடக்கம் என்ற செய்தியை இதன் மூலம் தொல்காப்பியர் உணர்த்துகிறார். புணர்ச்சிக்கு முன் எல்லாச் சொற்களையும் இதுமுதல் இது ஈறு என்று கண்டுகொள்ளக் கூறுகிறார்.

(எ-டு) மரம் - மெய்முதல் மெய் ஈறு

இலை - உயிர் முதல் உயிர் ஈறு

விள - மெய் முதல் உயிர் ஈறு

ஆல் - உயிர் முதல் மெய் ஈறு

<u>மெய்யீறு புள்ளி பெறல்</u>

2 மெய்யீறுகள் அனைத்தும் என்ன பெறும்?

மேலே சொன்ன மொழி முதல், மொழியிறுதி எழுத்துக்களில் மொழி முதலாகிய மெய்கள் புள்ளி இழந்து நிற்கும். மொழியீற்று மெய்கள், உயிர் எழுத்துக்கள் வந்த இடத்தில் அது ஏறுவதற்கு இடம் கொடுக்கும்

"அவற்றுள்

மெய் ஈறு எல்லாம் புள்ளியொடு நிலையல்" (தொல் - எழுத்து - 105)

<u>குற்றியலுகர ஈறு</u>

இனி குற்றியலுகர ஈறும் அதே போன்றே என்று கூறுகிறார் தொல்காப்பியர்.

"குற்றியலுகரமும் அற்றுஎன மொழிப" (தொல் - எழுத்து - 106)

என்ற தொல்காப்பியரின் கூற்றுக்கு உரைகூறும் உரையாசிரியர்கள் தம்முள் வேறுபடுகின்றனர்.

1. குற்றியலுகரமும் அற்றனமொழிப என்றது இதற்கு முந்திய நூற்பாவாகிய மெய்யீரெல்லாம் புள்ளியொடு நிலையல் என்பதனைச் சுட்டியது. எனவே மெய்யீறு புள்ளி பெறுவது போலக் குற்றியலுகரமும் புள்ளி பெறும் என்று மயிலைநாதர், சங்கயாப்புடையார், பேராசிரியர் போன்றோர் கருதுவர்.

2. குற்றியலுகரம் புள்ளி பெற்று வரும் என்பதை இளம்பூரணரும் நச்சினாக்கினியரும் ஒப்புவதில்லை. மெய்யீறு புள்ளி பெற்று நிற்கும். உயிர்வந்தால் அவ்வுயிர் ஏற அது இடம் கொடுக்கும். அதைப்போல் குற்றியலுகரமும் உயிர் ஏற இடம் கொடுக்கும் என்ற கருத்துடையார் அவர்.

3. மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் என்று மெய் எழுத்துப் புள்ளி பெறுதலைத் தொல்காப்பியர் முன்னரே கூறிவிட்டார் இங்கு மீண்டும் "மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல் என்று கூறுவது கூறியது கூறல் ஆகாதா? என்ற கேள்வி எழும். எல்லா ஈற்றையும் உயிர், மெய் என்ற இரண்டிலே அடக்க முயல்கிறார் தொல்காப்பியர். இங்கு உயிர் மெய், குற்றியலுகரம் என்ற இரண்டு ஈறுகளையும் உயிர், மெய் என்ற இரண்டிலே அடக்க வேண்டிய இடர்ப்பாடு நேர்கிறது. அதனால் தொல்காப்பியர் குற்றியலுகர ஈறானது மெய்யீறுபோல நின்று வரும் உயிர் ஏற இடம் கொடுக்கும் என்றும், உயிர்மெய்யீறு உயிர் ஈறுபோலக் கருதப்படும் என்று கருதியிருக்க வேண்டும் என்பர்.

4. நூற்பாக்களின் வரிசை முறையை மாற்றி,

   "மெய்யீறு எல்லாம் புள்ளியோடு நிலையல்" (தொல்-எழுத்து - 105)

   "உயிர் மெய் ஈறும் உயிரீற்று இயற்றே" (தொல் - எழுத்து - 104)

   "குற்றியலுகரமும் அற்றென மொழிப" (தொல் - எழுத்து - 106)

   என்று அமைத்துக்கொண்டால் நியாயமும் தெளிவும் கிடைக்கும் என்று கருதுபவரும் உண்டு என்று காப்பியர் நெறி என்ற தமது நூலில் டாக்டர் தே. ஆண்டியப்பன் அவர்கள் கூறுகிறார்,

மொழிக்கு முதலில் வரும் மெய் தனித்த மெய்யாக வராது. உயிர் மெய்யாகவே வரும். அவ்வாறு வரும்போது தன் புள்ளியை இழந்துவிடும். ஆனால் மொழியின் ஈற்றில் நிற்கும் மெய்கள் மெய்களாகவே வரும் புள்ளி பெற்று நிற்கும். ஆகவேதான் புள்ளியொடு நிலையல் என்பதைச் சிறப்பித்துச்சொன்னார் மொழிக்கு ஈற்றில் வரும் எழுத்தையெல்லாம் உயிர், மெய் என்ற இரண்டினுள்ளே அடக்கிவிடுகிறார் தொல்காப்பியர். உயிர்மெய் ஈறு எவ்வாறு கருதப்படும் என்ற வினா எழுகிறது. உயிர்மெய் ஈறு உயிரீறு போன்றது என்று நூற்பா 107இல் உரைக்கிறார். அதையடுத்து நூற்பா 106 இருந்திருக்குமேயானால் குற்றியலுகர ஈறும் உயிர் ஈறு போலவே கருதப்பட வேண்டியது என்ற கருத்தின் ஒழுங்கு புலப்படுமே.

3. மொழிக்கு முதலில் வரும் மெய் எவ்வாறு வரும்?

இவ்வாறு நூற்பாக்களை மாற்றி அமைத்து அமைதி தேடுவதால் கீழ்க்கண்ட நன்மைகளைக் காணலாம்.

1. நன்னூலார், உகர இறுதியிலேயே குற்றுகரப்புணர்ச்சியையும் அமைத்துக்கொண்டதன் காரணம் புலப்படும்.
2. உகரத்தின் மாற்றொலியே குற்றுகரம் என்பது பொருந்தி வரும்.
3. கொக்குக் கடிது என்று குற்றுகரத்தின் பின் வல்லினம் மிகுவதன் காரணம் புலப்படும்.

   'குற்றியலுகரமும் அற்றென மொழிப' என்ற நூற்பாவிற்கு மூவகையாகப் பொருள் உரைக்கப்படுகிறது.

1. குற்றியலுகரமும் மெய் போலப்புள்ளி பெறும்.
2. குற்றியலுகரம் மெய்யீறுபோலத்தான் நின்று. வருகின்ற உயிர் ஏற இடம் கொடுக்கும்.
3. குற்றியலுகரம் உயிரீறு போலவே நின்று செயல்படும்.

<u>மெய்யீறு உயிரீற்றை ஒத்தல்</u>

உயிர் மெய்கள் மொழி ஈற்றில் நின்றால் அவை உயிரீறு போலவே நின்று புணரும்.

(எ - டு) விள - அகர ஈறு
பலா - ஆகார ஈறு
முசு - உகர ஈறு

எனக் கருதப்படும்.

"உயிர்மெய் ஈறும் உயிர் ஈற்று இயற்றே" (தொல் - எழுத்து - 107)

மேற்கண்டவாறு தொல்காப்பியர் சொற்களின் முதலும் ஈறும் குறித்துக் கூறுகிறார்.

4. புணர்ச்சிக்குரிய சொற்களைத் தொல்காப்பியர் எத்தனை வகைககளாகப் பிரிக்கிறார்? அவையாவை?

## 5.2 நிலைமொழியும் வருமொழியும்

தொல்காப்பியர் புணர்ச்சிக்கு உரிய சொற்களை, 1) நிறுத்த சொல் (நிலைமொழி) 2) குறித்து வருகிளவி (வருமொழி) என இரண்டு வகையாகப் பகுத்து இவையே புணர்நிலைச் சுட்டு என்று அறிமுகப்படுத்துகிறார் சொற்களின் புணர்ச்சியை எழுத்து வகையால் நான்காக நிலைப்படுத்துகிறார்

| நிலைமொழி ஈறு | | வருமொழி முதல் |
|---|---|---|
| உயிர் | முன் | உயிர் |
| உயிர் | முன் | மெய் |
| மெய் | முன் | உயிர் |
| மெய் | முன் | மெய் |

எனவே, எழுத்தினது வகையால் புணர்ச்சி நான்கு வகையாகப் பாகுபடுத்தப்படுகிறது. இப்பாகுபாடு ஒலியின் அடிப்படையில் நிகழ்வது போலவும் தோன்றும்

மரம் + கொத்தி ⟶ மரங்கொத்தி

கரும் + சினை ⟶ கருஞ்சினை

இச்சொற்களில் உள்ள மகரம் ஙகரமாகவும் ஞகரமாகவும் மாறியதற்கு, க, ச என்ற ஒலிகளின் சூழலே காரணம்.

இத்தகைய ஒலிமாற்றங்களைக் கருதியே தொல்காப்பியர் எழுத்தின் வகையால் புணர்ச்சியை நான்கு வகைப்படுத்தினார்.

உயிர் + உயிர் ⟶ ஆ உண்டு

உயிர் + மெய் ⟶ ஆ நிரை

மெய் + உயிர் ⟶ ஆல் இலை

மெய் + மெய் ⟶ நெல் விதைப்பு

என அவை அமைகின்றன.

"உயிரிறு சொல் முன் உயிர் வருவழியும்
உயிரிறு சொல் முன் மெய் வரு வழியும்
மெய்யிறு சொல் முன் உயிர் வரு வழியும்
மெய்யிறு சொல் முன் மெய் வருவழியும் என்று
இவ்வென அறியக் கிளக்குங் காலை
நிறுத்த சொல்லே குறித்து வருகிளவி - என்று
ஆயிரியல புணர்நிலைச் சுட்டே"

(தொல் - எழுத்து - 108)

## 5.3 புணர்மொழி இயல்பு

இனித் தொல்காப்பியர் சொற்களின் தன்மையால் புணர்ச்சிகளை பாகுபடுத்துகிறார். சொல் வகையால் புணர்ச்சியை நான்கு வகையாகக் காணலாம்.

| நிலைமொழி | + | வருமொழி |
|---|---|---|
| பெயர் | முன் | பெயர் |
| பெயர் | முன் | வினை |
| வினை | முன் | பெயர் |
| வினை | முன் | வினை |

இவ்வாறு தொல்காப்பியர் வகுத்திருப்பது புணர்ச்சி விதிகளை வகுக்க உதவியாக அமைகிறது எனலாம்.

| நிலைமொழி | + | வருமொழி |
|---|---|---|
| பெயர்+பெயர் | - | கொற்றன்நிலம் |
| பெயர் + வினை | - | நெல்விளைத்தான் |
| வினை + பெயர் | - | வாங்கினான் சாத்தான் |
| வினை + வினை | - | வாங்கிவிற்றான் |

5 புணர்ச்சியின் தன்மைகளாகத் தொல்காப்பியர் கூறுகூன யாவை?

புணர்மொழிகளின் தன்மையை வைத்து நால்வகைப்படுத்திய தொல்காப்பியர், புணர்ச்சியின் தன்மையாக 1) திரிபு 2) இயல்பு என்ற இருநிலைகளையும் குறிப்பிகின்றார்.

"அவற்றுள்
நிறுத்த சொல்லின் ஈறாகு எழுத்தொடு
குறித்து வருகிளவி முதல் எழுத்து இயையப்
பெயரோடு பெயரைப் புணர்க்கும் காலும்
பெயரோடு தொழிலைப் புணர்க்கும் காலும்
தொழிலோடு பெயரைப் புணர்க்கும் காலும்
தொழிலொடு தொழிலைப்புணர்க்கும் காலும்
மூன்றே திரிபு இடன் ஒன்றே இயல்பு என
ஆங்கு அந்நான்கே மொழி புணர் இயல்பே"

(தொல் - எழுத்து - 109)

## 5.4 புணர்ச்சித் திரிகள்

புணர்ச்சி,

1 இயல்புப் புணர்ச்சி

2. திரிபுப் புணர்ச்சி

என இருவகைப்படும். இவற்றுள் திரிபுப் புணர்ச்சியாவது விகாரப்புணர்ச்சியாகும். இது மூவகைப்படும்.

1. மெய் பிறிது ஆறல்
2. மிகுதல்
3. குன்றல்

தொல்காப்பியர் மேற்கண்ட மூன்றையும் 'திரிபு' என்ற ஒன்றன் உள்ளே அடக்குவர். எவ்வாறேனும் மொழி புணரும் இயல்பை நான்காக வகுத்துக் காணலாம்.

1. இயல்புப்புணர்ச்சி
2. மெய்பிறிது ஆதல்
3. மிகுதல்
4. குன்றல்

(எ-டு)

1. எலி வளை (இயல்பு)
2. நெற்கதிர் (மெய் பிரிது ஆதல்)
   (ல்)
3. யானைக்கூட்டம் (மிகுதல்)
4. மர வேர் (குன்றல்)

"அவைதாம்
மெய் பிறிதாதல் மிகுதல் குன்றல் என்று
இவ்வென மொழிப திரியும் ஆறே"

(தொல் - எழுத்து - 110)

## 5.5 அடைமொழி மரூஉமொழிப் புணர்ச்சி

இனித் தொல்காப்பியர் அடை மொழியோடு கூடிய சொற்களும் மரூஉச் சொற்களும் புணர்ச்சியின் இடம் பெறலாம் என்ற உண்மையை விளக்குகிறார்.

அடைமொழி

நிலைமொழியும் வருமொழியும் என முன்னர் வகுத்த இரண்டு மொழிகளும் சொல்லடை பெற்றுத் தோன்றினாலும் அவை புணர்ச்சிக்கு உரியனவே.

- ❖ நிலை மொழி அடைகொண்டது.
- ❖ பதினாயிரம் + ஒன்று - பதினாயிரத்தொன்று

  போர்க்கள + பரணி - போர்க்களப்பரணி

6. தொகைச் சொற்கள் அடையாக வரும் காலத்து அவை என்னவாகக் கருதப்படும்?

- ❖ வருமொழி அடைகொண்டது.

  ஆயிரம் + ஒருபது - ஆயிரத்தொருபது

  களிறு + முறச்செவி - களிற்று முறச்செல்வி

  இருமொழி அடைகொண்டது

  பதின்ாயிரம் + ஒருபது = பதினாயிரத்தொருபது

  நெடுஞ்செவி + குறுமுயல் - நெடுஞ்செவிக் குறு முயல்

- ❖ தொகைச்சொற்கள் எல்லாம் அடையாய் வரும் காலத்து ஒரு சொல்லாகக் கருதப்படும்.

  செந்தாமரை + மலர்ந்தது.

  வெண்திங்கள் + எழுந்தது.

  என்பனவும் அவ்வாறு வருவனவே.

  “நிறுத்த சொல்லும் குறித்து வரு கிளவியும்

  அடையொடு தேன்றினும் புணர் நிலைக்கு உரிய”

  (தொல் - எழுத்து - 111)

7. மரூஉக்கள் எவை?

மரூஉ

இலக்கண வழக்காக அல்லாமல் மரூஉவாக வழங்கும் சொற்களும் புணர்ச்சிக்கு உரியனவாம்.

(எ-டு) சோணாடு வென்றது (சோழநாடு)

பூந்தை சென்றார் (பூதன் தந்தை)

“நிலைமொழியும் வருமொழியுமாய்ப் பொருள் இயைபுபடநில்லாமல்” பிரிந்து பின் ஒட்டிப் பொருள் உணர்த்தும் மயக்கச் சொற்களும் புணர்ச்சியில் இடம் பெறும் என்பார் நச்சினார்க்கினியர். இதனை இலக்கணப் போலி என்பர். (எ-டு) மீகண், முன்றில்

“மருவின் தொகுதி மயங்கியல் மொழியும்

உரியவை உளவே புணர்நிலைச்சுட்டே” (தொல் - எழுத்து - 112)

## 5.6 அல்வழி வேற்றுமைப் புணர்ச்சிகள்

பொருளின் அடிப்படையிலும் புணர்ச்சியைப் பாகுபடுத்தலாம். அவ்வாறு பகுப்பது இருவகைப்படும்.

1. அல்வழிப்புணர்ச்சி
2. வேற்றுமைப்புணர்ச்சி

8. பொருள் அடிப்படையில் புணர்ச்சிப் பாகுபாட்டின் இரு வகைகள் யாவை?

வேற்றுமை உருபு மறைந்தோ, வெளிபட்டோ வருமாயின், அது வேற்றுமைப் புணர்ச்சியாகும். வேற்றுமை அல்லாத வழி அல்வழிப்புணர்ச்சியாகும். இவ்விரண்டுவகைப் புணர்ச்சியிலும் எழுத்து மிகுதலும், சாரியை மிகுதலும் நிகழும்.

வேற்றுமைப் புணர்ச்சி

விளக்கோடு - எழுத்து மிகுந்தது

மகவின் கை - சாரியை மிகுந்தது

அவற்றுக்கோடு - எழுத்தும் சாரியையும் மிக்கன

அல்வழிப்புணர்ச்சி

விளக்குறிது - எழுத்து மிகுந்தது.

பனையின் குறை - சாரியை மிகுந்தது.

பனையும் குறையும் என்று பொருள் கொள்ளலாம் அல்லது பனை குறைந்தது என்றும் பொருள் கொள்ளலாம். இங்குப் பனையினது குறை என்று பொருள் கொள்ளக் கூடாது. கொண்டால் வேற்றுமைப் புணர்ச்சி ஆகிவிடும்.

கலத்துக்குறை - எழுத்தும்

சாரியையும் மிக்கன (கலமும் குறையும் என்று பொருள்)

வேற்றுமை குறித்த புணர்மொழிநிலையும்
வேற்றுமை அல்வழிப் புணர்மொழி நிலையும்
எழுத்தே சாரியை ஆயிரு பண்பின்
ஒழுக்கல் வலிய புணரும் காலை

(தொல் - எழுத்து - 113)

## 5.7 உருபுப் புணர்ச்சி

புணர்ச்சியை அல்வழி, வேற்றுமை என்று இருவகையாகப் பகுத்த தொல்காப்பியர், இனி வேற்றுமைப் புணர்ச்சியை விளக்கப் புகுகின்றார். வேற்றுமைப் புணர்ச்சி என்பது உருபுகளை வைத்தே தீர்மானிக்கப்படுகிறது. ஆவே வேற்றுமைப் புணர்ச்சியுள் உருபுகள் வெளிப்பட்டும் நிற்கலாம். தொக்கும் நிற்கலாம். ஆதலால் முதலில் வேற்றுமை உருபுகளை நமக்கு அறிமுகப்படுத்துகிறார் தொல்காப்பியர்.

ஐ ஒடு கு இன் அது கண் எனும்
அவ் ஆறு என்ப வேற்றுமை உருபே

(தொல் - எழுத்து - 114)

என்று வேற்றுமை உருபுகள் ஆறும் சுட்டப்படுகின்றன. உருபுப் புணர்ச்சியின் சிறப்பு விதிகளும் கூறுகிறார் தொல்காப்பியர்.

<u>உருபுப் புணர்ச்சிகளில் ஒற்று மிகுதல்</u>

வல்லெழுத்தை முதலாக உடைய வேற்றுமை உருபுகள் வரும்போது பொருத்தமான இடத்தில் வல்லொற்று மிக்கு வரப்பெறும்.

(எ-டு) ஊர்க்கு, ஊர்க்கண்,
மனைக்கு, மனைக்கண் -
இவை வல்லெழுத்து மிக்கன
"வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு
ஒல்வழி ஒற்று இடை மிகுதல் வேண்டும்."

(- தொல் - எழுத்து - 115)

ஒல்வழி மிகும் என்பதால் அவன்கண், சாத்தன்கண் என்ற இயல்பும் கொள்க. அவற்கு, இவற்கு எனவரும் திரிபுகளையும் கொள்க. தங்கண், எங்கண் என மெல்லெழுத்து வருவதையும் கொள்க என்பர் பின்வந்தோர்.

<u>அது உருபின் அகரம் கெடுதல்</u>

ஆறாம் வேற்றுமை உருபாகிய 'அது' என்பதன் அகரமானது, அகர ஈறுடைய சொல்லின் முன்னர்க் கெடும் . அதாவது அகர ஈற்றுச் சொல் முன்னர் 'அது' உருபின் முதல் கெடும்.

(எ-டு) தம + அது - தமது
நம + அது - நமது
என + அது - எனது

"ஆறன் உருபின் அகரக்கிளவி
ஈறாகு அகர முன்னர்க் கெடுதல் வேண்டும்" (தொல் - எழுத்து - 116)

பெயர்களின் ஈற்றில் உருபு நிற்கும்

பெயர்களைத் தொல்காப்பியர் உயர்திணைப் பெயர் என்றும் அஃறினைப் பெயரென்றும் இருவகைப்படுத்தி அவற்றின் ஈற்றில் வேற்றுமை உருபு நிற்கும் என்பதைக் காட்டுகின்றார்.

"உயிர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்று
ஆயிரண்டென்ப பெயர் நிலைச்சுட்டே" (தொல் - எழுத்து - 117)

பெயர்களின் ஈற்றில் வேற்றுமை நிலைபெறும் என்பதனை,

"வேற்றுமை வழிய பெயர் புணர்நிலையே" (தொல் - எழுத்து - 118)

(எ-டு) சாத்தனை, சாத்தனொடு,
சாத்தற்கு, சாத்தனின்
சாத்தனது, சாத்தன்கண்

என வரும்.

பின்னர் வேற்றுமை இயலில்

"ஈறு பெயர்க்கு ஆகும் இயற்கைய" (தொல் - வேற்றுமையில் - 8)

எனக் கூறுகின்றாரே இது கூறியது கூறல் ஆகாதா எனத் தோன்றலாம். எனினும் இங்கு பெயர் + பெயர், பெயர் + வினை, வினை + பெயர் என்று புணர்ச்சி விதி வகுத்தவர், வினையின் பின்னும் வேற்றுமை ஏற்கக் கூடுமோ என்ற ஐயம் எழக்கூடும் என்றெண்ணித் தெளிவு படுத்தவே வலியுறுத்தினார்.

## 5.8 சாரியைப் புணர்ச்சி

சாரியைகள் வந்து புணர்வதைச் சாரியைப் புணர்ச்சி என்பர்.

9. எவற்றின் பின்னே சாரியை வரும்?

"அவற்று வழி மருங்கின் சாரியை வருமே"
(தொல் - எழுத்து - 119)

என்பதால், பெயர்களின் பின்னே சரியை வரும் என்பதை உணரலாம்.

சாரியைகள்

"அவை தாம்
இன்னே, வற்றே, அத்தே, அம்மே
ஒன்னே, ஆனே அகலே இக்கே
அன்என் கிளவி உளப்படப்பிறவும்
அன்ன என்ப சாரியை மொழிப" (தொல் - எழுத்து - 120)

எனத் தொல்காப்பியர் ஒன்பது சாரியையைக் குறிப்பிடுவார்.

'பிறவும்' என்றமையால் தம், நம், நும், உம், ஞான்று ஏ, ஐ என்பனவும் கொள்க என்பார் நச்சினார்க்கினியர்.

இனிச் சாரியைப் புணர்ச்சிக்கு உரிய சிறப்பு விதிகளைக் காண்போம்.

1. இன்சாரியை

சாரியைகளுள்ளும் இன் சாரியையின் இகரமானது, ஆ எனும் சொல்லின் ஈற்றின் முன் கெடுதலும் உரித்தாகும். கெடாமல் வரவும் பெறும்.

ஆ + இன் + ஐ - ஆவினை - கெடாமல் வந்தது.

ஆ + இன் + வோ்டு = ஆவின் கோடு - கெடாமல் வந்தது.

ஆ + ஐ + - ஆனை - இகரம் கெட்டது

ஆ + இன் + கோடு - ஆன் கோடு இகரம் கெட்டது.

2. னகரம் திரிதல் :

அளவுப் பெயர்களின் முன் நின்ற எண்ணுப் பெயர்களின் இறுதியில் நிற்கும் "இன்" சாரியையின் 'ன' கரம் 'ற' கரமாகத் திரியும்.

எ-டு : பதிற்றகல், பதிற்றுழக்கு எனவரும்

பதிற்றொன்று, பதிற்றேழு

3. இன்முழுவதும் கெடுதல்

இன் என்ற ஐந்தன் உருபு வரப்பெற்றால் அதையடுத்துவரும் இன் சாரியை முழுவதுமாகக் கெடும். அதாவது ஐந்தன் உருவாகிய 'இன்' ஐ அடுத்து இன் சாரியை வராது.

(எ-டு) ஊரின் நீங்கினான் - 'இன்' ஐந்தனுருபு இன்சாரியை பெறவில்லை.

"பிற்காலத்தில் சிறுபான்மை பாம்பின் கடிது தேள்" என்று ஐந்தன் உருபு இன்னும் சாரியை இன்னும் சேர்ந்து வரும்.

"அவற்றுள் இன்னின் இகரம் ஆவின் இறுதி
முன்னர்க் கெடுதல் உரித்தும் ஆகும்" (தொல் - எழுத்து - 121)

"அளபாகு மொழி முதல் நிலை இய உயிர்மிசை
னஃகான் றஃகான் ஆகிய நிலைத்தே" (தொல் - எழுத்து - 122)

"இன்னென உரூஉம் வேற்றுமை உருபிற்கு
இன்என் சாரியை இன்மை வேண்டும்" (தொல் - எழுத்து - 132)

<u>இன் அன் ஆன் ஒன் சாரியைகள்</u>

நான்காம் வேற்றுமை உருபு பெற்றால் னகரவீற்றுச் சாரியைகள் யாவும் றகரமாகத் திரியும்.

(எ-டு) விளவிற்கு - இன் - ஒரு பாறிடு - ஆன்
கோஒற்கு - ஒன் - அதற்கு - அன் எனவரும்
"னஃகான் றஃகான் நான்கன் உருபிற்கு"
(தொல் - எழுத்து - 124)

மேற்சொன்னவற்றுள் ஆன் சாரியை நாள் பெயரை அடுத்து வரும்போது வருமொழி வல்லின முதலாக இருப்பின் னகரம் றகரமாகும். (எ-டு) பரணியான் கொண்டான் என்பது பரணியாற் கொண்டான் என்று திரிந்து வரும்.

இங்கு பரணியிற் கொண்டான் என்று இன்சாரியை திரிதலையும் கொள்க என்பர் நச்சினார்க்கினியர்

"ஆனினகரமும் அதனோரற்றே
நாள்முன் வரூஉம் வல்முதல் தொழிற்கே"
(தொல் - எழுத்து - 126)

<u>அத்துச் சாரியை</u>

அகரவீற்றுச் சொல்லின் முன் அத்துச் சாரியையின் அகரமானது கெடும்.

(எ-டு) மக + அத்து + கை என்பது
மகவத்துக்கை என வராது
மகத்துக்கை என்றே வரும்.

"அத்தின் அகரம் அகரமுனை இல்லை" (தொல் - எழுத்து - 126)

இக்குச்சாரியை

இகர ஈற்றுச் சொல்லின் "இக்குச்" சாரியையின் இகரமானது முன்னர்க் கூறிய அத்துச் சாரியையின் அகரம் கெட்டது போலக் கெடும் .

(எ-டு) ஆடி + இக்கு - கொண்டான் என்பது ஆடியிக்குக்கொண்டான் எனவராது ஆடிக்குக்கொண்டான் என்றே வரும்.

"இக்கின் இகரம் இகரமுனை அற்றே" (தொல் - எழுத்து - 127)

ஐகார ஈற்றுச் சொல்லின் முன்னும் இக்குச் சாரியையின் இகரமானது மேற்சொன்னவாறு கெடும்.

(எ-டு) சித்திரை + இக்கு + கொண்டான் - சித்திரைக்குக்கொண்டான்

"ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும்" (தொல் - எழுத்து - 128)

அக்குச் சாரியை

எவ்வகைப்பட்ட பெயர் முன்னும், வல்லெழுத்து வருமிடத்து அக்குச் சாரியையின் ஈற்றுக் குற்றியலுகரமும் அக்குற்றியலுகரம் ஏறிநின்ற வல்லொற்று அதன்மேல் நின்ற வல்லொற்றும் கெடும். அதாவது அகரம் தவிர்த்த எஞ்சிய எல்லாம் கெடும் என்றதனால் போல அமையும்.

(எ-டு) குன்று + அக்கு + கூகை - குன்றக் கூகை

மன்று + அக்கு + பெண்ணை - மன்றப் பெண்ணை

ஈம் + அக்கு + குடம் - ஈமக்குடம்

தமிழ் + அக்கு - கூத்து - தமிழ்க்கூத்து என வரும்.

"எப்பெயர் முன்னரும் வல்லெத்து வருவழி
அக்கின் இறுதி மெய்மிசையோடும் கெடுமே
குற்றியலுகரம் முற்றத் தோன்றாது" (தொல் - எழுத்து - 129)

அம்முச்சாரியை

அம்முச் சாரியையின் இறுதி மகரமானது க, ச, த வருமொழியாய் வரும்போது ங, ஞ, ந எனத் திரியும்.

(எ-டு) புளி + அம் + கோடு - புளியங்கோடு

புளி + அம் + செதிள் - புளியஞ்செதில்

புளி + அம் + தோல் + புளியந்தோல்

"அம்மின் இறுதி கசத வரூஉங் காலைத்
தன்மெய் திரிந்து ங ஞ ந ஆகும்"
(தொல் - எழுத்து - 130)

வருமொழி முதலில் மெல்லினமும் இடையினமும் வரும்போது அம்முச் சாரியையின் ஈற்று மகரம் கெடும்.

(எ-டு) புளி + அம் + ஞெரி - புளியஞெரி
புளி + அம் + நுனி - புளியநுனி
புளி + அம் + யாழ் - புளியயாழ்
புளி + அம் + விதை - புளியவிதை

"மென்மையும் இடைமையும் வரூஉம் காலை
இன்மை வேண்டும் என்மனார் புலவர்" (தொல் - எழுத்து - 131)

வற்றுச் சாரியை

சுட்டு முதலாகி ஐ காரத்தின் முன் (அவை, இவை, உவை) வற்றுச் சாரியையானது, வகரமெய் கெட அற்று என நின்று புணரும்.

(எ-டு) அவையற்றை
இவையற்றை
உவையற்றை
அவையற்றுக் கோடு

"வஃகான் மெய்கெடச் சுட்டுமுதல் ஐம்முன்
அஃகான் நிற்றல் ஆகிய பண்பே" (தொல் - எழுத்து - 132)

அத்து வற்றுச் சாரியைகள்

அத்து வற்று என்ற சாரியைகளுக்கு மேலே நின்று ஒற்று அழிவதுண்டு. அச்சாரியைகளை அடுத்துவரும் வல்லினம் மிகும்.

"அத்தே வற்றே ஆயிருமொழிமேல்
ஒற்று மெய் கெடுதல் தெற்று என்றற்றே
அவற்று முன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே"
(தொல் - எழுத்து - 134)

(எ-டு) கலம் + அத்து + குறை - கலத்துக்குறை
அவ் + வற்று + கோடு - அவற்றுக்கோடு

இவற்றில் மேல் நின்ற ம், வ் என்ற மெய்கள் கெட்டன. குறை, கோடு என்பனவற்றில் வந்த ககரமெய் மிகுந்தது.

ஆனால் இவ்விதி எல்லா இடத்திற்கும் பொருந்தி வருவதில்லை.

விண் + அத்து + கொட்டும் - விண்ணத்துக் கொட்டும்

வெயில் + அத்து + சென்றான் - வெயிலத்துச் சென்றான்

இருள் + அத்து + கொண்டான் - இருளத்துக்கொண்டான்

என ஒற்று கெடாமல் வருவனவும் உண்டு.

தெற்று என்று கூறிய அதனால் விளவத்துக்கண் என்று அத்தின் அகரம் அகரத்தின் முன் கெடாமல் நிற்றலு உண்டு.

சாரியை பற்றிய பொதுவான செய்திகள்

1. சொற்கள் பெயர் எனவும் வினை எனவும் பகுக்கப்பட்டன. அவை பெயர் + பெயர் என ஒருங்கு நின்று கூடிநின்று இசைத்தலும் செய்யும்

   (எ-டு) பலாப்பழம், பலாவின் வேர்

   பெயர் + வினை எனப்பிரிந்து நின்று இசைத்தலும் செய்யும்.

   (எ-டு) கூழ் குடித்தான் கனி தின்றான்.

2. அவ்வாறு பெயரும் பெயரும் கூடிநின்றும், பெயரும் வினையும் பிரிந்து நின்றும் இசைக்கும்போது வேற்றுமை உருபுகள் வெளிப்பட நின்று சாரியை பெற்று வரும்.

   (எ-டு) பலாவினது பழம்

   மதுவினைப் பறித்தான்

3. வேற்றுமை உருபுகள் வெளிப்பட்டும் மறைந்தும் நின்று சாரியை பெற்று வரும்.

   (எ-டு) வண்டின் கால்,

   வண்டினது கால்.

4. சாரியைகள் தாம் வரவேண்டிய இடத்திற்கு ஏற்ப வழக்கொடு பொருந்தி வரும்.

   (எ-டு) எல்லார் தம்மையும்

   எல்லாவற்றையும்

5. சொற்களைப் பிரித்துக் கண்டால் சாரியை மறையும்

(எ-டு) மரத்தை (மரம் ஐ)

6. சாரியை பெறுதலும் பெறாமையும் ஒடு உருபிடத்தில் நிகழும்

(எ-டு) பூவினொடு, பூவொடு

பெயரும் தொழிலும் பிரிந்து ஒருங்கு இசைப்ப
வேற்றுமை உருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்
ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கொடு சிவணிச்
சொற்சிதர் மருங்கின் வழிவந்து விளங்காது
இடைநின்று இயலும் சாரியை இயற்கை
உடைமையும் இன்மையும் ஒடுவயின்ஒக்கும்

(தொல் - எழுத்து - 133)

என்ற நூற்பாவின் வழித் தொல்காப்பியர் பின்வரும் கருத்துக்களை முன் வைக்கிறார்.

1. வேற்றுமை உருபு வெளிப்பட்ட வழி சாரியை வந்து நிற்கும்
2. வேற்றுமை உருபு மறைந்து நிற்கிற தொகையிலும் சாரியை நிற்கும்.
3. ஒட்டிற்கு ஒழுகிய வழக்கொடு சாரியை பொருந்தும்.
4. சொற்சிதர் மருங்கில் சாரியை மறையும்.

## சாரியை பற்றி உரையாசிரியர்களின் கருத்துக்கள்

"வேறாகி நின்ற இருமொழியும் தம்மிற் சார்வதற் பொருட்டு இயைந்து நிற்பது சாரியை" என்பார் நச்சினார்க்கினியர். சிலப்பதிகார உரையில் சாரியையாவது சொல் தொடர்ந்து செல்லும் நெறிக்கண் நின்று அதற்குப் பற்றுக் கோடாகச் சிறிது பொருள் பயந்தும் பயவாததுமாய் நிற்பது என்பார் அடியார்க்கு நல்லர். தொல்காப்பியர் இடையியலில் சாரியை பற்றிக் குறிப்பிடும்போது,

"புணரியல் நிலையிடைப் பொருள்
நிலைக்கு உதவுநவும்"

என்று சுட்டுவார். பொருள் நிலைக்குச் சாரியை உதவுகின்றதா என வினவினால்,

சே என்பது மரம், மாடு என்ற
இருபொருளையும் தரும்.
சே + கோடு என்ற புணர்மொழி

மரத்தின் கிளையைக் குறிப்பதா? மாட்டின் கொம்பைக் குறிப்பதா என்ற ஐயம் எழும். இங்குச் சாரியை துணை புரிகிறது.

சேங்கோடு - மரத்தின் கிளை

சேவின் கோடு - மாட்டின் கொம்பு

பொருள் நிலையை வேறுபடுத்தச் சாரியை உதவுவதை நம்மால் அறிய முடிகிறது.

## 5.9 எழுத்துச்சாரியை

அ, ஆ, இ, ஈ என்பதனை ஆனா, ஆவன்னா, ஈனா, ஈயன்னா என குழந்தைகள் நிலையில் ஒலிக்கக் கற்றுத்தரக் காண்கிறோம். இவ்வாறு ஒவ்வோர் எழுத்தோடும் ஒலிக்கப்படும் னா என்பது ஒரு வகையில் எழுத்துச் சாரியையே. இது போல் அகரம், ஈகாரம், ஐகான் என்பவற்றில் கரம், காரம், கான் சாரியைகளைக் காணமுடியும். இவை புணர்ச்சிச் சாரியைகள் அல்ல. எழுத்துச் சாரியைகள் ஆகும். சாரியை என்ற பெயர் ஒப்புமை நோக்கித் தொல்காப்பியர் இவற்றைப் புணர்ச்சிச் சாரியைகளை அடுத்து வைக்கிறார்.

"காரமும் கரமும் கானொடு சிவணி
நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை"

(தொல் - எழுத்து - 135)

இவை நேரத் தோன்றும் என்றமையால் சிதைந்த வழக்கில் உள்ள 'ஆனம்' 'ஏனம்' 'ஓனம்' என்ற எழுத்துச் சாரியைகளும் கடியப்படா (ஒத்துக்கப்படாது) என்று இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் உரைப்பர்.

<u>நெட்டெழுத்து</u>

"அவற்றுள்"
கரமும் கானும் நெட்டெழுத்து இலவே" (தொல் - எழுத்து - 126)

நெட்டெழுத்து காரச்சாரியை பெறும் என்பது புலனாகிறது.

(எ-டு) ஆகாரம், ஈகாரம் ஊகாரம், ஐகாரம் எனவரும்

<u>குற்றெழுத்து</u>

"வரன்முறை மூன்றும் குற்றெழுத்து உடைய" (தொல் - எழுத்து - 126)

குற்றெழுத்து கரம், காரம், கான் மூன்று சாரியைகளையும் பெறும்.

(எ-டு) அகரம், அகாரம், அஃகான் எனவரும்.

ஐ ஔ

நெடில்களுள்ளே ஐகாரமும் ஔகாரமும் கான் சாரியையும் பெறும்

(எ-டு) ஐகான், ஔகான்,

"ஐகார ஔகாரங் கானொடுந்தோன்றும்" (தொல் - எழுத்து - 138)

## 5.10 உயிரெழுத்துப்புணர்ச்சி

தொல்காப்பியர் உயிர் மயங்கியலில் உயிர் + மெய் புணர்ச்சியை உரைப்பார். புள்ளி மயங்கியலில் மெய் + மெய் புணர்ச்சியை உரைப்பார்.

1. மெய் + உயிர் என்ற புணர்ச்சி உயிர்மெய் எழுத்துப் போல் புணர்வது. அது அளவற்ற பெருக்கமுடையது.
2. உயிர் + உயிர் என்ற புணர்ச்சி

உடம்படுமெய் வேண்டுகிற சிறப்புடையது. எனவே இவ்விரண்டை மட்டும் புணரியலில் எடுத்துரைக்கிறார் தொல்காப்பியர்.

மெய் உயிர்

"புள்ளி ஈற்று முன் உயிர் தனித்து இயலாது
மெய்யொடும் சிவனும் அவ்வியல் கெடுத்தே" (தொல் - எழுத்து - 130)

என்பதில் மெய்யீற்றின் முன்வரும் உயிர், அம்மெய்யொடு பொருந்தி நிற்கும் என்பதனை உரைக்கிறார்.

(எ-டு) பால் + ஆடை - பாலாடை
சொல் + ஓவியம் - சொல்லோவியம்
ஆல் + இலை - ஆலிலை
நாள் + அரும்பு - நாளரும்பு
வான் + உலகு - வானுலகு

சேர்ந்த அவ்வுயிர் பிரிவதாயின் மீண்டும் அது முன்பே போல் தன்னுருவைப் பெற்று நிற்கும்.

குயிலிசை + குயில் + இசை
மலரடி + மலர் + அடி

எனப் பிரிந்து நிற்கும்

"மெய்யுயிர் நீங்கின் தன்உரு ஆகும்" (தொல் - எழுத்து - 140)

உயிர் உயிர்

உயிரும் + உயிரும் இணைய இடையே ஓர் உடம்படுமெய் தேவைப்படுகிறது

"எல்லாமொழிக்கும் உயிர் வருவழியே
உடம்படுமெய்யின் உருபுகொளல் வரையார்"

(தொல் - எழுத்து - 141)

என்பது தொல்காப்பியர் நூற்பாவை நோக்கினால் தொல்காப்பியர் காலத்தில் உடம்படு மெய் சேர்த்தல் கட்டாயமில்லை எனத் தோன்றுகிறது.

உடம்படுமெய் கோடல் - ஒருதலை அன்று என்பது சொல்லப்படும்,

கிளி, அரிது, மூங்கா இல்லை

எனவும் வரும் என்பர் இளம்பூரணார் இதனால்,

கிளி + ஐ - கிளியை

வர + இல்லை - வரவில்லை

சே + அடி - சேயடி

என ஒருமொழியாகும் இடங்களில் மட்டுமே உடம்படுமெய்யை ஆளுதல் போதுமானது, உயர்ந்தவற்றால், கூறியவதனால் என்று எழுதத் தேவையில்லை என்றும் கொள்ளலாம்.

10.இசைப்படுத்தும் போது வேற்றுமைப் பொருள் வருதற்குச் சான்று தருக.

## 5.II. புணர்ச்சியில் பொருள் வேறுபாடு

சொற்களின் அலகுகள் சந்திக்கும் இடம் பொருள் குறிப்பைத் தருவதுண்டு எழுத்துகளின் தொடர்ச்சி அவ்வாறே இருக்கும். ஆனால் உச்சரிப்பின்போது, இசைப்படுத்தும் வேற்றுமையால் பொருள் மாறிவிடக் கூடும்.

புத்தியில்லாதவன்

புத்தியில் ஆதவன்

எனும் நிலையில் பொருள் வேறுபடுவதைக் காணலாம்.

இதனைத் தொல்காப்பியர்,

"எழுத்தோரன்ன பொருள் தெரிபுணர்ச்சி
இசையின் திரிதல் நிலைஇய பண்பே" (தொல் - எழுத்து - 142)

என்பார்.

எ-டு)

செம்பொன்பதின்தொடி < செம்பு + ஒன்பதின் + தொடி
செம்பொன் + பதின் + தொடி

குன்றேறாமா < குன்று + ஏறா + மா / குன்றேறா + மா

தாமரைக்கணியார் < தாமரை + கணியார் / தாம் + அரைக்கு + அணியார்

தங்கச்சிவந்தியா < தங்க + சிவந்தியா / தங்கச்சி + வந்தியா

இங்கெல்லாம் எழுத்து ஓரன்ன பொருள் தெரு புணர்ச்சி இசையில் திரிதலால் பொருள் வேறுபடுதல் நிகழ்கிறது. இதில் எழுத்துக்களுக்குள் எதுவும் இல்லை. பிரித்துக்கையாளும் உத்தியே சிறப்புற்று நிற்கிறது. முன்னத்தால், சூழலால் பொருள் வேறுபடுகிறது. எனவே இதுவும் ஒரு புணர்ச்சி வாயில் புதிய எழுத்தைச் சேர்த்தால் சந்தி வேறுபாட்டால் பொருளை வேறுபடுத்துதல் ஆகும்.

"அவை தாம்
முன்னப்பொருள புணர்ச்சிவாயின்
இன்ன என்னும் எழுத்துக்கடன் இலவே"

(தொல் - எழுத்து - 143)

என்பார் தொல்காப்பியர்

இவை எல்லாவற்றையும் அடுக்குவதுபோல "எழுத்துக்கடன் இல முன்னப்பொருள் இசையில் திரிவன" என்று வகுத்தார் தொல்காப்பியர்.

இவ்வாறாகப் புணரியலில் மொழிகளின் முதல் ஈறு, நிலைமொழி வருமொழி, புணர்மொழி இயல்பு, புணர்ச்சியில், திரிபுகள், அடைமொழி, மரூஉமொழி, அல்வழி, வேற்றுமை, உருப்பு, சாரியை ஆகியன புணரும் தன்மைகளையும், புணர்ச்சியில் பொருள் வேறுபாடு பற்றித் தொல்காப்பியர் கூறிய கருத்துக்களையும் அதற்கு உரையாசிரியர் தம் விளக்கங்களையும் கூறக் கண்டோம். இனி அடுத்துத் தொகை மரபு பற்றிக் காணவிருக்கிறோம்.

## I சுயதிறனறி வினாவுக்குரிய விடைகள்

1. முதல் ஈறு
2. புள்ளி பெறும்
3. உயிர்மெய்யாகவே
4. இருவகை. நிலைமொழி, வருமொழி
5. திரிதல், இயல்பு,
6. ஒருசொல்லாக
7. இலக்கண வழக்கு அல்லாதன
8. அல்வழி. வேற்றுமைப்புணர்ச்சி
9. பெயர்களின் பின்னே
10. புத்தியில் ஆதவன் - புத்தியில்லாதவன்

## பயிற்சி வினாக்கள்

## II குறு வினாக்கள்

1. புணர் மொழி இயல்பு குறித்து எழுதுக
2. புணர்ச்சித் திரிபுகள் யாவை?
3. அடைமொழி மரூஉ மொழிப்புணர்ச்சி பற்றி எடுத்துரைக்க.
4. உருபு புணர்ச்சி பற்றி விளக்குக.
5. உயிரெழுத்துப் புணர்ச்சி எவ்வகைகளில் அமைகின்றன?
6. புணர்ச்சியில் பொருள் வேறுபடுமாற்றைச் சான்றுடன் விளக்குக.

## III நெடு வினாக்கள்

1. மொழிகளின் முதலும் ஈறும் பற்றித் தொல்காப்பியர் உரைப்பனவற்றை விளக்குக`
2. நிலைமொழியும் வருமொழியும் குறித்து விவரிக்க.
3. சாரியைப் புணர்ச்சி பற்றிக் கட்டுரை வரைக.

## அலகு - 6

# தொகை மரபு

6.1 தொகை மரபுச் செய்திகள்

6.2 உபிரீறு மெய்யீறுகளின் பொதுப் புணர்ச்சி வருமொழியால் ஏற்படும் திரிபு

6.3 உயிரீறுமெய்யீறுகளின் சிறப்புப் புணர்ச்சி

6.4 அளவுப்பெயர்கள், நிறைப்பெயர்கள், எண்ணுப் பெயர்கள்

3.5 தொகை மரபுக்குப் புறனடை

சுயதிறனறி வினாக்கள்

# தொகை மரபு

தொல்காப்பியம் பற்றிய பொதுச் செய்திகளையும் நூல் மரபு, மொழி மரபு, பிறப்பியல், புணரியல் பற்றிய தொல்காப்பியரின் கருத்துக்களை முதல் ஐந்து பாடங்களில் கண்டு தெளிவு பெற்றோம். இனி அதன் தொடர்ச்சியாக ஆறாவது பாடமான தொகை மரபு பற்றி இப்பாடத்தில் காணவிருக்கிறோம்.

## நோக்கம்:

விரிந்து முடிவனவற்றையெல்லாம் தொகுத்து முடித்தலின் தொகை மரபு என்பதைத் தெரிந்துகொள்கிறான்.

### துணைமை நோக்கம்:

இருபத்து நான்கு ஈற்றினும் உயிரீறு மெய்யீறுகளின் பொதுப்புணர்ச்சி பற்றி அறிந்து கொள்கிறான்.

உயிரீறு மெய்யீறுகளின் சிறப்புப் புணர்ச்சி பற்றிப் புரிந்துகொள்கிறான்.

## 6.1 தொகை மரபுச் செய்திகள்

தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் ஐந்தாவதாகக் காணப்படும் இயல் தொகை மரபாகும். இருபத்து நான்கு ஈற்றினும் விரிந்து முடிவனவற்றையெல்லாம் தொகுத்து முடித்தலின் தொகை மரபு எனப்பட்டது. என்பர் இளம்பூரணர்.

வருமொழி முதலின் திரிபுகளையும் சாரியைகளையும் தொகுத்துக்கூறும் பகுதியே இது, நிலை மொழி ஈறுகள் எல்லாவற்றிற்கும் புணர்ச்சியில் விதி விளக்கம் கூறும் தொல்காப்பியர் அவற்றுள் அடங்காத வருமொழித் திரிபுகளை மரபு நெறிகளைத் தொகுத்துச் சொல்ல ஒரு தனி இயல் தேவைப்படுவதால் தொகை மரபு எனத்தனியே ஓர் இயல் வகுத்தார்.

தொகை மரபுச் செய்திகளைக் கீழ்க்கண்டவாறு இரு வகைப்படுத்தலாம்.

1. உயிரீறு மெய்யீறுகளின் பொதுப்புணர்ச்சி
2. உயிரீறு, மெய்யீறுகளின் சிறப்புப் புணர்ச்சி

1. தொகை மரபுச் செய்திகளை எவ்வாறு வகைப்ப டுத்தலாம்?

## 6.2. உயிரீறு மெய்யீறுகளின் பொதுப்புணர்ச்சி வருமொழியால் ஏற்படும் திரிபு

மெல்லினம் தோன்றுதல்

உயிரீற்றுச் சொற்களோ மெய்யீற்றுச் சொற்களோ நிலைமொழியாக நிற்குமிடத்துக் கசதப என்பவற்றை முதலாக உடைய வருமொழிகள் வரும்போது அப்புணர்ச்சியின் கண் இடையே மெல்லின எழுத்துக்கள் தோன்றும். அம்மெல்லின எழுத்துக்களாவன க, ச, த பக்களுக்கு முறையே ங, ஞ, ந, ம எனவரும்.

இவ்விதியும் அத்தகைய மரபுடைய சொற்களுக்கு மட்டுமே பொருந்தி வரும். அம்மரபற்ற சொற்களில் வல்லியனம் மிகுதலுண்டு.

(எ-டு) விள + கோடு - விளங்கோடு
பூ + சோலை - பூஞ்சோலை
விள + தோல் - விளந்தோல்
தட + பொய்கை - தடம்பொய்கை

மெல்லினம் தோன்றும் என்று கூறியமையால் முன்னமே தோன்றி நின்ற மெல்லினம் இவ்வாறே க ச த ப என்ற வருமொழிகள் வர, முறையே ங, ஞ, ந ம என்று திரியும் என்பதையும் கொள்ள வேண்டும்.

(எ-டு) மரம் + குறிது - மரங்குறிது
முறம் + சிறிது - முறஞ்சிறிது
பழம் + தீர்ந்தது - பழந்தீர்ந்தது
குளம் + பெரிது - குளம்பெரிது
வெரிந் + குறை - வெரிங்குறை
வெரிந் + புறம் - வெரிம்புறம்

க ங
ச ஞ என்றும்,
த ந
ப ம என்றும்

மெல்லினம் தோன்றுவதை உணரலாம்.

"க ச த ப முதலிய மொழி மேல் தோன்றும்
மெல்லெழுத்து இயற்கை சொல்லிய முறையான்
ங ஞ ந ம என்னும் ஒற்றாகும்மே
அன்ன மரபின் மொழிவயினான"

(தொல் - எழுத்து - 114)

வருமொழி இயல்பாதல்

நிலைமொழி முன்னர் ஞ, ந. ம, ய, வ என்னும் முதல் எழுத்தை உடைய வருமொழிகளும், உயிர் முதலாகிய வருமொழிகளும் வந்தால் அவ்வழியிலும் வேற்றுமையிலும் இயல்பாகவே முடியும்.

உயிரீற்றுச் சொல் முன் ஞ, ந, ம, ய வ என்பனவும் உயிரும் வருதல்.

| (எ-டு) | அல்வழி | வேற்றுமை |
|---|---|---|
| | பலா + ஞான்றது | பலா + நீட்சி |
| | பலா + நீண்டது | பலா + மாட்சி |
| | பலா + மாண்டது | பலா + வன்மை |
| | பலா + யாது | பலா + அழகு |
| | பலா + வலிது | பலா + உயர்ச்சி |
| | பலா + உயர்ந்தது | |
| | பலா + ஒடிந்தது | |

மெய்யீற்றுச் சொல்முன் ஞ, ந, ம, ய, வ என்பனவும் உயிரும் வருதல்

| | |
|---|---|
| தாழ் + ஞான்றது | தாழ் + நீட்சி |
| தாழ் + நீண்டது | தாழ் + மாட்சி |
| தாழ் + மாண்டது | தாழ் + வன்மை |
| தாழ் + வலிது | தாழ் + அழகு |
| தாழ் + உயர்ந்தது | தாழ் + உயர்ச்சி |
| தாழ் + ஒடிந்தது | |

என மேற்கண்டவை இயல்பாகவே முடிந்தன.

"ஞ ந ம ய வ எனும் முதலாகுமொழியும் உயிர் முதலாகிய மொழியும் உளப்பட அன்றி அனைத்தும் எல்லா வழியும் நின்ற சொல் முன் இயல்பாகும்மே" (தொல் - எழுத்து - 145)

எனவே, நிலைமொழி முன் ஞ, ந, ம, ய, வ உயிர் ஆகியவற்றை முதலாக உடைய வருமொழி வந்தால் அவை இயல்பாகும்.

மெல்லெழுத்து உறழ்ந்து வருதல்

முன்னர்க் கூறப்பட்ட ஞ, ந, ம, ய, வ என்ற வருமொழிகளுள்ளே மெல்லெழுத்துகளாகிய ஞ, ந, ம என்ற மூன்றும் இயல்பாக முடிதலோடு தொடர் மொழியில் உறழ்ந்தும் முடியப்பெறும்.

எ-டு

கதிர் + ஞெரி < கதிர் ஞெரி / கதிர்ஞ்ஞெரி

கதிர் + முரி < கதிர் முரி / கதிர்ம்முரி

இதழ் + நுனி < இதழ்நுனி / இதழ்ந்நுனி

கதிர் + நுனி < கதிர் நுனி / கதிர்ந்நுனி

இதழ் + ஞெரி < இதழ் ஞெரி / இதழ்ஞ்ஞெரி

கதிர் இதழ் என்பன தொடர் மொழிகள் இவற்றின் உறழ்ச்சிகண்டோம். பிற்காலத்தில் ஓரெழுத்து ஒரு மொழியிலும் ஈரெழுத்து ஒரு மொழியிலும் இவ் உறழ்ச்சி இடம் பெற்றது.

2. பூ எனும் ஓரெழுத்து மொழி எவ்வாறு புணரும்?

ஓரெழுத்து ஒருமொழி : பூ ஞெரி

பூஞ்ஞெரி

பூநுனி

பூந்நுனி

ஈரெழுத்து ஒருமொழி :

காய்முரி, காய்ம்முரி

செய்நன்றி, செய்ந்நன்றி

மெய்மயக்கம், மெய்ம்மயக்கம்

"அவற்றுள்

மெல்லெழுத்து இயற்கை உறழினும் வரையார்

சொல்லிய தொடர்மொழி இறுதியான " (தொல் - எழுத்து - 146)

3. வருமொழி முதலில் யாவுக்கு மாற்றாகும் எழுத்து எது?

வருமொழி முதல் திரிதல் யாவும் ஞாவும் ஒரு தன்மையை

ணகர, னகர ஈற்று நிலைமொழிகளின் முன்னர் வரும் வினைச்சொற்களில் யாவும் ஞாவும் ஒரு தன்மையன ஒன்றுக்கொன்று மாற்றாக வரக்கூடியன

மண் யாத்த - மண்ஞாத்த

பொன் யாத்த - பொன் ஞாத்த

வினைக்கண் யாவும் ஞாவும் ஒரு தன்மையன என்றமையால் பெயர்க்கண் இம்மாற்றம் நிகழ்வதில்லை. மண்யாமை - மண் ஞாமை என்று ஆவதில்லை. 'யா' முற்கூறி ஞா பிற்கூறிய என்றதனல் யகரமே ஞகரம் ஆகும். ஞ கரம் யகரமாவதில்லை. என்பர். இதனை உரையாசிரியர்கள் யாச் சென்ற வழி ஞாச் செல்லும் ஞாச் சென்ற வழி யாச் செல்லாது என்பர். மலையாளத்திலும் யான் ஞான் - என்றாவதைக் காணலாம்.

"ணனவென் புள்ளிமுன் யாவும்ஞாவும்

வினையோ ரனைய என்மனார் புலவர்"

(தொல் - எழுத்து 147)

4. ண,ன அல்வழியில் எவ்வாறு வரும்?

ணகரம் னகரம் அல்வழியில் இயல்பாதல்

நிலை மொழி ஈற்றில் நிற்கும் ணகர, னகரங்கள் வருமொழியில் மொழி முதலாகும் எழுத்து எதுவரினும் அல் வழிப் புணர்ச்சியில் எத்திரியும் பெறுவதில்லை.

(எ-டு)

மண் + கடிது - மண் கடிது, பொன் + கடிது - பொன்கடிது

மண்+சிறிது - மண்சிறிது பொன் + சிறிது - பொன்சிறிது

மண் + தீது - மண்டீது பொன் + தீது - பொன்றீது

மண் + பெரிது - மண்பெரிது பொன் + பெரிது - பொன்பெரிது

சிறுபான்மை, ஈற்று ணரகம் திரியும் என்பர் உரையாசிரியர்

சாண் + கோல் - சாட் கோல்

"மொழி முதலாகும் எல்லா எழுத்தும்

வ்ருவழி நின்ற ஆயிரு புள்ளியும்

வேற்றுமை அல்வழித் திரிபுடன் இலவே" (தொல் - எழுத்து - 148)

ணகர, னகரஈறுகள் வேற்றுமையிலும் இயல்பாதல்

மேற்கூறிய நிலை மொழி ஈற்று ணகர, னகர ஈறுகள் வருமொழி முதலில் வல்லெழுத்து வராத போது வேற்றுமைப்புணர்ச்சியிலும் இயல்பாகவே முடியும்.

(எ-டு) மண் + ஞாற்சி - மண்ஞாற்சி

மண் + நீட்சி - மண் நீட்சி

பொன் + யாப்பு - பொன் யாப்பு

பொன் + வடிவு - பொன் வடிவு

"வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத்து அல்வழி

மேற்கூறு இயற்கை ஆவயினான" (தொல் - எழுத்து - 149)

வருமொழி முதல் திரிதல்

ல, ன முன் த நக்கள் திரிதல்

ல ன முன்னர் வரும் த, ந என்ற மெய்கள் முறையே ற, ன ஆகும்.

(எ-டு) கல் + தீது - கஃறீது

பொன் + தீது - பொன்றீது

கல் + நன்று - கன்னன்று

பொன் + நன்று - பொன்னன்று

"லனவென வரூஉம் புள்ளி முன்னர்

த ந என வரின் றன ஆகும்மே" (தொல் - எழுத்து - 150)

ண ள என்ற மெய்களின் முன்னர் வரும் த, ந முறையே ட, ண எனத்திரியும்

ண ள முன் த, ந-க்கள் திரிதல்

(எ-டு)

திண் + தேர் - திண்டேர்

மண் + தீது - மண்டீது

மண் + நன்று - மண்ணன்று

முள் + தீது - முஃடீது, முட்டீது

முள் + நன்று - முண்ணன்று

ண ள வென்புள்ளிமுன் டண வெனத் தோன்றும் (தொல் - எழுத்து - 151)

## 6.3 உயிரீறு மெய்யீறுகளின் சிறப்புப் புணர்ச்சி

முன்னிலைக்கிளவி

முன்னிலைக்கிளவிக்குப் பொது விதி

உயீரீறாகிய முன்னிலைக்கிளவியும் புள்ளி இறுதியாகிய முன்னிலைக் கிளவியும் வல்லெழுத்து வரும் போது இயல்பு உறழ்ச்சி இரு நிலையும் பெறும். நட, வா, மடி, சீ, விடு என்றெல்லாம் வருகின்ற உயிரிறுதி முன்னிலைக் கிளவிகளும் உண், தின், ஈ, இ கேள், செல் என்றெல்லாம் வருகின்ற புள்ளியிறுதி முன்னிலைக் கிளவிகளும் தமிழிலில் ஏராளம் உண்டு. இவற்றை நிலைமொழி ஈற்றின் அடிப்படையில் பேசுவதனால் பல இடங்களில் எடுத்துக் கூற நேரிடும். இயல்பாகவே இவ்விறுதிகள் பொது நியதியைப் பின்பற்றுவதால் தொல்காப்பியர் தொகுத்துப் பேசுகிறார். தொகை மரபு என்ற பெயர் பொருத்தமாக அமைகிறது.

உயீரீறாகிய முன்னிலைச் சொல்லும் புள்ளி ஈறாகிய முன்னிலைச் சொல்லும் வல்வெழுத்து வரும்போது இயல்பாகவும் நிற்கும் உறழ்ச்சி யாவதும் உண்டு.

இயல்பு : எறிகொற்றா எறிசாத்தா

கொணாகொற்றா, கொணாதேவா

உண்கொற்றா, தின் சாத்தா

உறழ்ச்சி : நடகொற்றா, நடக்கொற்றா

ஈர்கொற்றா, ஈர்க்கொற்றா

"உயிரீறாகிய முன்னிலைக் கிளவியும்
புள்ளியிறுதி முன்னிலைக் கிளவியும்
இயல்பாகு நவும் உறழ்பாகு நவுமென்று
ஆயீரியல வல்லெழுத்து வரினே"

(தொல் - எழுத்து - 152)

முன்னிலைக் கிளவிக்குச் சிறப்பு விதி

ஔகார ஈற்றுச் சொல்லும் ஞ், ந், ம், வ என்ற இப்புள்ளியீற்றுச் சொற்களும், குற்றியலுகரவீற்றுச் சொற்களும் முன்னிலை மொழிக்கண் முன் போலத் தோன்றாது.

குற்றியலுகர ஈறு ஒழித்துப் பிறஎல்லாம் நிலை மொழி உகரம் பெற்று வருமொழி வல்லெழுத்து உறழ்ந்து முடிதலும் குற்றியலுகர ஈறு வருமொழி வல்லெழுத்து மிக்குமுடிதலும் கொள்க.

(எ-டு)

கௌவு கொற்றா, கௌவுக்கொற்றா,
உரினு கொற்றா, உரினுக்கொற்றா
பொருநு கொற்றா, பொருநுக்கொற்றா
திருமுகொற்றா, திருமுக்கொற்றா,
தெவ்வு கொற்றா, தெவ்வுக்கொற்றா,
கூடுகொற்றா, கூடுக்கொற்றா

"ஔவென வரூஉம் உயிரிறு சொல்லும்
ஞ ந ம வ என்னும் புள்ளியிறுதியும்
குற்றியலுகரத் திறுதியும் உளப்பட
முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே" (தொல் - எழுத்து - 153)

5. உயர்திணைப் பெயர் இருவழியிலும் எவ்வாறு வரும்?

உயர்திணைப் பெயர்

1. உயர்திணைப் பெயர்கட்கு விதி

உயிர் ஈறாகிய உயர்திணைப் பெயரும், புள்ளியிறுதியாகிய உயர்திணைப் பெயரும் எவ்வெழுத்து வரினும் அல்வழி வேற்றுமை ஆகிய இரு வழியிலும் இயல்பாகவே வரும்.

அல்வழி : நம்பிகுறியன்

நங்கை சிறியள்

நம்பி தீயன்

நங்கை பெரியவள்

அவன் வலியன்

அவள் யாவள்?

<u>வேற்றுமை</u>

நம்பி கை

நம்பி செவி

நங்கை தலை

அவள் புறம்

இவற்றோடு உயர்திணைப் பொருள் இயல்பின்றி முடிபவையும் கொள்ள வேண்டும் என்பர் இளம்பூரணர்.

கோலிகக் கருவி

வண்ணாரப் பெண்டிர்

ஆசீவகப்பள்ளி என இவை ஈறு கெட்டு வல்லெழுத்து மிக்கன.

குமரகோட்டம், குமரக்கோட்டம் பிரமகோட்டம், பிரமக்கோட்டம்,

என ஈறு கெட்டு வல்லெழுத்து உறழ்ந்து முடிவனவற்றையும் கொள்ள வேண்டும் என்பார் இளம்பூரணர்.

தொல்காப்பியம்

"உயிரீறாகிய உயர்திணைப்பெயரும்
புள்ளியிறுதி உயர்திணைப்பெயரும்
எல்லா வழியும் இயல்பெனமொழிப" (தொல் - எழுத்து - 154)

எனக் குறிப்பிடுகிறது.

இகர வீற்று உயர்திணைப்பெயர்

முன்னர்க் கூறிய உயர்திணைப்பெயர்களால் இகரவீற்று உயர்திணைப் பெயர்கள் இரு வழியிலும் திரிந்து முடியவும் பெறும்.

| வேற்றுமை | அல்வழி |
|---|---|
| எட்டிப்பூ | நம்பிக்கொல்லன் |
| காவிதிப்பூ | நம்பிப் பிள்ளை |
| நம்பிப்பேறு | |

என இருவழியிலும் மிக்கன.

"அவற்றுள்
இகர வீற்றுப்பெயர் திரிபு இடனுடைத்தே" (தொல் - எழுத்து - 155)

6. விரவுப்பெயர் என்றால் என்ன?

2. அஃறிணை, விரவுப் பெயருக்கு விதி

விரவுப்பெயராவது, இருதிணைக்கும் உரிய பொதுப்பெயர் சாத்தன் என்ற பெயரை உயர்திணைக்கும் இடலாம். எருமைபோன்ற அஃறிணைக்கும் இடலாம். அதனால் இப்பெயர் விரவுப்பெயர் எனப்பட்டது. இத்தகைய பெயர்கள் புணர்ச்சியில் உயர்திணைப்பெயர் போன்றே இயல்பாக முடியவும் பெறும்.

வேற்றுமை

சாத்தன் செவி

அல்வழி

சாத்தன் குறியன்

சாத்தன் குறியது

"அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார்உளவே"

(தொல் - எழுத்து - 156)

மூன்றாம் வேற்றுமை

வல்லெழுத்து மிகும் என்று கூறப்பட்ட விதியை உடைய புள்ளியீற்றுச்சொற்களும், உயிரீற்றுச் சொற்களும் நிலைமொழியாக வரும்போது அவற்றை அடுத்துத் தொழிலைக் குறிக்கும் வினைச்சொற்கள் வருமொழியாக வந்தால், அவ்விதியை மீறி இயல்பாதல் உறழத்தோன்றல் என்ற இரண்டு முறையிலும் அமையும். இந்த நியதி மூன்றாம் வேற்றுமைக்கு உரியது. எனவே அம்முறை இரண்டும் வேற்றுமை போற்றல் வேண்டும்.

வல்லெழுத்து மிக வேண்டும் என்று கூறப்படும் தொகை நிலை

சூர்க்கோள்

நாய்க்கோள்

வளிக்கோள்

அவ்விதியை மீறி இயல்பாதல்

நாய் கோட்பட்டான்

புலி கோட்பட்டான்

உறழ்ச்சி

சூர் கோட்பட்டான்

சூர்க்கோட்டான்

வளி கோட்பட்டான்

வளிக் கோட்பட்டான்

இக்கருத்து புள்ளி, உயிர் என்னும் பல இறுதிகளைப் பெற்ற சொற்களுக்கும் பொதுவாக அமைவதால் தொகை மரபில் கூறினார் எனலாம். அரசன் கட்டினான் என்ற தொடரில் அரசன் கருத்தா, மூன்றாம் வேற்றுமை உருபேற்கும் போதும் அது கருத்தா ஆவதுண்டு அப்போது கட்டினார் என்ற தொழிற்சொல் கட்டப்பட்டது என்று தம்மினாகிய வினைச்சொல்லாக மாறும்.

"புள்ளி இறுதியும் உயிரிறு கிளவியும்
வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையால்
நம்மினாகிய தொழிற்சொல் முன்வரின்
மெய்ம்மை ஆகலும் உறழத் தோன்றும்.
அம்முறை இரண்டும் உரியவை உளவே
வேற்றுமை மருங்கில் போற்றல் வேண்டும்" (தொல் -எழுத்து - 157)

இரண்டாம் வேற்றுமை

1. இரண்டாம் வேற்றுமைத் திரிபுகள்

இரண்டாம் வேற்றுமை உருபு தொக்கிவரும் புணர்ச்சி, பிற வேற்றுமைப் புணர்ச்சியினின்றும் வேறுபட்டு அமைகிறது. அதனை இங்கு உணர்த்துகிறார் தொல்காப்பியர்.

1. மெல்லெழுத்து மிக வேண்டிய இடத்தில் வல்லெழுத்து மிகுதல்

(எ-டு) விள + கோடு - விளக்கோடு (விளவினது கோடு)

விள + குறைத்தான் - விளக்குறைத்தான் (விளவைக் குறைத்தான்)

2. வல்லெழுத்து மிக வேண்டிய இடத்து மெலெழுத்து மிகுதல்

(எ-டு) மரம் + கோடு - மரக்கோடு

மரம் + குறைத்தான் - மரங்குறைத்தான்

3. இயல்பாக வேண்டிய இடத்து மிகுதல்

(எ-டு) தாய் + செவி - தாய்செவி

தாய் + கொலை - தாய்க்கொலை

4. உயிர் மிக வேண்டிய இடத்து உயிர் கெடுதல்

(எ-டு) பலா + கோடு - பலா அக்கோடு

பலா + குறைத்தான் - பலாக்குறைத்தான்

5 சாரியை வரவேண்டிய இடத்தில் வராதிருத்தல்

(எ-டு) வண்டு + கால் - வண்டின்கால்

வண்டு + கொணர்ந்தான் - வண்டுகொணர்ந்தான்

6. சாரியை உருபு இரண்டும் வருதல்

இன் சாரியையொடு ஐ உருபும் இடம் பெற்று வருதல்

(எ-டு) வண்டினைக் கொணர்ந்தான்

7. சாரியை இயற்கை உறழத்தோன்றுதல்

(எ-டு) புளி குறைத்தான்

புளிக் குறைத்தான்

8. உயர்திணைப்பெயரிடத்து ஐகார உருபு ஒழியாது வருதல்

(எ-டு) கொற்றன் + கை - கொற்றன்கை

கொற்றன் + கொணர்ந்தான்

கொற்றனைக் கொணர்ந்தான்

9. விரவுப் பெயரிடத்தும் ஐகார உருபு ஒழியாது வருதல்

உயர்திணைப் பெயரே சிலபோது அஃறிணைக்கும் அமைந்து விரவுப் பெயர் என்ற பொது நிலைபெறும் அப்போது உருபு நிலைபெற்றல் வேண்டும்.

10. மெய் திரிய வேண்டிய இடத்து இயல்பாகவே நிற்றல்

மண் + குடம் - மட்குடம்

மண் + கொணர்ந்தான் - மண்

இவ்வாறாக ஏனை வேற்றுமைப் பொறுப்புணர்ச்சியது பொது விதியினின்றும் தான் நீங்கி வேறு விதி படப்புணர்வது என்பதை அறியலாம்.

"மெல்லெழுத்துமிகுவழி வலிப்பொடு தோன்றலும்
வல்லெழுத்து மிகுவழி மெலிப்போடு தோன்றலும்
இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்
உயிர் மிக வருவழி உயிர்கெட வருதலும்
சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்
சாரியை உள்வழித் தன்னுருபு நிலையலும்
சாரியை இயற்கை உறழத் தோன்றலும்
உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்
அஃறிணை விரவுப்பெயர்க்கு அவ்வியல் நிலையலும்
மெய்பிறிதாகிடத்து இயற்கை ஆதலும்
ஐகார வேற்றுமைத் திரிபென மொழிப"

(தொல் - எழுத்து - 158)

7. இஐ இறுதிப்பெயர்கள் எத்தகைய நிலைகளை ஏற்கும்?

இ ஐ இறுதிப்பெயர்கள்

அல்வழிப் புணர்ச்சியின்கண் இகரவீற்றுப் பெயரும் ஐகார வீற்றுப்பெயரும் நிலைமொழியாக வரும்போது இயல்பு, மிகுதி உறழ்ச்சி என்ற மூவகை நிலைமையும் உடையன.

இயல்பாதல்

பருத்தி + குறிது - பருத்தி குறிது

கரை + சிறிது - கரை சிறிது

மிகுதல்

அலி + கொற்றன் - அலிக்கொற்றன்

புலை + கொற்றன் - புலைக்கொற்றன்

உறழ்தல்

கிளி + குறிது < கிளிகுறிது / கிளிக் குறிது

இம் மூன்று நிலைகளையும் தொல்காப்பியர் இங்குத் தொகுத்து பேசும் இயல்பினைக் காண்கிறோம்.

"வேற்றுமை அல்வழி இஐ என்னும்
ஈற்றுபெயர்க் கிளவி மூவகை நிலைஇய
அவைதாம்
இயல்பாகுநவும் வல்லெழுத்து மிகுநவும்
உறழா குநவும் என்மனார் புலவர்"
(தொல் - எழுத்து - 159)

<u>இஐ இறுதிச் சுட்டுவினாக்கள்</u>

சுட்டு முதலாகிய இகர ஈற்றுச் சொற்களும் எகரம் முதலாகிய இகர ஈற்றுச் சொற்களும் சுட்டு நீடிய ஐகார ஈற்றுச் சொற்களும் யாவென்னும் வினா முதலாகிய ஐகார ஈற்றுச் சொற்களும் மிகுந்தும் உறழ்ந்தும் வரும்.

<u>சுட்டு முதலாகிய இகர இறுதி</u>

<u>மிகுதல்</u>

அதோளிக் கொண்டான்
இதோளிக் கொண்டான்
உதோளிக்கொண்டான்

<u>உறழ்தல்</u>

அவ்வழி கொண்டான், அவ்வழிக்கொண்டான் இவ்வழி கொண்டான், இவ்வழிக்கொண்டான் உவ்வழி கொண்டான், உவ்வழிக்கொண்டான்.

<u>எகரம் முதலாகிய இகர இறுதி</u>

மிகுதல் : எதோளிக்கொண்டான்
உறழ்தல் : எவ்வழி கொண்டான், எவ்வழிக்கொண்டான்,

<u>சுட்டு நீடிய ஐகார இறுதி மிகுதல்</u>

ஆண்டைக் கொண்டான்

உறழ்தல்

ஆங்கவைகொண்டான், ஆங்கவைக் கொண்டான்
ஈங்கிவை கொண்டான், ஈங்கிவைக் கொண்டான்
ஊங்கவை கொண்டான், ஊங்கவைக் கொண்டான்

யா என்னும் வினாவின் ஐகார இறுதி

மிகுதல் : யாண்டைக் கொண்டான்

உறழிதல் : யாங்கவை கொண்டான் யாங்கவைக்கொண்டான்

"சுட்டு முதலாகிய இகர இறுதியும்
எகர முதல் வினாவின் இகர இறுதியும்
யாவென் வினாவின் ஐயென் இறுதியும்
வல்லெழுத்து மிகுநவும் உறழா குநவும்
சொல்லிய மருங்கின் உளவென மொழிப" (தொல் - எழுத்து - 160)

<u>நெடிலின் முன்னும் குறிலின் முன்னும் ஒற்றுக்கள்</u>

<u>நெடில்முன் ஒற்றுக்கெடுதல்</u>

கோல் + தீது - கோறீது

கோல் + நன்று - கோனன்று

<u>குறில் முன் ஒற்று இரட்டல்</u>

மண் + அகல் - மண்ணகல்

பொன் + அடி - பொன்னடி

சொல் + ஓவியம் - சொல்லோவியம்

<u>குறிலின் முன் ஒற்று இரட்டாத நிலை</u>

குறியதன்முன்னர் ஒற்று இரட்டும்

செய்தி குறிப்பிடத்தக்கது

தாம், நாம் என்ற சொற்கள் நெடு முதல் குறுகித் தம், நம் என்றாகும். அவை அது,இ கு என்ற உருபுகளை ஏற்கும் போது -

தம் + அது - தம்மது

நம் + அது நம்மது

என்று ஆவதில்லை. மாறாக 'தம்' என்ற சொல்லின்பின் அகரமேற்றுத் 'தம' என நின்று பின் உருபோடு புணரும்

தம் + கு - தம + கு - தமக்கு

தம் + அது - தம + அது - தமது

"நெடியதன்முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்
குறியதன் முன்னர்த் தன்னுருபு இரட்டலும்
அறியத்தோன்றி நெறியியல் என்ப" (தொல் - எழுத்து - 161)

"ஆறன் உருபினும் நான்கன் உருபினும்
கூறிய குற்றொற்று இரட்டல் இல்லை
ஈறாகு புள்ளி அகரமொடு நிலையும்
நெடுமுதல் குறுகும் மொழி முன்னான " (தொல் - எழுத்து - 162)

நும் என்ற மொழியும் அவ்வாறே புணர்தல்

நும் என்ற சொல்லானது நீம் என்பதினின்று நெடுமுதல் குறுகி வந்த சொல்லன்று. எனினும் அவ்வீறு முற்கூறியவாறே நுமது நுமக்கு என்று உருபேற்று வரும்.

நும் + அது - நும + அது - நுமது
நும் + கு - நும + கு - நுமக்கு
எனவரும்
"நும்மென் இறுதியும் அந்நிலை திரியாது" (தொல் - எழுத்து - 163)

உகரம் பெறுகின்ற மெய்யீற்று சொற்கள்

புணர்ச்சியில் ஒலித்துணைக்காக உகரம் ஏற்கும் புள்ளியிறுதிகள் ஞ். ந். ம். ண். ன். வ். ல். ள் என்ற மெய்களாகும். இவை வருமொழி முதலில் உயிரிகளும் யகரமும் வர இயல்பாகவே நிற்கும்.

(எ-டு)
உரிஞ் + யா - உரிஞ்யா
பொருந் + யாது - பொருந்யாது
உரிஞ் + அனந்தா - உரிஞ் அனந்தா
பொருந் + அழகு - பொருந் அழகு

புணர்ச்சியின்போது ஒலித்துணைக்காக உகரம் பெறுகின்ற பல புள்ளியீறுகள் புள்ளி மயங்கியலில் கூறப்படுகின்றன. அவை உரிநுக்கடிது, பொருநுக்கடிது, தெவ்வுக்கடிது, வல்லுப் பெரிது எனவரும்.

"உகரமொடு புணரும் புள்ளிஇறுதி
யகரமும் உயிரும் வருவழி இயற்கை" (தொல் - எழுத்து - 164)

## 6.4 அளவுப்பெயர்கள், நிறைப்பெயர்கள், எண்ணுப்பெயர்கள்

இனித் தொல்காப்பியர் அளவுப்பெயர்களும் நிறைப்பெயர்களும் எண்ணுப்பெயர்களும் நிலை மொழியாக நிற்கப் புணர்ச்சியின்போது ஏற்படும் மாறுதல்களைக் குறிப்பிடுகிறார்.

8. அளவுப்பெயர்கள் எச்சாரியை பெறும்?

1. ஏகாரச் சாரியை பெறுதல்

அளவுப் பெயர்களிலும் நிறைப்பெயர்களிலும் உயிரீற்றுப் பெயர்களும் உண்டு, மெய்யீற்றுப் பெயர்களும் உண்டு.

| | | | |
|---|---|---|---|
| எ-டு | அளவுப்பெயர் | : | நாழியே, ஆழாக்கு, கலனே, பதக்கு |
| | நிறைப்பெயர் | : | தொடியே, கஃசு, கொள்ளே, ஐயவி |
| | எண்ணுப்பெயர் | : | எட்டேகால், காலே காணி, காணியே முத்திரிகை |

"உயிரும் புள்ளியும் இறுதி ஆகி
அளவும் நிறையும் எண்ணும் சுட்டி
உள எனப்பட்ட எல்லாச் சொல்லும்
தத்தம் கிளவி தம்மகப்பட்ட
முத்தை வரூஉம் காலம் தோன்றின்
ஒத்தது என்ப ஏயென்சாரியை" (தொல் - எழுத்து - 165)

2. அரையு குறையும்

அரை

செம்பாகத்தை உணர்த்தும் பால்வரை கிளவியாகிய அரை என்ற வருமொழிக்குச் சாரியை வருவதில்லை, எண்ணுப்பெயரொடும் அளவுப்பெயள ரோடும் அரை நேராகவே புணரும்.

மூன்று + அரை - மூன்றரை
உழக்கு + அரை - உழக்கரை
தொடி + அரை - தொடியரை

"அரையென வரூஉம் பால்வரை கிளவிக்குப்
புரைவதன்றால் சாரியை இயற்கை" (தொல் - எழுத்து - 166)

குறை

எண்ணுப்பெயரோடும், அளவு நிறைப்பெயர்களோடும் குறை என்ற சொல் புணரும்போது வேற்றுமைப் புணர்ச்சி போலப் புணரும்.

(எ-டு) உரிய + குறை - உரிக்குறை

தொடி + குறை - தொடிக்குறை

கொள் + குறை - கொட்குறை

காணி + குறை - காணிக்குறை

கால் + குறை - காற்குறை

"குறையென் கிளவி முன்வரு காலை
நிறையத்தோன்றும் வேற்றுமை இயற்கை"

(தொல் - எழுத்து - 167)

குற்றுகரம் + குறை

குற்றியலுகர வீற்று அளவு நிறைச் சொற்களையடுத்துக் குறை என்ற சொல் வந்து புணர்ந்தால் அங்கு இன் சாரியை தோன்றும்

உழக்கு, கழஞ்சு, ஒன்று என்பன முறையே குற்றியலுகர வீற்று அளவு நிறை எண்ணுப்பெயர்கள்

இன்

உழக்கு + குறை - உழக்கின் குறை

இன்

கழஞ்சு + குறை - கழஞ்சின்குறை

இன்

ஒன்று + குறை - ஒன்றின்குறை

"குற்றியலுகரத்துக்கு இன்னே சாரியை" (தொல் - எழுத்து - 168)

கலம் + குறை

கலம் என்ற அளவுப் பெயரையடுத்துக்குறை என்ற சொல் வந்து புணர்ந்தால் இடையில் அத்துச் சாரியை வரப்பெறும்.

(எ-டு) கலம் + குறை
|
கலம் + அத்து + குறை
|
கலத்துக்குறை

அத்திடை வரூஉம் கலமென் அளவே (தொல் - எழுத்து - 169)

9. பனை என்ற அளவுப் பெயர் குறை என்ற சொல் வருமொழியாயின் எவ்வாறு புணரும்?

பனை, கா + குறை

பனை என்ற அளவுப்பெயரையும், கா என்ற நிறைப்பெயரையும் அடுத்துக் குறை என்ற சொல் வருமொழியாய் வந்து புணர்ந்தால் அங்கும் இன் சாரியை தோன்றும்.

(எ-டு)

பனை + குறை
|
பனை + இன் + குறை
|
பனையின் + குறை
|
கா + குறை
|
கா + இன் + குறை
|
காவின் + குறை

பனைக்குறை, காக்குறை என்று இன்பெறாமல் வல்லெழுத்து மிகுதலும் கொள்க என்பர் இளம்பூரணர்.

"பனையென் அளவும் காவென்நிறையும்
நினையுங் காலை இன்னொடு சிவனும்" (தொல் - எழுத்து - 170)

அளவு நிறைப்பெயர்கட்கு முதல் எழுத்துக்கள்

தொல்காப்பியர் காலத்து அளவு, நிறைப்பெயர்களின் முதல் எழுத்துக்களை உரைக்கின்றார், அளவுப்பெயர்க்கும் நிறைப்பெயர்க்கும் மொழி முதலாக வரக்கூடிய எழுத்துக்கள் ஒன்பது அவை:

'க, ச, த, ப, ந, ம, வ, அ, உ' என்பனவாம்.

| எழுத்து | அளவு | நிறை |
|---|---|---|
| க | கலம் | கழஞ்சு |
| ச | சாடி | சீரகம் |
| த | தூத | தொடி |
| ப | பானை | பலம் |
| ந | நாழி | நிறை |
| ம | மண்டை | மா |
| வ | வட்டி | வரை |
| அ | அகல் | அந்தை |
| உ | உழக்கு | -- |

"அளவிற்கும் நிறையிற்கும் மொழி முதலாகி
உளஎனப்பட்ட ஒன்பதிற்று எழுத்தே அவைதாம்
க ச த ப என்றா நமவ என்றா
அகர உகர மொடு அவையென மொழிப" (தொல் - எழுத்து - 171)

## 6.5 தொகை மரபுக்குப் புறனடை

உயிரும் மெய்யும் ஈறாகிய சொற்கள் வருமொழியோடு கூடி நடக்குமிடத்து இச்சொற்கள் இவ்வாறு முடியும் என்று விதி கூறிய சொற்களை கொண்டு முடியாது நின்ற பலவகை முடிவுகள் எல்லாம் உண்மையைத் தலைப்பட்ட வழக்கோடு கூடிப் பொருந்தியவை உரியன என்று கொள்ள வேண்டும். இப்புறனடையால்

1. நில் கொற்றா, நிற்கொற்ற என நிலைமொழி திரிந்து உறழ்ந்தது.
2. மண்ணுகொற்றா மண்ணுக்கொற்றா - என முன்னிலைச் சொல் உகரம்
   கொல்லுக்கொற்றா கொல்லுக்கொற்றா - எழுத்தோடு உறழ்ந்தது
3 வட்டாணை - தோற்றண்டை இதில்நெடில் முன் ஒற்றுக்கெடாது நின்றது.
4. சீரகம் + அரை - சீரகரை எனத் திரிந்தது.
5. ஒருமா + அரை - ஒருமாரை - எனத் திரிந்தது.
6. கலம் + அரை - கலரை எனத் திரிந்தது.

போன்றவற்றையெல்லாம் கருத்தில் கொள்ளுமாறு உரையாசிரியர் கூறுவார்.

"ஈறியல் மருங்கின் இவையிவற்று இயல்பு எனக்
கூறிய கிளவிப் பல்லாறு எல்லாம்
மெய்த் தலைப்பட்ட வழக்கொடுசிவனி
ஒத்தவை உரிய புணர்மொழி நிலையே" (தொல் - எழுத்து - 172)

மருவின் பாத்தி

இனித் தொல்காப்பியர் மரூஉ முடிவு கூறுகின்றார். தொடர்மொழி அமைப்பில் சில மாற்றம் உருவாவதை அவர் குறிப்பிடுகின்றார்.

*10. அது என்பதன் முன் யாது என்ற விளாச்சொல் வரும்போது என்ன தோன்றும்?*

1. 'அவர்' என்ற பலரறிசொல் முன் 'யாவர்' என்ற பெயர் வரும்போது அப்பெயரின் இடைநிற்கும் வகர உயிர்மெய் கெடுவதுண்டு.
   அவர் யாவர் - அவர் யார்
2. ஒன்றன் பாற் சொல்லாகிய 'அது' என்பதன் முன் யாது என்ற வினாச்சொல் வரும்போது அங்கு வகரம் தோன்றுவதுண்டு.
   அது யாது? - அதுயாவது?

இச்செய்திகளைப் பிற இயல்களில் பேசமுடியாது. ஆதலால் இவற்றைத் தொகை மரபின் இறுதியில் வைத்தார்.

"பலரறி சொன்முன்யாவர் என்னும்
பெயரிடை வகரம் கெடுதலும் ஏனை
ஒன்றறிசொல் மு:ன யாது என் வினாவிடை
ஒன்றிய வகரம் வருதலும் இரண்டும்
மருவின் பாத்தியில் திரியு மன்பயின்றே" (தொல் - எழுத்து - 173)

இவ்வாறாகத் தொல்காப்பியர் இத்தொகை மரபில் வருமொழியால் ஏற்படும் மாற்றங்கள், வருமொழியும் திரிபடைவது, முன்னிலைக்கிளவிகள், உயர்திணைப் பெயர்கள், மூன்றாம் வேற்றுமை முடிவுகள், இரண்டாம் வேற்றுமைத் திரிபுகள், சுட்டுகள், வினாக்கள், உகரமொடு புணராத புள்ளியீற்றுச் சொற்கள், அளவு, நிறை எண்ணுப் பெயர்களின் புணர்ச்சி ஆகியன பற்றிக் கூறிய செய்திகளைக் கண்டோம். இனி உருபியல் பற்றி அடுத்துக்காணவிருக்கிறோம்.

## I சுயதிறனறி வினாவுக்குரிய விடைகள்

1. உயிரீறு மெய்யீறுகளின் பொது, சிறப்புப்புணர்ச்சிகள்
2. உறழ்ந்து புணரும்
3. ஞா
4. எத்திரியும் பெறுவதில்லை இயல்பாகவரும்
5. இயல்பாகவே வரும்
6. அஃறிணை, உயர்திணை ஆகிய ஆயிருதிணைக்கும் பொதுவான பெயர்
7. இயல்பு, மிகுதி. உறழ்ச்சி,
8. ஏகாரச் சாரியை
9. இன் சாரியை தோன்றும்
10. வகரம் இடையில் தோன்றும் - அது யாது - அது யாவது?

## பயிற்சி வினாக்கள்

## II குறுவினாக்கள்

1. உயிரீறு மெய்யீறுகள் பொதுப்புணர்ச்சியில் வருமொழியால் எவ்வாறு திரிபடைகின்றன?
2. முன்னிலைக்கிளவியின் புணர்ச்சி முறைகளைக் கூறுக.
3. உயர்திணைப்பெயர்கள் அவ்வழி வேற்றுமை என்ற இருநிலைகளிலும் வருந்தன்மையினைச் சான்றுடன் தருக.
4. இரண்டாம் வேற்றுமைத் திரிபுகளைச் சான்றுடன் எடுத்துரைக்க.
5. அளவுப்பெயர்கள் புணருமாற்றை எடுத்துக்கூறுக.
6. நிறைப்பெயர்கள் எவ்வாறு புணர்ச்சியின்போது வருகின்றன?
7. எண்ணுப்பெயர்களின் புணர்ச்சி பற்றிக் கருத்துரைக்க.

## III நெடு வினாக்கள்

1. தொகை மரபில் உயிரீறு மெய்யீறுகளின் பொதுப்புணர்ச்சி பற்றித் தொல்காப்பியர் கூறும் கருத்துக்களை விளக்குக,
2. உயிரீறு மெய்யீறுகளின் சிறப்புப் புணர்ச்சி பற்றித் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ள செய்திகளை தொகுத்துரைக்க.

அலகு - 7

# உருபியல்

7,1 உருபியலில் கூறப்பட்டுள்ள செய்திகள்

7.2 உயிரீறுகள்

7.3 மெய்யீறுகள்

7.4 முற்றுகர ஈறு

7.5 குற்றியலுகர இறுதி

7.6 புறனடை

# உருபியல்

அன்பு மாணவர்களே! இதுவரை தொல்காப்பியம் பற்றிய செய்திகளையும், தொல்காப்பியர் கூறிய நூன்மரபு, மொழி மரபு, பிறப்பியல், புணரியல், தொகை மரபு ஆகிய செய்திகளையும் பற்றி அறிந்துகொண்டோம். இனி நாம் உருபியல் பற்றிய செய்திகளைக் காணலாம்.

சுயதிறனறி விளாக்கள்

## முதன்மை நோக்கம்

பெயர் வேற்றுமை உருபுகளோடு புணரும் இயல்புகளை அறிந்துகொள்கிறான்.

## துணைமை நோக்கங்கள்

பெயர்கள் வேற்றுமை உருபோடு புணரும்போது இடையில் சாரியைகள் பெறும் என்பதை அறிந்துகொள்கிறான்.

1. உருபியல் எனப் பெயர் பெற்றது எதனால்?

உயிரீறுகள் மெய்யீறுகள் என்ற அடிப்படையில் சிலபோது சாரியை பெற்றும், சிலபோது இயல்பாகவும் புணரும் என்பதையும் தெரிந்துகொள்கிறான்.

## 7.1 உருபியலில் கூறப்பட்டுள்ள செய்திகள்

பெயர் வேற்றுமை உருபுகளோடு புணரும் இயல்பு பற்றிக்கூறுவதால் உருபியல்என்று பெயர் பெற்றது. பெயர்கள் வேற்றுமை உருபோடு புணரும்போது இடையில் வரும் சாரியைகள் இவை என்பதுபற்றியும், அப்போது பெயர்கள் இயல்பாகவும் திரிந்தும் வரும் என்பதும் இவ்வியலில் விளக்கமாக கூறப்பட்டுள்ளன. உயிரீறுகள், மெய்யீறுகள் என்ற அடிப்படையில் இங்கும் செய்திகளைத் தொகுத்துக்கூறுவதால் ஒரு வகையில் தொகை மரபோடு இயைபு உடையதாகவே உருபியல் அமைகிறது.

இதற்கு முந்தைய பாடமான தொகை மரபில் இருபத்து நான்கு ஈற்றும் புணர்ச்சியையும் தொகுத்துக்கூறினார் தொல்காப்பியர். இவ்வியலில் அவற்றை விரித்துக்கூறுகிறார்.

உருபியலில் கூறப்பட்டுள்ள செய்திகளைப் பின்வருமாறு பகுத்துக்கூறலாம்.

2. உருபியல் செய்திகளை எத்தனை வகைககளாப் பிரிக்கலாம்?

1. உயிரீறு + உருபு
2. மெய்யீறு + உருபு
3. முற்றுகர, குற்றுகர ஈறு + உருபு

## 7.2 உயிரீறு

1. உயிரீற்றுப் பொது விதி

அ, ஆ, உ, ஊ, ஏ, ஔ என்னும் ஆறு உயிர்களையும் ஈறாக உடைய நிலைமொழிகளின் முன் வேற்றுமை உருபு வரும்போது இடையில் இன் சாரியை தோன்றும்.

அ
ஆ
    + இன் + உருபு
உ
ஊ
ஏ
ஐ

என்ற முறையில் வரும்.

(எ-டு)

(அ) விள + இன் + ஐ - விளவினை
(ஆ) பலா + இன் + ஐ - பலாவினை
(உ) கடு + இன் + ஐ - கடுவினை
(ஊ) பூ + இன் + ஐ - பூவினை
(ஏ) சே + இன் + ஐ - சேவினை
(ஔ) வௌ + இன் + ஐ - வௌவினை

விளனோடு, விளவிற்கு, விளவினது, விளவின்கள் எனப் பிறவேற்றுமை உருபுகளோடும் இவ்வாறே இணைத்து ஒட்டுக.

இப்பொது விதிக்கு மாறாகச் சில இடங்களில் சில ஈறுகள் வேற சில சாரியைகளையும் பெற்று வருவதுண்டு.

"அ ஆ உ ஊ ஏ ஔ என்னும்
அப்பா லாறன் நிலைமொழி முன்னர்
வேற்றுமை உருபிற்கு இன்னே சாரியை" (தொல் - எழுத்து - 173)

## உயிரீற்றுச் சிறப்புவிதிகள்

### 1. அகர ஈறு

பன்மைப்பொருளை உணர்த்தும் பல்ல, உள்ள, இல்ல, சில்ல ஆகிய அகர ஈற்றுச் சொற்களின் முன்னர் வற்றுச் சாரியை வரும்.

(எ-டு)

பல்ல + வற்று + ஐ - பல்லவற்றை

உள்ள + வற்று + ஐ - உள்ளவற்றை

இல்ல + வற்று + ஐ - இல்லவற்றை

சில்ல + வற்று + ஐ - சில்லவற்றை

சில அகர ஈறு அத்துச் சாரியையும் பெறும் என்பர் இளம்பூரணர்.

(எ-டு) மக + அத்து + கை - மகத்துக்கை

"பல்லவை நுதலிய அகர இறுபெயர்
வற்றொடு சிவணல் எச்சமின்றே" என்பது தொல்காப்பியம்
(தொல்காப்பியம் - எழுத்து - 174)

### 2. ஆகார ஈறு

யா எனப்படும் ஆகார ஈற்று வினாப்பெயரும் வற்றுச் சாரியை பெற்று வரும்.

(எ-டு)

யா + வற்று + ஐ - யாவற்றை

"யாவென் வினாவும் ஆயியல் திரியாது" என்பார் தொல்காப்பியர்
(தொல் - எழுத்து - 175)

### 3. உகர ஈறு

சுட்டெழுத்தினை முதலாக உடைய உகர ஈற்றுச் சொல் (அது இது உது) அன் சாரியை பெற்று வரும். அப்போது து என்னும் உயிர்மெய் எழுத்தில் உள்ள உ கரம் கெடும்.

(எ-டு)

அது + அன் + ஐ - அதனை

உது + அன் + ஐ - உதனை

இது + அன் + ஐ இதனை

"சுட்டுமுதல் உகரம் அன்னோடு சிவணி

ஒட்டியமெய்யெழுத்து உகரம் கெடுமே"

(தொல் - எழுத்து - 176)

4. ஐகார ஈறு

சுட்டெழுத்தினை முதலாக உடைய ஐகார ஈற்றுச் சொல் வற்றுச்சாரியை பெற்று வரும். அப்போது ஈற்று ஐகாரமும் கெடாமல் நிற்கும்

(எ-டு)

அவை + அவை + வற் + > ஐ

அவை + அற்று + > ஐ

அவை + ய் + அற்று + ஐ > அவையற்றை)

இவை + வற்று + ஐ > இவையற்றை

உவை + வற்று + ஐ > உவையற்றை

'யா' என்னும் வினாவினையுடைய ஐகார ஈற்றுச் சொல்லும் (யாவை) வற்றுச் சாரியை பெறும். அப்போது 'வை' கெடும்.

யாவை + ஐ > யாவை

யாவை + வற்று - ஐ > யாவற்றை

"சுட்டுமுதலாகிய ஐயென் இறுதி

வற்றோடு சிவணி நிற்றலும் உரித்தே"

(தொல் - எழுத்து - 177)

"யாவென் வினாவின் ஐயென் இறுதியும்

ஆயியல் திரியாது என்மனார் புலவர்

ஆவயின் வகரம் ஐயொடுங் கெடுமே"

(தொல் - எழுத்து - 178)

5. நீ என்னும் பெயரீறு

நீ என்னும் பெயர் வேற்றுமை உருபு ஏற்கும்போது நெடுமுதல் குறுகி 'நி' என்றாகும். பின் ன் என்னும் எழுதுப் பேறுபெற்று வரும்.

3. நீ என்னும் பெயர் உருபு ஏற்கும் போது என்னவாகும்?

(எ-டு)

நீ + ஐ > நி + ன் + ஐ > நின்னை

நி + ன் + ன் + ஒடு > நின்னொடு

குறிப்பு

மூன்றாம் உருபினிடத்து சாரியை பெற்றே வரும் என்பது விதி. அதனை மாற்றுவதற்காக 'ன்' என்ற எழுத்துப் பேற்றினை இங்கு கூறியுள்ளார் என்பர் உரையாசிரியர்.

"நீ என் ஒரு பெயர் நெடுமுதல் குறுடும்
ஆவியின் னகரம் ஒற்றாகும்மே" என்பது தொல்காப்பியம்

(தொல் - எழுத்து - 179)

6. ஓகார ஈறு

ஓகார ஈற்றுச் சொல் ஒன் சாரியை பெற்று வேற்றுமை உருபுடன் புணரும்.

கோ + ஒன் + ஐ - கோ ஒனை

சிறுபான்மையிடத்தில் 'இன்' சாரியையும் வரும் என்பர் நச்சினார்க்கினியர் கோவினையடர்ந்த, ஓவினை, கோவினொடு என எடுத்துக்காட்டும் தருவார்.

"ஓகார இறுதிக்கு, ஒன்னே சாரியை" (தொல் - எழுத்து - 180)

7. அ, ஆ (மரப்பெயர்) ஈறு

அ, ஆ என்னும் இறுதியினை உடைய மரப்பெயர்ச்சொற்கள் ஏழாம் வேற்றுமை உருபினை ஏற்கும் போது அத்துச் சாரியை பெற்றுவரும். உருபியல் முதல் நூற்பாவில் அகர ஆகார ஈறு இன் சாரியை பெற்று வருவதைக் கண்டோம்.

(எ-டு)

விள + அத்து + கண் - விளவத்துக்கண்

"அ ஆ என்னும் மரப்பெயர்க்கிளவிக்கு
அத்தொடுஞ் சிவனும் ஏழன் உருபே"

(தொல் - எழுத்து - 181)

## 7.3, மெய்யீறுகள்

இனித் தொல்காப்பியர் மெய்யீற்றுச் சொற்களோடு உருபுகள் புணரும் போது நிகழும் மாற்றங்களை எடுத்துரைக்கிறார்.

4. நகரம் ஈறாகும் இருமொழிகள் யாவை?

1. ஞ, ந ஈறுகள்

நகரம் பொருஞ், வெரிந் என இருமொழிக்கு மட்டும் ஈறாகும். ஞகரம் உரிஞ் என ஒரு மொழியில் மட்டும் ஈறாகும். இவற்றை நாம் மொழிமரபில் (மொழி மரபு 46, 47) கண்டோம். இப்புள்ளியீறுகளும் வேற்றுமை உருபுடன் புணரும்போது இன் சாரியை பெற்று வரும்

5. ஞ ந எனும் புள்ளிக்கு எது சாரியை?

(எ-டு) உரிஞ் + இன் + ஐ - உரிஞினை

பொருந் + இன் + ஐ - பொருநினை

"ஞ ந என் புள்ளிக்கு இன்னே சாரியை" (தொல் - எழுத்து - 182)

2. வகர ஈறு

சுட்டெழுத்தினை முதலாக உடைய வகர ஈற்றுச் சொல் (அவ் இவ் உவ்) சுட்டு முதலாகிய ஐகார ஈற்றுச் சொல்லாகிய அவை என்பது போல வற்றுச் சாரியை பெற்று முடியும். ஆகவே 'அவ்' என்பதன் 'வ' ஈறு கெடும் என்றாயிற்று.

(எ-டு)

அவ் + வற்று + ஐ > அவற்று + ஐ > அவற்றை

இ + வற்று + ஐ > இவற்றை

உ + வற்று (ஐ) > உவற்றை என வரும்.

"சுட்டு முதல் வகரம் ஐயும் மெய்யும்
கெட்ட இறுதி இயல் திரிபின்றே"

(தொல் - எழுத்து - 183)

'தெவ்' என்னும் வகர ஈற்றுச் சொல் மட்டும் 'இன்' என்ற சாரியை பெற்று முடியும்

(எ-டு) "தெவ் + இன் + ஐ - தெவ்வினை

ஏனை வகரம் இன்னொடு சிவனும்"

(தொல் - எழுத்து - 184)

3. மகர ஈறு

மகரப் புள்ளியீற்றுச் சொல்முன் அத்துச் சாரியை வரும்.

(எ-டு) மரம் + அத்து + ஐ - மரத்தை

அத்துச் சாரியையேயன்றி இன் சாரியை

வந்து முடியும் சொற்களும் உள.

(எ-டு) உரும் + இன் + ஐ - உருமினை

"இன்னிடை வரூஉம் மொழியுமாருளவே"

(தொல் - எழுத்து - 185, 186)

சாரியை பெறாது முடியும் மகர ஈறு

நும் என்னும் மகர ஈற்றுச் சொல் மேற்கூறிய சாரியை பெறாது இயல்பாய் முடியும்.

(எ-டு) நும் + ஐ - நும்மை

"நும்மென் இறுதி இயற்கையாகும்"

(தொல் - எழுத்து - 187)

சாரியை பெறாது திரிபுடன் முடியும் மகர ஈறு

தாம், நாம், யாம் என்னும் மகர ஈற்றுச்சொல் நும் என்பதைப் போலச் சாரியை பெறாது முடியும்.

தாம் நாம் ஆகிய இரண்டும் நெடு முதல் குறகித் தம் நம் என்றாகும். யாம் என்பதிலுள்ள ஆகாரம் எகரமாக மாறி எம் என்றாகும்.

(எ-டு)

தாம் > தம் + ஐ - தம்மை

நாம் + ஐ > நம்மை

யாம் + ஐ > எம்மை என்றாகும்.

"தாம் நாம் என்னும் மகர இறுதியும்
யாமென் இறுதியும் அதனோரன்ன
ஆ எ ஆகும் யாமென் இறுதி
ஆவயின் யகர மெய் கெடுதல் வேண்டும்
ஏனையிரண்டும் நெடுமுதல் குறுகும்." (தொல் - எழுத்து - 189)

எல்லாம் என்னும் சொல்

எல்லாம் என்னும் மகர ஈற்றுச் சொல்லின் முன்பு வற்றுச் சாரியை தோன்றும். இறுதியில் உம் என்னும் சாரியை வந்து நிலை பெறும்.

(எ-டு)

எல்லாம் + ஐ > எல்லாம் + வற்று + ஐ > உம்

எல்லா + வற்று + ஐ + உம் > எல்லாவற்றையும்

"எல்லாம் என்னும் இறுதி முன்னர்
வற்று என் சாரியை முற்றத் தோன்றும்
உம்மை நிலையும் இறுதியான" (தொல் - எழுத்து - 189)

6. எல்லாம் எனும் உயர்திணைப் பெயருக்கு எச்சாரியை இடைவந்து சேரும்?

எல்லாம் - உயர்திணைப்பெயர்

எல்லாம் என்னும் விரவுப்பெயர் உயர்திணைப் பெயராய் நிற்குமாயின் நம் சாரியை இடை வந்து சேரும்

(எ-டு) எல்லாம் + நம் ÷ ஐ + உம் - எல்லாநம்மையும்

"உயர்திணை யாயின் நம்மிடை வருமே" (தொல் - எழுத்து - 190)

எல்லாரும் எல்லீரும்

எல்லாரும் எனும் படர்க்கைப் பெயர், வேற்றுமை உருபு ஏற்கும்போது 'தம்' சாரியை தோன்றும். அப்போது எல்லாரும் என்னும் சொல்லினது மகர இறுதியும் அதன்முன் நின்ற உகரமும் கெடும் 'ர்' மெய் நிற்கும் சாரியைக்குப் பின் இறுதியில் 'உம்' வரும். எல்லீரும் என்னும் முன்னிலை இறுதியும் இவ்வாறே மாற்றம் அடையும். ஆனால் சாரியையாக 'நும்' என்பது வரும்.

எல்லாரும் > எல்லார் + உம் > எல்லார் (ஐ) + உம்

எல்லார் + (நம்) + ஐ + (உம்) எல்லார் தம்மையும்

எல்லிரும் > எல்லீர் + உம்

எல்லீர் ஐ (ஐ) + உம் > எல்லீர்

இவற்றுள் உம்மைகெட்டு மீண்டும் உம்மை தோன்றியது என்பதை விட உம்மை இடம மாறிற்று என்பதே பொருந்தும்

தம், நம், நும் என்பன வெறும் சாரியைகளல்ல, அவை பொருள் நிறைந்த சொல்லுருபன்கள் என்றும் கருதலாம்.

எல்லாருமென்னும் படர்க்கை இறுதியும்
எல்லீரும் என்னும் முன்னிலை இறுதியும்
ஒற்றும் உகரமும் கெடுமென மொழிப
நிற்றல் வேண்டும ரகரப்புள்ளி
உம்மை நிலையும் இறுதியான
நம்மிடை வரூஉம் படர்க்கைமேன
நும்மிடை வரூஉம் முன்னிலை மொழிக்கே (தொல் - எழுத்து - 191)

4. னகர ஈறு

தான், யான்

தான், யான் என்னும் னகரஈற்றுப் பெயர்கள் நாம், யாம் என்னும் மகர ஈற்றுப் பெயர்களைப்போலவே முடியும். அதாவது, சாரியை பெறாது நெடுமுதல் குறுகிவரும். யான் என்பதில் ஆகாரம் எகரமாகும்

தான் + ஐ > தன் + ஐ > தன்னை
யான் + ஐ > என் + ஐ > என்னை

"தான் யான் என்னும் ஆயீரிறுதியும்
மேல்முப் பெயரொடும் வேறுபாடு இலவே"
(தொல் - எழுத்து - 192)

அழன் + புழன்

அழன் + புழன் என்னும் இருபெயர்க்கும் அத்து, இன் ஆகிய இரண்டு சாரியையும் வரும்.

அழன் + அத்து + ஐ - அழத்தை
புழன் + அத்து + ஐ - புழத்தை
அழன் + இன் + ஐ - அழனினை
புழன் + இன் + ஐ - புழனினை

அழன் + அத்து } என்பனவற்றில் ன கர ஒற்றம்
புழன் + அத்து } அத்தின் அகரமும்கெடும்

1. முற்றுகர ஈறு எச்சாரியை பெறும்?

"அழனே புழனே ஆயிருமொழிக்கும்
அத்தும் இன்னும் உறழத் தோன்றல்
ஒத்த (து) என்ப உணருமோரே" (தொல் - எழுத்து - 193)

## 7.4 முற்றுகர ஈறு

ஏழு என்னும் முற்றுகர இறுதியின் முன் 'அன்' என்னும் சாரியை தோன்றும்

(எ-டு)

ஏழு + அன் + ஐ ஏழனை

"அன்னென் சாரியை ஏழன் இறுதி
முன்னர்த் தோன்றும் இயற்கைத் தென்ப" (தொல் - எழுத்து - 194)

## 7.5 குற்றியலுகர இறுதி

குற்றியலுகர ஈற்றின் முன் 'இன்' சாரியை தோன்றும்

(எ-டு)

வண்டு + இன் + ஐ - வண்டினை
நாகு + இன் + ஐ - நாகினை
வரகு + இன் + ஐ - வரகினை
கொக்கு + இன் + ஐ - கொக்கினை
மார்பு + இன் + ஐ - மார்பினை
எஃகு + இன் + ஐ - எஃகினை

"குற்றியலுகரத்தின் இறுதி முன்னர்
முற்றத் தோன்றும் இன்னென் சாரியை" (தொல் - எழுத்து - 195)

1. நெடில் தொடர்க் குற்றியலுகரம்

வல்லெழுத்துகளில் க ச த ப என்பவற்றை ஊர்ந்த குற்றுகரங்கள் இடை ஒற்று, மிகா, ஏனைய ட ற என்பவற்றை ஊர்ந்த குற்றுகரங்கள் ஒற்றுமிகும். இவை (ட, ற) நெட்டெழுத்திற்கு பின்னாக வந்து நெடில் தொடர்க் குற்றியலுகரமாக வரும்போது தன்னொற்று இரட்டிக்கும் ஆனால் சாரியை பெறாது.

(எ-டு)

காடு + ஐ   காட்டை

சோறு + கு   சோற்றுக்கு

"நெட்டெழுத்து இம்பர் ஒற்றுமிகத் தோன்றும்

அப்பால் மொழிகள் அல்வழியான." (தொல் - எழுத்து - 196)

"அவைதாம்

இயற்கையவாகும் செயற்கைத்தென்ப" (தொல் - எழுத்து - 197)

2. எண்ணுப்பெயர்க் குற்றுகர ஈறு

குற்றியலுகர ஈற்றினை உடைய எண்ணுப்பெயர் இறுதி 'அன்' சாரியை பெற்று வரும்.

(எ-டு)

ஒன்று + அன் + ஐ > ஒன்றனை

இரண்டு + அன் + ஒடு > இரண்டனொடு

"எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்" (தொல் - எழுத்து - 198)

3. ஒரு பஃது முதலிய ஈறுகள்

ஒன்று, இரண்டு முதலிய எண்ணுப் பெயர்கள் நிலைமொழியில் நிற்கப்பத்து என்னும் எண்ணுப்பெயர், வருமொழியாய்ப் புணரும்போது முற்கூறிய 'அன்' அன்றி 'ஆ' என்றும் சாரியை இடையில் தோன்றும் அப்போது பஃது என்ற சொல்லின் அஃது கெடும் 'ப' என்னும் மெய்மட்டுமே நிற்கும்.

(எ-டு)

ஒரு பஃது + ஐ - ஒரு பானை

"ஒன்று முதலாகப் பத்தூர்ந்து வருஉம்

எல்லா எண்ணும் சொல்லும் காலை

ஆனிடை வரினும் மானம் இல்லை

அஃதென் கிளவி ஆவயிற்கெடுமே

உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே" (தொல் - எழுத்து 199)

4. வினைப்பெயர் சுட்டுப் பெயர் குற்றுகர ஈறு

யாது என வரும் குற்றுகரஈறும் சுட்டெழுத்தினை முதலாக உடைய ஆய்தத் தொடர் மொழிக் குற்றுகர இறுதியும் அன்சாரியை பெற்று வரும். அப்போது ஆய்தம் கெடும்.

(எ-டு)

யாது + அன் + ஐ > யாதனை

இஃது + அன் + ஐ > இதனை

அஃது + அன் + ஐ > அதனை

உஃது + அன் + ஐ > உதனை

என வரும்

"யாதென் இறுதியும் சுட்டு முதலாகிய
ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்
ஆய்தம் கெடுதல் ஆவயின் ஆன "

(சொல் - எழுத்து - 200)

8. திசைப்பெயர் இறுதிக்குற்றகரம் எதனுடன் கெடும்?

5. திசைப்பெயர்

திசையை உணர்த்தும் குற்றியலுகர இறுதிப் பெயர்களான வடக்கு, தெற்கு, மேற்கு, கிழக்கு ஆகியவற்றின் முன் முற்கூறியபடி 'இன்' சாரியை பெறுதலே அன்றிப் பெறாது இயல்பாகவும் முடியும். அப்போது இறுதிக் குற்றுகரம் மெய்யுடன் கெடும்.

(எ-டு)

வடக்கு + இன் + கண் - வடக்கின்கண்

வடக்கு + கண் - வடக்கண்

இவ்வாறே ஏனைய திசைப் பெயர்களும் வரும்.

"ஏழன் உருபிற்குத் திசைப்பெயர் முன்னர்
சாரியைக் கிளவி இயற்கையும் ஆகும்
ஆவயின் இறுதி மெய்யொடும் கெடும்"

(தொல் - எழுத்து - 201)

## 7.6 புறனடை

உயீரீற்றுள் இதுவரை கூறாது விட்டவை இ ஈ ஆகும். மெய்யீறு ய, ர, ல, ழ, ள ண ஆகும். இவை இன்சாரியை பெற்றும் பெறாதும் முடியும்.

பெறாது இயல்பாய் முடிவன

கிளி + ஐ > கிளியை

தீ + ஐ > தீயை

மண் + ஐ > மண்ணை

வேய் + ஐ > வேயை

இன்சாரியை பெற்றுமுடிவன

கிளி + இன் + ஐ > கிளியினை

தீ + இன் + ஐ > தீயினை

மண் + இன் + ஐ > மண்ணினை

வேய் + இன் + ஐ > வேயினை

வேரை, வேரினை

முள்ளை, முள்ளினை

கல்லை கல்லினை என இவ்வாறு வரும்.

புள்ளி இறுதியும் உயிரிறு கிளவியும்
சொல்லிய அல்ல ஏனைய எல்லாம்
தேருங் காலை உருபொடு சிவணிச்
சாரியை நிலையும் கடப்பாடு இலவே

(தொல் - எழுத்து - 202)

இவ்வாறாக உருபியலில் உயிரீறு, உயிரீற்றுப்பொது விதி, சிறப்பு விதிகள், மெய்யீறுகள், முற்றுகர ஈறு குற்றிலுகர இறுதி, அவற்றுக்குப் புறனடையாக வந்த செய்திகள் என்பனவற்றைத் தொல்காப்பியர் சுட்டிய விதங்களை எடுத்துக்காட்டுகளுடன் கண்டறிந்தோம். இனி வரும் பாடம் நமக்கு விளக்கவிருப்பது உயிர் மயங்கியல் பற்றிய கருத்துகளையாகும்.

## I சுயதிறனறி வினாவிற்குரிய விடைகள்

1. பெயா உருபுகளோடு புணரும் இயல்பு பற்றிக் கூறுவதால்
2. மூன்று, உயிரீறு, மெய்யீறு, குற்றுகர முறறுகர ஈறு
3. நெடுமுதல் குறுகும்
4. பொருந், வெரிந்
5. 'இன்' சாரியை,
6. 'நம்' சாரியை
7. 'அன்' சாரியை
8. மெய்யுடன் கெடும்

## பயிற்சி வினாக்கள்

### II குறு வினாக்கள்

1. உயிரீறுகளின் பொது விதிகளைக் கூறுக.
2. மெய்யீறுகளின் சிறப்பு விதிகளைக் கூறுக.
3. மகர ஈறுகள் எவ்வாறு புணரும்?
4. எல்லாம் .எனும் உயர்திணைப் பெயர் புணருமாற்றைக் குறிப்பிடுக.
5. னகர ஈறு எவ்வாறு புணரும்?
6. முற்றுகர ஈறு பெறும் மாற்றங்கள் யாவை?

### III நெடு வினாக்கள்

1. உயிரீறுகள் உருபொடு புணரும் தன்மைகளை வளக்குக.
2. மெய்யீறுகள் உருபொடுபுணர்வது பற்றி விளக்கியுரைக்க
3. முற்றுகர, குற்றுகர ஈறுகள் உருபொடு புணருமாற்றை விவரி.

அலகு - 8

# உயிர்மயங்கியல்


8.1 உயிர் மயங்கியல் பற்றிய செய்திகள்

8,2 அகர ஈறு

8.3 ஆகார ஈறு

8.4 இகர ஈறு

8,5 ஈகார ஈறு

8.6 உகர ஈறு

8.7 ஊகார ஈறு

8.8 எகர ஒகர ஈறுகள்

8.9 ஏகார ஈறு

8.10 ஐகார ஈறு

8.11 ஓகார ஈறு

8.12 ஔகார ஈறு

# உயிர் மயங்கியல்

சுயதிறனறி வினாக்கள்

அன்பு மாணவர்களே! இதுகாறும் நாம் தொல்காப்பியம் பற்றிய செய்திகள், நூன் மரபு, மொழி மரபு, பிறப்பியல், புணரியல், தொகை மரபு, உருபியல் பற்றிய தொல்காப்பியரின் கருத்துக்களை உரிய சான்றுகளுடன் கண்டு அறிந்துகொண்டோம். இனி நாம் காணவிருப்பது உயிர் மயங்கியல் பற்றிய செய்திகளையாம்.

## முதன்மை நோக்கம்

உயிரீறுகள் வல்லினத்தோடும், பிற இனத்தோடும் மயங்கிப் புணரும் இயல்பினை அறிகிறான்.

## துணைமை நோக்கங்கள்

உயிரை ஈற்றில் கொண்டபெயரும் வினையும் நிலைமொழியாக இருக்க அடையும் மாறுதல்களைத் தெரிந்துகொள்கிறான்,

அல்வழி, வேற்றுமை என்ற இருநிலைகளில் அவை அமைகின்ற நிலையினையும் தெரிந்துகொள்கிறான்,

1 உயிரீற்றுப் புணர்ச்சியினை எவ்விரு நிலைகளில் தொல்காப்பியர் உணர்த்துகிறார்?

## 8.1. உயிர் மயங்கியல் செய்திகள்

உயிரீறு வல்லினத்தோடும் பிற இனத்தோடும் மயங்கிப் புணரும் இயல்பு உணர்த்தினமையின் உயிர் மயங்கியல் எனப்பெயர் பெற்றது என்பர் உரையாசிரியர்கள்.

உயிரை ஈற்றில் கொண்ட பெயரும் வினையும் நிலைமொழியாய் இருக்க அடையும் மாறுதல்களைத் தொல்காப்பியர் இவ்வியலில் கூறினார். ஆதலின் இவ்வியலுக்கு உயிர் மயங்கியல் எனப்பெயர்

உயிரீற்றுப் புணர்ச்சியினை அல்வழி, வேற்றுமை என்ற நிலைகளில் ஆசிரியர் உணர்த்துகிறார்.

அச்செய்திகளை இனி வரிசை மாறாது வாஞ்சையுடன் அவற்றைக் காணவிருக்கிறோம்.

## 8.2 அகர ஈறு

1. அகர ஈறு (அல்வழிப்புணர்ச்சி)

அகரத்தை இறுதியிற் கொண்ட பெயர்ச்சொல்லின் பின் வருமொழி முதலில் க ச த ப வரின் அல்வழியில் அவற்றை ஒத்த ஒற்று இடையில் மிகும்.

(எ-டு)

விள + குறிது - விளக்குறிது

"அகர இறுதிப்பெயர் நிலை முன்னர்
வேற்றுமை அல்வழி கசதபத் தோன்றின்
தத்தம் ஒத்த ஒற்று இடைமிகுமே" (தொல் - எழுத்து - 204)

2. அகர ஈறு

(வினைச்சொற்கள் இடைச்சொற்கள்)

அகர ஈற்று வினை எச்சம், அகர ஈற்று உவம உருபு என என்னும் எச்சம், அகரச்சுட்டு ஆங்க என்னும் உரையசைச் சொல் ஆகியன நிலை மொழியாய் வருமிடத்து வருமொழிமுதலில்

க, ச, த, ப வரின் முன்னர்க் கூறியவாறு வல்லெழுத்து மிகும்.

(எ-டு)

உணக்கொண்டான் - வினைஎச்சம்

புலிபோலக் கொன்றான் - அகர ஈற்று உவம உருபு

கொள் எனக்கொண்டான் - என எச்சம்

அக்கொற்றன் - சுட்டு

ஆங்கக் கொண்டான் - ஆங்க உரையசை

"வினை எஞ்சு கிளவியும் உவமக்கிளவியும்
எனஎன் எச்சமும் சுட்டின் இறுதியும்
ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே" (தொல் - எழுத்து - 205)

3. வினையெச்சத்திற்குச் சிறப்பு விதி

சாவ என்று சொல்லப்படும் செய என என எச்சத்து நிலை மொழியில் வகரம் நிற்க வருமொழியின் தொடக்கத்தில் க, ச, த, ப வந்தால் வகரம் கெடும்.

(எ-டு) சாவ + குத்தினான் - சாக்குத்தினான்

"சாவ என்னும் செய என் எச்சத்து

இறுதி வகரம் கெடுதலும் உரித்தே" (தொல் எழுத்து 210)

4. சுட்டின் முன் மெல்லினம்

அகரச்சுட்டின் முன் ஞ, ந, ம என்னும் தொடக்கமுடைய சொற்களில் தத்தமக்குப் பொருத்தமான ஒற்று இடையில் மிகும்.

(எ-டு) அ + ஞாண் - அஞ்ஞாண்

அ + நூல் - அந்நூல்

அ + மணி - அம்மணி

5. அகரச்சுட்டின்முன் ய, வ

அகரச்சுட்டின் முன் ய, வ முதன் மொழியாக உடைய சொற்கள் வரின் வகரம் தோன்றும்

அ + யாழ் - அவ்யாழ்

அ + வளை - அவ்வளை

6. அகரச்சுட்டின் முன் உயிர்

அகரச் சுட்டின் முன் உயிர் எழுத்துக்களை முதலாக உடைய சொற்கள் வரினும் வ கரம் மிகும்.

(எ-டு) அ + இலை - அவ்விலை

அ + ஆடை - அவ்வாடை

"சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்

ஒட்டிய ஒற்றிடைமிகுதல் வேண்டும்"

(தொல் - எழுத்து 206)

"ய வ முன் வரினே வகரம் ஒற்றும்" (தொல் - எழுத்து - 207)

"உயிர் முன் வரினும் ஆயியல் திரியாது" (சொல் - எழுத்து - 208)

2. செய்யுளில் அகரச் சுட்டு என்னவாகும்?

7. செய்யுளில் அகரச்சுட்டு

அகரச்சுட்டு செய்யுளில் நீட்சி பெற்று ஆகாரமாகும். நீடவருதலையும் யகரம் உடம்படுமெய்யாக அமைவதையும் முறையல்லா மாற்றம் எனவும் வழங்குவர்.

(எ-டு)

“ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே
நீடவருதல் செய்யுளுள் உரித்தே” (தொல் - எழுத்து - 209)

8. இயல்பாக முடியும் அகர ஈற்றுச்சொற்கள்

அன்ன என்னும் உவம உருபாகிய இடைச்சொல், அண்மை யாரைக் குறித்த உயர்திணை விளிப்பெயர், செய்ம்மன என்னும் அகர ஈற்று வினைச்சொல், ஏவலைக் குறித்த வியங்கோளாகிய வினைச்சொல், செய்த என்று சொல்லும் பெயரெச்சமாகிய வினைச்சொல், செய்யிய என்று சொல்லப்படும் வினையெச்சச் சொல், உரையசைப் பொருண்மையைத் தரும அம்ம எனும் இடைச்சொல், பன்மைப் பொருளுணர்த்தும் ‘பல’ - எனும் சொல் ஆகியவை இயல்பாய் முடியும்.

(எ-டு)

“அன்ன என்னும் உவமக்கிளவியும்
அண்மை சுட்டிய விளைநிலைக் கிளவியும்
செய்ம்மன என்னும் தொழிலிறு சொல்லும்
ஏவல் கண்ணிய வியங்கோள் கிளவியும்
செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்
செய்யிய என்னும் உரைப்பொருள் கிளவியும்
பலவற்று இறுதிப் பெயர்க் கொடை உளப்பட
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப” (தொல் - எழுத்து - 211)

9. ஏவல் குறிக்காத அகரஈற்று வியங்கோள்

வாழுங்காலம் நெடுங்காலம் ஆகுக என்னும் பொருளைத்தருகின்ற வாழிய என்று சொல்லப்படும் செய என்னும் கிளவி இறுதியில் உள்ள அகரமும் அதனாற்பற்றப்பட்ட யகர ஒற்றும் கெட்டு முடிதல் உரித்து.

(எ-டு)

வாழிய + கொற்றா - வாழி கொற்றா

“வாழிய என்னும் செயவென்கிளவி
இறுதி அகரம் கெடுதலும் உரித்தே” (தொல் - எழுத்து - 212)

10. உரைப்பொருள் கிளவிக்கு வேறொரு முடிவு

உரையசைப் பொருண்மையினையுடைய அம்ம என்னும் இடைச் சொல்லின் ஈற்று அகரம் ஆகரமாய் நீண்டு முடியும்.

அம்ம + கொற்றா - அம்மாகொற்றா

"உரைப்பொருட்கிளவி நீட்டமும் வரையார்" (தொல் எழுத்து - 213)

3. செவ்வெண் என அழைக்கப் படுவது எதனால்?

11. பல என்னும் சொல்லுக்கு வேறொரு முடிபு

ஒன்றொடு ஒன்று தொர்டர்ச்சியாய் செய்யுள் முடிவில் வரும்போது பல என்னும் சொல்லும் நீட்சியடையும்போது வருமொழி சில என்று தான் இருக்கும்.

(எ-டு)

பலாஅஞ்சிலாஅம் என்மனார் புலவர்

இதன் பொருள் பலசில என்பதாகும். எண்ணும்மை தொக்கு வந்துள்ளதால் இது செவ்வெண் எனப்படும்.

"பலவற்று இறுதி நீடுமொழி உளவே
செய்யுள் கண்ணிய தொடர்மொழியான" (தொல் - எழுத்து - 214)

12. பலசில திரியும் இடம்

தொடர்மொழி அல்லாத ஈரெழுத்து ஒரு மொழியாகிய பல சில என்னும் அகர ஈற்றுச் சொற்கள் தம்முன்தான் வரும்போது லகர ஒற்று றகர ஒற்றாகத் திரியும்.

(எ-டு) பற்பல கொண்டார்
சிற்சில கொடு
பல + கடல் - பலகடல்
சில + யானை - சிலயானை

"தொடரல் இறுதி தம்முன் தாம்வரின்
லகரம் றகர (ஒற்று) ஆகலும் உரித்தே" (தொல் - எழுத்து - 215

4. பல சில எனும் சொற்கள் எவ்வாறு வரும்?

13. பல சில எனும் சொற்கள்

பலசில என்னும் இரண்டற்கும் பொது விதியாற் கூறிய வல்லெழுத்து மிகும் என்றது இங்கு உறழ்ச்சியாக வரும். அதாவது மிகுந்தும் மிகாதும் வரும்.

(எ-டு) பலப்பல, சிலச்சில } மிகுந்துவந்தன

பலபல, சிலசில } மிகாது வந்தன

வல்லெழுத்து இயற்கை உறழத் தோன்றும் (தொல் - எழுத்து - 217)

14. அகர ஈறு (வேற்றுமைப்புணர்ச்சி)

அகர ஈறு வேற்றுமைப்புணர்ச்சியிலும் அவ்வழிப்புணர்ச்சியைப் போல் க, ச, த, ப முதல் மொழி வந்து சேரும்போது தத்தமக்கு ஏற்ற ஒற்று மிகுந்து முடியும்

(எ-டு)

"இருவிள + கொற்றன் - இருவிளக்கொற்றன்

வேற்றுமைக் கண்ணும் அதனோர் அற்றே (தொல் - எழுத்து - 217)

15. அகர ஈறு மரப்பெயராயின் மாறுபடும்

அகர ஈற்று மரப்பெயரானால் சொல் வேற்றுமைப்பொருள் புணர்ச்சியின் போது மெல்லெழுத்து மிக்குமுடியும்.

(எ-டு) விள + கோடு - விளங்கோடு

"மரப்பெயர்க் கிளவிமெல்லெழுத்து மிகுமே" (தொல் - எழுத்து - 218)

16. மக எனும் சொல்

வேற்றுமைப்புணர்ச்சியில் மக என்ற அகர ஈற்றுப் பெயர்க்குப் பின்னர் க, ச, த, ப வரின் இடையில் இன் சாரியை வரும்.

(எ-டு) மக + கை - மகவின்கை என முடியும்.

சிறுபான்மை மெல்லெழுத்து வருமொழி முதலில் அமைந்தாலும் இன் சாரியை பெறும் எனவும் கூறுவர்.

மக + ஞாண் - மகவின் ஞாண்

சில இடத்து இன் சாரியையே அன்றி அத்துச் சாரியையும் ஈற்று வல்லெழுத்தும் வந்து முடியும்.

மக + கை + மக + அத்து + கை - மகத்துக்கை என வரும்.

மகப்பெயர்க்கிளவிக்கு இன்னே சாரியை

"அத்து அவண் வரினும் வரைநிலை இன்றே"

(தொல் - எழுத்து - 220)

17. பல என்னும் சொல்

1. பலவற்றைக் குறிக்கும் அகர இறுதிச் சொல்லின் பின் கசதப வந்தால் உருபியலில் கூறியது போன்று வற்றுச் சாரியை பெற்று வல்லெழுத்து மிகுந்து வரும்.

(எ-டு) பல + கோடு - பலவற்றுக்கோடு

"பலவற்று இறுதி உருபியல் நிலையும்" (தொல் - எழுத்து - 221)

நிலைமொழி ஈறு அகரமாய் இருக்க நேரும் மாறுதல்களை இதுவரை கூறினார். நிலைமொழி ஈறு ஆகாரமாய் இருக்கும்போது அல்வழிப்புணர்ச்சியில் நேரும் மாறுதல்களை நான்கு நூற்பாக்களிலும் வேற்றுமைப் புணர்ச்சியில் அடையும் மாறுதல்களையுப் பத்து நூற்பாக்களிலும் இனித் தொல்காப்பியர் கூறுவதைக் காண்போம்.

## 8.3 ஆகார ஈறு

1. ஆகார ஈறு (அல்வழி)

அல்வழிப் புணர்ச்சியின்போது ஆகார இறுதிப்பெயரின் பின்னர்க் க, ச, த, ப தோன்றின் அகர இறுதியில் அடைந்தது போலத் தத்தமக்கு இனமான வல்லொற்றுக்கள் மிகும்.

(எ-டு) தாரா + கடிது - தாராக்கடிது

"ஆகார இறுதி அகர இயற்றே" (தொல் - எழுத்து - 222)

2. ஆகார ஈற்று வினைச்சொல்

செய்யா என்ற வினையெச்சமும் மேற்கூறியவாறு வல்லெழுத்து மிக்குமுடியும்.

உண்ணா + கொண்டான்

உண்ணாக் கொண்டான் எனவரும்

"செய்யா என்னும் வினை எஞ்சுகிளவியும்

அவ்வியல் திரியாது என்மனார் புலவர்" (தொல் - எழுத்து - 223)

3. ஆகார ஈறு உம்மைத்தொகையில்

இருபெயர் உம்மைத் தொகையில் நிலைமொழி ஈறு ஆகாரமாயிருக்க வருமொழி க ச த பக்களில் தொடங்கினால் ஆகாரத்தின்பின் அகரம் மிகும்.

(எ-டு) உவா + பதினான்கு - உவாஅப்பதினான்கு

"உம்மை எஞ்சிய இருபெயர்த்தொகைமொழி

மெய்ம்மை ஆக அகரம் மிகுமே" (தொல் - எழுத்து - 224)

4. இயல்பாகும் ஆகார ஈற்றுச்சொற்கள்

ஆ, மா, ஆகார ஈற்றுவிளிப்பெயர் யா என்ற வினாப்பெயர் பலவற்றைக் குறிக்கும் ஆகார ஈற்றுச் சொற்கள், முன்னிலை அசைச்சொல்லாகிய மியா என்ற இடைச்சொல் கூறுவோன் தொழிலைக் குறிக்கும் வினாக்கள் ஆகிய இவ்வனைத்தும் அல்வழியில் வருமொழி முதல் கசதப வரின் இயல்பாய்ப் புணரும்.

(எ-டு) ஆ + குறிது - ஆகுறிது

மா + குறிது - மா குறிது

ஊரா + கொள் - ஊராகொள்

யா + குறிய - யாகுறிய

உண்ணா + குதிரைகள் - உண்ணா குதிரைகள்

கேண்மியா + கொற்றா - கேண்மியாகொற்றா

உண்கா + கொற்றா - உண்கா கொற்றா

(உண்கா என்பது யான் உண்பேனோ என்னும் பொருள் தரும்)

"ஆவும் மாவும் விளிப்பெயர்க்கிளவியும்
யாவென் வினாவும் பலவற்று இறுதியும்
ஏவல் குறித்த உரையசை மியாவும்
தன்மொழி உரைக்கும் வினாவின் கிளவியோடு
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப"

(தொல் - எழுத்து - 225)

5. ஆகார ஈறு (வேற்றுமைப்புணர்ச்சி)

ஆகார ஈற்று பெயர் வேற்றுமைப் புணர்ச்சியுன் போது அகர ஈறு அல்வழிப்புணர்ச்சியில் அடைந்துபோலவே வல்லெழுத்து வரின் இனமான வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) தாரா + கால் - தாராக்கால்

"வேற்றுமைக் கண்ணும் அதனோர் அற்றே" (தொல் - எழுத்து - 226)

6. வேறுசில ஆகார ஈறுகள்

குற்றெழுத்தின் பின்னருள்ள ஆகார ஈற்றுச் சொல்லிற்கும், ஆகார ஈற்று ஓரெழுத்து ஒரு மொழிக்கும் பின்னர் க ச த ப தோன்றின் இடையில் அகரம் தோன்றும்.

(எ-டு)

பலா + கோடு - பலாஅக்கோடு

கா + குறை - காஅக்குறை

“குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்

அறியத் தோன்றும் அகரக் கிளவி” (தொல் - எழுத்து - 227)

7. இரா என்னும் சொல்

குறியதன் பின்னர் ஆகார இறுதியைக் கொண்ட இரா என்ற சொற்கு அகரம் இல்லை.

(எ-டு)

இரா + கொண்டான் - இராக்கொண்டான்

“இரா என கிளவிக்கு அகரம் இல்லை” (தொல் - எழுத்து - 228)

5. நிலாஎச்சாரியை யோடு வரும்?

8. நிலா

குறிய தன் பின் ஆகார இறுதியைக் கொண்ட நிலா என்ற சொல் அத்துச் சாரியையோடு வரும்.

நிலா + கொண்டான்



நிலா + அத்து + கொண்டான்



நிலாத்துக் கொண்டான்

“நிலாவென் கிளவி அத்தோடு சிவனும்” (தொல் - எழுத்து - 229)

9. யா, பிடா, தளா

யா என்ற மரத்தைக் குறிக்கும்சொல்லும் பிடா, தளா என்ற சொற்களும் வருமொழி முதலில் க ச த ப தோன்றின் இடையில் மெல்மெழுத்து மிக்குமுடியும்.

(எ-டு)

யா + கோடு - யாஅங்கோடு

பிடா + கோடு - பிடாஅங்கோடு

தனா + கோடு - தளாஅங்கோடு

யாமரக் கிளவியும் பிடாவும் தளாவும்

“ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே” (தொல் - எழுத்து - 230)

முற்கூறிய மூன்றுபெயருக்கும் மெல்லெழுத்தேயன்றி வல்லெழுத்து மிக்கு முடியினும் வல்லெழுத்து மிக்கு முடியினும் குற்றமில்லை.

(எ-டு) யா அக்கோடு.

பிடாஅக்கோடு

தளாஅக்கோடு

"வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை" (தொல் - எழுத்து - 231)

10. மா (மரம்) ஆ, மா

மா என்ற மரத்தைக் குறிக்கும் சொல்லும் ஆ, மா என்ற விலங்கைக் குறிக்கும் சொற்களும் முன்பு கூறிய யா, பிடா, தளா ஆகிய பெயர்களைப்போல அகரமும் மெல்லெழுத்தும் பெற்றும் முடியும். இவற்றுள் ஆ, மா என்னும் இரண்டு பெயர்களிடத்தும் னகர ஒற்று வரும்.

(எ-டு) மா + கோடு - மாஅங்கோடு

ஆ + கோடு - ஆன்கோடு

மா + கோடு - மான்கோடு

"மாமரக் கிளவியும் ஆவும் மாவும்
ஆமுப்பெயரும் அவற்றோர் அன்ன
அகரம் வல்லெழுத்து அவையான் நிலையா
னகரம் ஒற்றும் ஆவும் மாவும்" (தொல் - எழுத்து - 232)

ஆவின் னகர ஒற்று அகரமொடும் பொருந்தும் இடன் உடைத்து.

ஆ + நெய் > ஆ + ன் + நெய் > ஆ + ன் + நெய் > ஆன்நெய்

"ஆன் ஒற்று அகரமொடு நிலையிடன் உடைத்தே"

(தொல் - எழுத்து - 233)

ஆவின் பின்னர் வரும் ஈகாரம் ஏறிய பகரம் 'பீ' தான் மிக்குப் பின்னர்க் குன்றும் பீ என்பது 'பி' என வரும்.

(எ-டு) ஆ + பீ - ஆப்பி

"ஆன்முன் வரூஉம் ஈகார பகரம்
தான் மிகத் தோன்றிக்குறுகலும் உரித்தே" (தொல் - எழுத்து - 234)

11. இறா

குற்றெழுத்தின் பின்வரும் ஆகார இறுதியின் சினையாகிய அகரம் கெட (அதாவது ஆ நெடில் குறுகி அகுறில் ஆகும்).

உகரம் தோன்றுதல் செய்யுளில் உண்டு. குறியதன் இறுதிச் சினை கெட என்பதால் அகரம் ஆகாரத்தின் உறுப்பு என்றும் கருதலாம்.

(எ-டு) இறா + புறத்து - இற > புறத்து

இற + உ + புறத்து - இறவுப்புறத்து

"இறவுப்புறத்தன்ன பிணர்படு தடவுமுல்" (நற் - 19)

"குறியதன் இறுதிச் சினைகெட உகரம்
அறிய வருதல் செய்யுளுள் உரித்தே" (தொல் - எழுத்து - 236)

## 8.4 இகர ஈறு

1. இகர ஈறு (அல்வழி)

காலத்தையும் இடத்தையும் முறையே காட்டும் இனி, அணி என்ற இடைச்சொற்களும் வினையெச்சமும் இகரச்சுட்டும் நிலைமொழியாயிருக்கப் பின்னர் க, ச, த, ப தோன்றின் வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) இனி + கொண்டான் - இனிக்கொண்டான்

அணி + கொண்டான் - அணிக்கொண்டான்

தேடி + கொண்டபின் - தேடிக்கொண்டபின்

இ + கொற்றன் - இக்கொற்றன்

"இனி அணி என்னும் காலையும் இடனும்
வினைஎஞ்சு கிளவியும் சுட்டும் அன்ன" (தொல் - எழுத்து - 237)

2. இகர ஈற்று வினையெச்சத்திற்குச் செய்யுள் மரபு

இன்றி எனும் வினையெச்சத்து இறுதியில் நின்ற இகரம் உகரமாதல் செய்யுளிடத்து உண்டு.

(எ-டு) "இடையின்று குறுகி" (புறம் - 54)

இன்றி என்னும் வினையெஞ்சு இறுதி
நின்ற இகரம் உகரம் ஆதல்
தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே

(தொல் - எழுத்து - 238)

3. 'இ' சுட்டு

இகரச்சுட்டு அகரச் சுட்டு போலவே அல்வழிப் புணர்ச்சியுள் முடியும். அதாவது மென்கணமாயின் மெல்லெழுத்துப் பெறும் - இடைக்கனத்தும் உயிர்க்கணத்தும் வகரம் பெறும். செய்யுளிடத்து வகரம் கெட்டுச் சுட்டு நீளவும் செய்யும்.

(எ-டு) இ + ஞானம் - இஞ்ஞானம்

இ + ஆடை - இவ்வாடை

இ + யாழ் - இவ்யாழ்

இ + வயினான் - ஈவயினான்

"சுட்டின் இயற்கை முற்கிளந்தற்றே" (தொல் - எழுத்து - 239)

4. இகர ஈற்று அளவுப்பெயர்

தூணி என்ற சொல்லின் பின்னர்ப் பதக்கு என்ற சொல்வரின் அது வேற்றமைப்புணர்ச்சியில் வல்லெழுத்து மிகுவது போல மிக்கு முடியும்.

(எ-டு) தூணி + பதக்கு - துணிப்பதக்கு

"பதக்கு முன் வரினே தூணிக்கிளவி

முதற்கிளந்து எடுத்த வேற்றுமை இயற்றே" (தொல் - எழுத்து -240)

நாழி என்றதன்பின் உரி என்ற சொல்வருமிடத்து ழி கெட அவ்விடத்து ட் வரும்.

(எ-டு) நாழி + உரி > நா + உரி > நா + ட் + உரி > நாடுரி

"உரி வருகாலை நாழிக்கிளவி

இறுதி இகரம் மெய்யொடும் கெடுமே

டகரம் ஒற்றும் ஆவயினான" (தொல் - எழுத்து - 241)

5. இகர ஈறு வேற்றுமை முடிபு

இகரத்தை இறுதியாகக்கொண்ட பெயரின் பின்னர் க, ச, த, ப தோன்றின் வேற்றுமைப்புணர்ச்சியில் வல்லெழுத்து மிக்கு முடியும்.

6. இகர ஈறு வேற்றுமையில் எவ்வாறு முடியும்?

(எ-டு) கிளி + கால் - கிளிக்கால்

"இகர இறுதிப் பெயர்நிலை முன்னர்

வேற்றுமையாயின் வல்லெழுத்து மிகுமே" (தொல் - எழுத்து - 236)

6. பனி, வளி

காலவேறு பாட்டினைக் குறிக்கும் பனி என்ற சொல்லின் பின்னர் க, ச, த ப தோன்றின் இடையில் அத்து இன் என்ற சாரியைகள் வரும். வளி என்ற பூதத்தை உணர்த்தும் சொல்லும் இவ்வாறே முடியும்.

(எ-டு) பனி + கொண்டான் - பனியத்துக்கொண்டான்

பனியிற்கொண்டான்

"பனி என வருஉம் காலவேற்றுமைக்கு

அத்தும் இன்னும் சாரியை யாகும்"

"வளியெனவரூஉம் பூதக்கிளவியும்

அவ்வியல் நிலையல் செவ்விது என்ப" (தொல் - எழுத்து - 242, 243)

7. உதி

உதி என்ற மரத்தை உணர்த்தும் சொற்குப்பின் க, ச, த, ப வரின் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) உதி + கோடு - உதிங்கோடு

"உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே"

(சொல் - எழுத்து - 244)

8. புளி

புளி என்ற மரத்தை உணர்த்தும் சொல்லின் பின் க, ச, த ப வரின் 'அம்' சாரியை தோன்றும்.

"புளி மரக் கிளவிக்கு அம்மே சாரியை" (தொல் - எழுத்து - 245)

மரப்பெயரல்லாப் புளிப்பெயரின் பின்னர் க, ச, த, ப தோன்றின் மெல்லெழுத்து மிகும் வல்லெழுத்து மிகுந்தாலும் குற்றமில்லை.

புளி + சோறு - புளிஞ்சோறு, புளிச்சோறு

"ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே" (தொல்- எழுத்து - 246)

"வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை

ஒல்வழி அறிதல் வழக்கத்தான" (தொல் - எழுத்து- 247)

9. இகர ஈற்று நாட்பெயர் - பரணி

இகர ஈற்று நாட்பெயர்ப் பின்னர்க் க, ச, த, ப என்னும் இவற்றை முதலாகக் கொண்ட தொழிலை உணர்த்தும் சொல்வரின் இடையில் ஆன் வருதல் உண்டு.

(எ-டு) பரணி + கொண்டான் - பரணியாற்கொண்டான்

"நாள் முன் தோன்றும் தொழில் நிலைக்கிளவிக்கு

ஆன் இடை வருதல் ஐயம் இன்றே" (தொல் - எழுத்து - 248)

திங்களாக வந்தால் இக்குச்சாரியை பெறும்.

(எ-டு) ஆடி - கொண்டான் - ஆடிக்குக்கொண்டான்

"திங்கள் முன்வரின் இக்கே சாரியை" (தொல் - எழுத்து - 249)

## 8.5 ஈகார ஈறு

தொல்காப்பியர் ஈகார இறுதி பற்றிய புணர்ச்சி விதிகளை ஐந்து நூற்பாக்களில் கூறியுள்ளார். முதல் மூன்று நூற்பாக்கள் அல்வழி எஞ்சிய இரண்டும் வேற்றுமைப் புணர்ச்சிக்குரியன.

1. ஈகார ஈறு (அல்வழி)

ஈகாரத்தை இறுதியாக உடைய சொல் நிலைமொழியாயிருக்கப் பின் க ச த ப தோன்றின் ஆகார ஈற்றுப்புணர்ச்சியிற் கூறினாற்போல வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு)

தீ + சுடும் - தீச்சுடும்

தீ + கடிது - தீக்கடிது

"ஈகார இறுதி ஆகார இயற்றே" (தொல் - எழுத்து - 250)

2 நீ. பீ. மீ

நீ என்ற பெயருக்கும், பீ என்ற இடக்கர்ப் பெயர்க்கும், மீ என்ற இடத்தை உணர்த்தும், மரூஉச்சொற்கும் வல்லெழுத்து மிகாது.

(எ-டு) நீ + குறியை நீகுறியை

மீ + குறிது - மீகுறிது

பீ + தீது - பீதீது

"நீ என் பெயரும் இடர்க்கர்ப்பெயரும்

மீ என மரீஇய இடப்பெயர்க்கிளவியும்

ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும்"

(தொல் - எழுத்து - 251)

இடம் வரை கிளவியாகிய மீ என்றதன்பின் வல்லெழுத்து மிகுமாறு வருமொழியும் உள்ளன.

(எ-டு) மீ + பாய் - மீப்பாய்

"இடம் வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகும்
உடனிலை மொழியும் உளவென மொழிப" (தொல் - எழுத்து - 252)

3. ஈகார ஈறு (வேற்றுமை)

"வேற்றுமைக் கண்ணும் அதனோர் அற்றே" (தொல் - எழுத்து - 253)

4. நீ

நீ என்ற ஒரு பெயரின் பின்னர்க் க, ச, த, ப வரின் உருபுப்புணர்ச்சியில் கூறியுள்ளது போல நெடுமுதல் குறுதி னகர ஒற்றுப்பெறும் வல்லெழுத்து மிகாது முடியும்.

(எ-டு) நீ + சென்னி - நின்சென்னி

"நீ என் ஒருபெயர் உருபியல் நிலையும்
ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும்" (தொல் - எழுத்து - 254)

## 8.6 உகர ஈறு

உகர ஈற்றுப் புணர்ச்சியைத் தொல்காப்பியர் பத்து நூற்பாக்களில் உணர்த்தியுள்ளார். முதல் ஐந்து அல்வழி அடுத்த ஐந்து வேற்றுமை.

1 உகர ஈறு (அல் வழிப்புணர்ச்சி)

உகர இறுதிப்பெயர் அல்வழிப் புணர்ச்சியில் க ச த ப வருமொழி முதலில் வந்தால் அகர ஈற்றுப் புணர்ச்சியைப் போல வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) கடு + குறிது - கடுக்குறிது

"உகர இறுதி அகர இயற்றே" (தொல் + எழுத்து - 255)

சுட்டு

உகரச்சுட்டின் பின்னர்க் க ச த ப வரின் வல்லெழுத்து மிகும். ஞ, ந, ம வரின் ஒற்று மிகும். ய, உயிர் வந்தால் வகர ஒற்று வரும். செய்யுளில் நீண்டு முடியும்.

(எ-டு) உ + கொற்றன் - உக்கொற்றன்

உ + ஞாண் - உஞ்ஞான்

உ + யாழ் - உவ்யாழ்

உ + ஆடை - உவ்வாடை

"சுட்டின் முன்னரும் அத்தொழிற்று ஆகும்

ஏனவை வரினே மேல் நிலை இயல" (தொல் - எழுத்து - 256, 257)

சுட்டினை முதலாகவும் உகரத்தை இறுதியாகவும் உடைய சொல்லின் பின்னர்க் க ச த ப வரின் இயல்பாகும். அன்று வரின் நிலைமொழி உகரம் ஆகாரமாய்த் திரியும் ஐ வரும்போது மெய்யை நீக்கி இறுதி உகரம் மட்டும் கெடும் இவ்விதிகள் செய்யுளிடத்து வரும்.

(எ-டு) அது + குறிது - அது குறிது

அது + அன்று - அதா அன்று

அது + ஐ + மற்றம்ம - அதை மற்றம்ம

சுட்டுமுதல் இறுதி இயல்பாகும்மே (தொல் - எழுத்து 258)

"அன்று வரு காலை ஆ ஆகுதலும்

ஐ வரு காலை மெய் வரைந்து கெடுதலும்

செய்யுள் மருங்கின் உரித்தெனமொழிப" (தொல் - எழுத்து - 259)

2. உகர ஈறு (வேற்றுமை)

வேற்றுமைப்புணர்ச்சியில் உகர இறுதிப்பெயர் அகர இறுதிப் பெயரைப் போலக் க ச த ப வந்த வழி அவ்வெழுத்து மிகும்.

(எ-டு) கடு + காய் - கடுக்காய்

"வேற்றுமைக் கண்ணும் அதனோர் அற்றே" (தொல் - எழுத்து - 260)

3. எரு, செரு

எரு, செரு இவற்றின் பின்னர்க் க ச த ப தோன்றின் அம்முச்சாரியை வரும். செருவின் பின் வந்த அம்முச்சாரியையின் மகரம கெடும். அதன்பின் இனமான வல்லெழுத்து மிகும்.

(எ-டு)

எரு + குழி - எரு ,அம் + குழி - எருவங்குழி

செரு + களம் - செரு + அம் + களம் - செருவங்களம்

"எருவும் செருவும் அம்மொடு சிவணித்
திரிபிடன் உடைய தெரியும் காலை
அம்மின் மகரம் செருவயின் கெடுமே
தம்மொற்று மிக உம் வல்லெழுத்து இயற்கை"

(தொல் - எழுத்து - 261)

4. பழு

நிலைமொழி இறுதியில் உள்ள 'ழு' நீளும் இடம் உண்டு. அப்போது அதன்பின் உகரம் வருல் வேண்டும்.

(எ-டு)

பழு + பல் - பழூஉப்பல்

"ழகர உகர நீடிடன் உடைத்தே
உகரம் வருதல் ஆவயினான " (தொல் - எழுத்து - 262)

5. ஒடு (மரம்)

மரத்தை உணர்த்தும் ஒடு என்ற சொல் உதி என்ற மரத்தைப்போலக் க ச த ப வரின் இனவெழுத்து மிக்கு வரும்

(எ-டு) ஒடு + கோடு - ஒடுங்கோடு

"ஒடுமரக்கிளவி உதிமரஇயற்றே" (தொல் - எழுத்து - 263)

7 சுட்டுப்பெயர் எச்சாரியை பெறும்?

6. சுட்டுப்பெயர்

சுட்டினை முதலாகவும் உகரத்தை இறுதியாகவும் உள்ள சொற்கள் உருபுப் புணர்ச்சியில் கூறியுள்ளபடி அன் சாரியை பெற்று உகரம் கெட்டு முடியும்.

(எ-டு) அது + கோடு - அதன்கோடு

"சுட்டு முதல் இறுதி உருபியல் நிலையும்
ஒற்றிடை மிகாஅ வல்லெழுத்து இயற்கை" (தொல் - எழுத்து - 264)

## 8.7 ஊகார ஈறு

1. ஊகார ஈறு (அல்வழிப்புணர்ச்சி)

ஆகார ஈற்றைப்போல் வல்லெழுத்து வந்துவழி வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) கழூஉ + கடிது - கழூஉக்கடிது

"ஊகார இறுதி ஆகார இயற்றே" (தொல் - எழுத்து - 265)

ஊகார இறுதி வினையெச்சமும் முன்னிலை வினைச்சொல்லும் முற்கூறியவாறு வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) உண்ணூ + கொண்டான் - உண்ணூக்கொண்டான்

"கைதூ + கொற்றா - கைதூக்கொற்றா

வினை எஞ்சு கிளவிக்கும் முன்னிலை மொழிக்கும்

நினையுங் காலை அவ்வகை வரையார்"

(தொல் - எழுத்து - 266)

2. ஊகார ஈறு (வேற்றுமைப் புணர்ச்சி)

ஊகார இறுதிப்பெயர் வேற்றுமைப் புணர்ச்சியில் ஆகார இறுதியைப் போல வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) கொண்மூ + குழாம் - கொண்மூக்குழாம்

"வேற்றுமைக் கண்ணும் அதனோர்அற்றே" (தொல் - எழுத்து - 267)

3. உடூ, தூ

குற்றெழுத்தின்பின் ஊகாரத்தைக்கொண்ட ஈரெழுத்து ஒருமொழி, ஊகார இறுதியைக்கொண்ட ஓரெழுத்தொருமொழி ஆகியவற்றின் பின் க, ச, த ப வரின் ஊகாரத்தின் பின் உகரம் தோன்றும்.

(எ-டு) உடூ + குறை - உடூஉக்குறை

தூ + குறை - தூஉக்குறை

"குற்றெழுத்து இம்பரும் ஓரெழுத்து மொழிக்கும்

நிற்றல் வேண்டும் உகரக்கிளவி" (தொல் - எழுத்து - 268)

4. பூ

பூ என்ற ஒரு பெயர் மட்டும் சில போது வல்லெழுத்து மிகுதல் உண்டு.

பூ + சோலை - பூஞ்சோலை

பூ + கோள் - பூக்கோள்

"பூ என் பெயர் ஆ இயல்பு இன்றே

ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே" (தொல் - எழுத்து - 269)

5. ஊ

ஊகார இறுதி பெயர்களுள் ஊ என்ற ஒரு பெயர் மட்டும் வல்லெழுத்து மிகாது ன ஒற்று மிகும். அக்குச் சாரியை பெறுதலும் உரித்து.

(எ-டு) ஊ + தடி - ஊன்தடி

ஊ + குறை - ஊனக்குறை

"ஊ என் ஒருபெயர் ஆ வொடு சிவனும்"

"அக்கு என் சாரியை பெறுதலும் உரித்தே

தக்க வழி அறிதல் வழக்கத்தான" (தொல் - எழுத்து - 270, 271)

6. ஆடூஉ, மகடூஉ

ஆடூஉ, மகடூஉ என்ற இரண்டு பெயர்களுக்கும் முன் க ச த ப தோன்றின் இடையில் இன் வரினும் குற்றமில்லை.

(எ-டு) ஆடூஉ + கை - ஆடுவின் கை

மகடூஉ + கை - மகடூஉ வின் கை

ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்

இன் இடைவரினும் மானம் இல்லை

(சொல் - எழுத்து - 272)

## 8.8 எகர ஒகர ஈறுகள்

எ, ஒ ஆகிய இவை பெயர்க்கு ஈறாகாமல் முன்னிலை வினைக்கே ஈறாக வரும் தேற்றம், சிறப்பு, இப்பொருளில் இவை ஈறாக வாரா.

(எ-டு) ஏஎக்கொற்றா

ஓஒக்கொற்றா

"எகர ஒகரம் பெயர்க்கு ஈறாக

முன்னிலை மொழிய என்மனார் புவலர்

தேற்றமும் சிறப்பும் அல்வழியான" (தொல் - எழுத்து - 273)

தேற்றப்பொருளில் வரும் எகரமும், சிறப்புப் பொருளில் வரும் ஒகரமும், வல்லெழுத்து மிகுதியாகக் கொள்ளாது. இதனால் முன்னிலை வினைக்கண் வருவது வல்லெழுத்து மிகுதியாகக் கொள்ளும் என்பது பெறப்பட்டது.

(எ-டு) யானே எ கொண்டேன்

அவனோ ஒ கொண்டான்

"தேற்ற எகரமும் சிறப்பின ஒவ்வும்

மேற்கூறு இயற்கை வல்லெழுத்து மிகா" (தொல் - எழுத்து - 274)

## 8.9 ஏகார ஈறு

1. ஏகார ஈறு (அல்வழி)

ஏகார இறுதிப்பெயர் அல்வழிப் புணர்ச்சியுள் ஊகார இறுதியைப் போல வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) சே + கடிது - சேக்கடிது

"ஏகார இறுதி ஊகார இயற்றே" (தொல் - எழுத்து - 275)

இயல்பாக முடியும் ஈறுகள்

மாறுபாட்டினை எச்சமாகக் கொண்டதும், வினா, எண் ஆகிய பொருளில் வரும் ஏகாரமும் வல்லெழுத்து வரின் இயல்பாக முடியும்.

(எ-டு) யானே கொண்டேன்

நீயே கொண்டாய்

கொற்றனே சாத்தனே

மாறுகொள் எச்சமும் வினாவும் எண்ணும்

கூறிய வல்லெழுத்து இயற்கை ஆகும்

(தொல் - எழுத்து - 276)

2. ஏகார ஈறு (வேற்றுமை)

ஏகார இறுதிப்பெயர் வேற்றுமைப் புணர்ச்சியின்போது ஊகார இறுதிப் பெயரைப்போலவே வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) வே + குடம் - வேக்குடம்

"வேற்றுமைக்கண்ணும் அதனோர் அற்றே" (தொல் - எழுத்து - 277)

3. ஏ இறுதி

ஏ என்னும் இறுதிக்கு எகரம் வரும்.

(எ-டு) ஏ + கொட்டில்

ஏஎக் கொட்டில்

"ஏ என் இறுதிக்கு எகரம் வருமே" (தொல் - எழுத்து - 278)

4. சே மரப்பெயர்

சே என்ற மரத்தை உணர்த்தும் பெயர் ஒடு என்ற மரத்தை உணர்த்தும் பெயரைப்போல் மெல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) சே + கோடு - சேங்கோடு

"சே என் மரப்பெயர் ஒடு மர இயற்றே" (தொல் - எழுத்து 279)

5. சே என்பதற்கு பெற்றம் பொருளாயின்

சே என்பதற்குப் பெற்றம் என்பது பொருளாயின் வருகின்ற வல்லெழுத்தின் முன்னர் இன் சாரியை வரும்.

(எ-டு) சே + கோடு - சேவின் கோடு

"பெற்றம் ஆயின் முற்றஇன் வேண்டும்" (தொல் - எழுத்து - 280)

## 8.10 ஐகார ஈறு

1. வேற்றுமைப்புணர்ச்சி

ஐகார இறுதிப்பெயரின் பின்னர்க் க ச த ப வரின் வேற்றுமைப் புணர்ச்சியில் வல்லெழுத்து மிகும்.

(எ-டு) பனைக்கொடி - பனைக்கொடி

"ஐகார இறுதிப்பெயர் நிலை முன்னர்

வேற்றுமையாயின் வல்லெழுத்து மிகுமே" (தொல் - எழுத்து - 281)

2 சுட்டுமுதல் இறுதி ஐ

சுட்டைமுதலாகவும், ஐகாரத்தை இறுதியாகவும் உடைய சொற்கள் வேற்றுமைப்புணர்ச்சியில் கூறினாற்போல வற்றுச் சாரியை பெற்று முடியும்.

(எ-டு) அவை + வற்று + கோடு - } அவையற்றுக்கோடு
அவை + அற்று + கோடு - }

"சுட்டு முதல் இறுதி உருபியல் நிலையும்" (தொல் - எழுத்து - 282)

3. விசை, ஞெமை, நமை

விசை, ஞெமை, நமை ஆகிய மரத்தை உணர்த்தும் முப்பெயரும் சே என்னும் மரப்பெயர் போல மெல்லெழுத்து மிக்கு முடியும்.

விசை + கோடு - விசைங்கோடு

ஞெமை + கோடு - ஞெமைங்கோடு

நமை + கோடு - நமைங்கோடு

"விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்

ஆமுப்பெயரும் சேமர இயல" (தொல் - எழுத்து - 283)

4. பனை, அரை, ஆவிரை

பனை, அரை, ஆவிரை என்ற சொற்கள் வேற்றுமைப்புணர்ச்சியில் க ச த ப வரின் அம்முச் சாரியையோடு பொருந்தும். அரை என்ற சொல்லைத் தவிர ஏனைச் சொற்களில் உள்ள ஐ காரம் மெய்யை விட்டுக்கெடும்.

(எ-டு) பனை + காய் + பனை + அம் + காய் - பனங்காய்

ஆவிரை + காய் - ஆவிரங்காய்

அரை + காய் - அரையங்காய்

"பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
நினையுங் காலை அம்மோடு சிவனும்
ஐ என் இறுதி அரை வரைந்து கெடுமே
மெய் அவண் ஒழிய என்மனார்புலவர்" (தொல் - எழுத்து - 284)

5. பனை

பனை நிலைமொழியாயிருக்க அட்டு வருமொழியாய் வரும்போது ஐ என்ற உயிர்கெட்டு அவ்விடத்தில் ஆகாரம் வரல்வேண்டும்.

கொடி என்ற சொல்வரின் அங்கு ஐ கெடாது நிற்க வல்லெழுத்து மிகும்.

(எ-டு) பனை + அட்டு - பனா அட்டு

பனை + கொடி - பனைக்கொடி

"பனையின் முன்னர் அட்டுவருகாலை
இவையின்று ஆகும் ஐ என் உயிரே
ஆகாரம் வருதல் ஆவயி னான"
"கொடிமுன் வரினே ஐ அவண் நிற்பக்
கடிநிலை இன்றே வல்லெழுத்து மிகுதி" (தொல் - எழுத்து - 285, 286)

6. திங்கள் நாள் பெயர்

திங்கள் நாள் இவற்றைக் குறிக்கும் ஐகார ஈற்றுப் பெயர் முன்னர்க் கூறப்பட்ட இகர ஈற்றுப் பெயர்கள் போல முறையே இக்கு ஆன் என்ற சாரியைகளைப் பெறும்.

(எ-டு) சித்திரை + கொண்டான்
சித்திரை + இக்கு + கொண்டான் } சித்திரைக்குக்கொண்டான்

கேட்டை + கொண்டான் - கேட்டையாற்கொண்டான்

"திங்களும் நாளும் முந்து கிளந்தன்ன" (தொல் - எழுத்து - 287)

8. மழையென் கிளவி எவ்வாறு வரும்?

7. மழை

மழை என்ற சொல்லின் பின்னர் க ச த ப வரின் வளிஎன்னும் சொல் அத்து. இன் சாரியை பெற்றதுபோல இதுவும் பெற்று முடியும்.

(எ-டு) மழையத்துக் கொண்டான்

மழை + இன் + கொண்டான் > மழையிற்கொண்டான்

"மழைஎன் கிளவி வளியியல் நிலையும்" (தொல் - எழுத்து - 288)

8. வேட்கை

செய்யுளில் வேட்கை என்ற ஐகார இறுதிப்பெயரின் பின்னர் அவா என்றது வரின் ஐகாரம் அதன் முன்னர் உள்ள மெய்யொடுங் கெட டகார ஒற்று ணகர ஒற்றாகும்.

(எ-டு) வேட்கை + அவா - வேணவா

"செய்யுள் மருங்கின் வேட்கை எனும்

ஐ என இறுதி அவா முன் வரினே

மெய்யொடும் கெடுதல் என்மனற்புலவர்

டகார ண்காரம் ஆதல் வேண்டும்" (தொல் - எழுத்து - 289)

## 8.11 ஓகார ஈறு

1. அல்வழிப்புணர்ச்சி

ஓகார இறுதிப்பெயரின் பின் க ச த ப வரின் அல்வழியிடத்து ஏகார இறுதியில் பெயரைப்போல வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) ஓ + கடிது - ஓக்கடிது

"ஓகார இறுதி ஏகார இயற்றே" (தொல் - எழுத்து - 290)

இயல்பாகும் சொற்கள்

மாறுபாட்டினை எச்சப்பொருளின் கொண்டதும் வினா, ஐயம் இப்பொருளில் வந்ததுமான ஓகார ஈற்றினைக் கொண்ட பெயர் நிலைமொழியாக இருக்கப்பின்னர்க் க ச த ப வரின் முற்கூறப்பட்ட வல்லெழுத்து மிகா. ஒழியிசை ஓகாரத்தின் நிலையும் இவ்வாறே முடியும்.

(எ-டு) யானோ + கொண்டேன் - யானோ கொண்டேன்

நீயோ + கொண்டாய் - நீயோகொண்டாய்

கொளவோ + கொண்டான் - கொளவோ கொண்டான்

பத்தோ + பதினொன்றோ - பத்தோபதினொன்றோ

"மாறுகொள் எச்சமும் வினாவும் ஐயமும்
கூறிய வல்லெழுத்து இயற்கை ஆகும்
ஒழிந்ததன்நிலையும் ஒழிந்தவற்று இயற்றே"
(தொல் - எழுத்து - 291, 292)

2. வேற்றுமைப் புணர்ச்சி

9. கோயில் எவ்வாறு புணர் மொழியானது?

வேற்றுமைப்புணர்ச்சியின்போது ஓகாரம் ஏகார இறுதிப் பெயரைப்போல ஒகாரம் பெற்று முடியும். வல்லெழுத்து மிகும்.

(எ-டு) ஓ + கடுமை - ஓஒக்கமும்

"வேற்றுமைக்கண்ணும் அதனோர் அற்றே
ஓகரம் வருதல் ஆவயின் ஆன" (தொல் - எழுத்து - 293)

ஓகார இறுதிச் சொல்லை இன் என்ற சொல்லோடு கூறின் வேற்றுமைக்கண் புணர்ச்சி இயல்பாகும்.

(எ-டு) கோ + இல் - கோயில்

"இல்லொடு கிளப்பின் இயற்கை ஆகும்" (தொல் - எழுத்து - 294)

ஓகார இறுதிப்பொருள் உருபியல் நிலையிலுள்ள சொற்களும் உள. அதாவது அவ்விடத்து வல்லெழுத்து மிகாது இயற்கையாய் முடியும். ஒன் சாரியை பெறும்.

(எ-டு) கோ + கை - கோ ஒன்கை

"உருபியல் நிலையு மொழியுமாருளவே
ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும்" (தொல் - எழுத்து - 295)

10. ஔகார ஈறு இருவழியிலும் எவ்வாறு வரும்?

## 8.12 ஔகார ஈறு

ஔகார இறுதிப்பெயர் பின்னர்க் க ச த ப வரின் அல்வழி வேற்றுமை ஆகிய இரண்டு இடத்திலும் வல்லெழுத்து மிகுதலும் உகரம் தோன்றுதலும் உண்டு.

(எ-டு) கௌ + கடிவு - கௌவுக்கடிது
கௌ + கடுமை - கௌவுக்கடுமை

இவ்வாறாகத் தொல்காப்பியர் உயிர் மயங்கியலில் அகர ஈறு ஆகார ஈறு, இகர, ஈகார, உகர, ஊகார, எகர, ஒ கர, ஏகார, ஐகார, ஓகார, ஔகார ஈறுகள் வேற்றுமையிலும் அல்வழியிலும் மயங்கிப் புணரும் முறைகளைத் தெளிவாக எடுத்துரைத்ததகைக் கண்டறிந்தோம். இனி நாம் காணவிருப்பது புள்ளி மயங்கியல் பற்றிய கருத்துகளை ஆகும்.

## I சுயதிறனறி வினாவுக்குரிய விடைகள்

1. அல்வழி, வேற்றுமை என்ற இருவழிகளில்
2. நீட்சிபெற்று ஆகாரமாகும்.
3. எண்ணும்மை தொக்கு வந்துள்ளதால்
4. உறழ்ந்துவரும்
5. அத்துச்சாரியை
6. வல்லெழுத்து மிக்கு முடியும்.
7. அன்சாரியைபெறும்
8. அத்து, இன் சாரியை பெற்று முடியும்.
9. இயல்பாக
10. வல்லெழுத்து மிகுதலும், உகரம் தோன்றுதலும் உண்டு.

## பயிற்சி வினாக்கள்

## II குறு வினாக்கள்

1. இயல்பாக முடியும் அகர ஈற்றுச்சொற்கள் யாவை?
2. ஆகார ஈற்றுச் சொற்கள் அல்வழியில் எவ்வாறு வரும்?
3. ஈகார ஈற்றுச் சொற்கள் எவ்வாறு புணரும்?
4. உகர ஈற்றுச்சொற்களின் புணர்ச்சி நிலையைக் குறிப்பிடுக.
5. எகர ஒகர ஈறுகள் புணருமாற்றை எத்துரைக்க.
6. ஓகார ஈறு இருவழியிலும் புணரும் விதம் பற்றிக் கூறுக.

## III நெடு வினாக்கள்

1. அகர ஈறு மயங்குமாற்றை விளக்குக.
2. ஆகார ஈறு மயங்கும் விதங்களை விவரிக்க.
3. இகர ஈறு மயங்கும் முறைகளை விவரி.
4. ஐகார ஈறு இருவழிகளிலும் புணருமாற்றை விளக்குக.

## அலகு - 9

# புள்ளிமயங்கியல்

9.1 புள்ளி மயங்கியல் செய்திகள்

9.2 மெல்லின ஒற்று ஈறுகள்

9.3 இடையின ஈறுகள்

9.4 புறனடைச் செய்திகள்

சுயதிறனறி வினாக்கள்

1. புள்ளிமயங்கியல் கூறுவது யாது?

# புள்ளி மயங்கியல்

புள்ளி, ஒற்று, மெய் உடம்பு என்பன ஒருபொருட் பல சொற்கள், இப்பாடத்தில் தொல்காப்பியர் மெய்யீறுகளின் புணர்ச்சி இலக்கணம் பற்றி எடுத்துரைக்கிறார்.

**முதன்மை நோக்கம்**

மாணவன் மெய்யெழுத்துக்களை இறுதியாக உடைய சொற்கள் புணர்ச்சியின் போது அடையும் மாற்றங்கள் இன்னதென அறிந்து கொள்கிறான்

**துணைமை நோக்கங்கள்**

- மெல்லின ஈற்றுச் சொற்கள் புணர்ச்சிகளைத் தெரிந்துகொள்கிறான்.
- இடையின ஈற்றுச் சொற்களின் புணர்ச்சிகளையும் அறிந்துகொள்கிறான்.

இதுவரை நாம் தொல்காப்பியர், தொல்காப்பியம் பற்றிய பொதுச்செய்திகளையும், தொல்காப்பியர் கூறிய நூல் மரபு, மொழி மரபு, பிறப்பியல், புணரியல் தொகை மரபு, உருபியல், உயிர் மயங்கியல் ஆகியனபற்றிய கருத்துக்களையும் எட்டுப்பாடங்களில் கண்டோம். ஒன்பதாம் பாடமாகிய இதனுள் மெய்யீறுகளின் புணர்ச்சி பற்றி அறிந்துகொள்ள விருக்கிறோம்.

## 9,1 புள்ளிமயங்கியலில் இடம்பெறும் செய்திகள்

தொல்காப்பியர் முதலில் ஞ, ண, ந, ம, ன என்ற ஈற்றுச்சொற்களையும், பின்னர் ய ர ல வ ழ ள என்ற இடையொற்று ஈற்றுச் சொற்களையும் அறிமுகப்படுத்தி அவை புணர்ச்சியின்போது பெறும் மாற்றங்களை எடுத்துரைக்கிறார். இதில் காணும் கருத்துக்களை,

1. மெல்லொற்று ஈறுகளின் புணர்ச்சி,
2. இடையின ஈறுகளின் புணர்ச்சி என்ற இரு கூறுகளில் அடக்கிக் காணலாம்

## 9,2 மெல்லொற்று ஈறுகள்

1. ஞ்

ஞகர ஈற்றுத்தொழிற்பெயர் உரிஞ் என்பதாகும். அச்சொல்லின் முன் அல்வழி, வேற்றுமை ஆகிய இரண்டிலும் வல்லெழுத்து வரின் அவ்வெழுத்துமிகும்.

(எ-டு) <u>அல்வழி:</u>

உரினுக்கடிது

உரினுச்சிறிது

உரினுப்பெரிது

<u>வேற்றுமை</u>

உரினுக் கடுமை

உரினுச்சிறுமை

உரினுத் தீமை

ஆனால் ஞ, ந, ம வ என்னும் எழுத்துக்கள் வரும்போது ஒற்றுஎழுத்து மிகுவதில்லை. நிலைமொழிகள் உகரம் நிலை பெற்று முடியும்.

(எ-டு) <u>அல்வழி</u>

உரினு நான்றது

உரினு நீண்டது

உரினு வலிது

<u>வேற்றுமை</u>

உரினுமாட்சி

உரினு நீட்சி

உரினு வலிமை

ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர் முன்னர்

அல்லது கிளப்பினும் வேற்றமைக் கண்ணும்

வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே

உகரம் வருதல் ஆவயினான

"ஞ ந ம வ இயையினும் உகரம் நிலையும்"

*(தொல்காப்பியம் 297, 298)*

<u>2. ந்</u>

நகர வீற்றுச் சொற்களாக நாம் காண்பவை பொருந், வெரிந், என்ற இரண்டே ஆகும். அல்வழிப் புணர்ச்சியில் இச்சொற்கள் உகரம் பெறும். ஞ கரவீற்று பெயர்ப்புணர்ச்சியைப்போல இவையும் வந்த வல்லினம் மிகப்பெறும். வேற்றுமைப் புணர்ச்சியாக இருப்பின் உகரத்திற்கு மாறாக அகரம் பெறும்.

அல்வழி :

பொருநுக்கடிது பொருநு வலிது

பொருநுச் சிறிது பொருநு ஞான்றது

பொருநுப் பெரிது

வேற்றுமை

பொருநக்கடுமை, பொருநவன்மை

பொருநச்சிறுமை

பொருநப்பெருமை

பொருநஞாற்சி

"நகர இறுதியும் அதனோ ரற்றே"

வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும்" (தொல் - 299 & 300)

நகரவீற்றில் வெரிந் என்றபெயர் சற்று வேறுபட்ட புணர்ச்சி உடையது. வெரிந் என்ற சொல்லின் முன் வல்லினம் வந்தால் இறுதியழிந்து இனமெல்லெழுத்து தோன்றும்.

(எ-டு) வெரிந் + குறை - வெரிங்குறை

வெரிந் + செய்கை - வெரிஞ்செய்கை

வெரிந் + புறம் - வெரிம்புறம்

(எ-டு) வெரிந் + குறை - வெரிக்குறை

வெரிந் + தலை - வெரித்தலை

வெரிந் + புறம் - வெரிப்புறம்

வல்லெழுத்து மிக்கு வந்தது

"வெரிந் என் இறுதி முழுவதும் கெடுவழி

வரும் இடன் உடைத்தே மெல்லெழுத்து இயற்கை"

"ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே"

(தொல் - எழுத்து - 301 & 302)

3. ண்

ண கர ஈற்றுச் சொல் வேற்றுமைப் புணர்ச்சியில் வல்லெழுத்து வருமொழியாய் வரும்போது நிலைமொழி ஈற்று ணகரம் டகரமாகும்.

(எ-டு) மண் + குடம் - மட்குடம்

சிறுகண் + களிறு - சிறுகட்களிறு

மண் + பானை - மட்பானை

"ணகர இறுதி வல்லெழுத்து இயையின்

டகரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே" (தொல் - எழுத்து - 303)

ஆண், பெண்

முன்னர்த் தொகை மரபில் வேற்றுமை அல்வழி திரிபு இடன் இல என கூறியதற்கேற்ப இயல்பாகவே முடியும்.

(எ-டு) ஆண் + கை - ஆண்கை

பெண் + புறம் - பெண்புறம்

ஆண் + செவி - ஆண்செவி

"ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை" (தொல் - எழுத்து - 304)

ஆண் (மரப்பெயர்)

ஆண் என்பதும் மரப்பெயராக நின்றால் அது அம்முச்சாரியை பெற்று முடியும். (அரைமரம்போல)

(எ-டு) ஆண் + கோடு - ஆண் + அம் + கோடு - ஆணங்கோடு

ஆண் + பூ - ஆண் + அம் + பூ - ஆணம்பூ

இங்குச் சாரியை புணரியல் நிலையிடைப் பொருள் நிலைக்கு உதவுகிறது. ஆண் என்ற சொல் சாரியைபெறாவிடில் அது ஆண் பாலையும், அம் எனும் சாரியைப் பெற்றால் அது ஆண் மரத்தையும் குறிப்பதைக் காணலாம்.

"ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே" (தொல் - எழுத்து - 306)

2. விண் எனும் பெயர் எச்சாரியை பெறும்?

விண்

விண் என்ற பெயர் ஆகாயத்தை உணர்த்தும். அது செய்யுளிடத்தில் வினை வரும் காலத்து அத்துச் சாரியை பெறுதலும் உண்டு.

(எ-டு) விண்ணத்து நீள்வரை

விண்ணத்துக் கொட்டும்

பெறுதலும் உண்டு என்றமையால் சாரியை பெறாமல் வருதலே பெரும்பான்மை என்று அறியலாம்.

(எ-டு) விண் பொரு புகழ்

"விண்ணென வரூஉம் காயப்பெயர் வயின்
உண்மையும் உரித்தே அத்தென் சாரியை
செய்யுள் மருங்கின் தொழில் வரு காலை" (தொல் - எழுத்து - 306)

'ண' கரஈற்றுத் தொழிற்பெயர் (மண்)

ணகர வீற்றுத் தொழிற்பெயர் எல்லாமே அல்வழியிலும் வேற்றுமையிலும் ஞகர வீற்றுத் தொழிற் பெயரைப்போன்றே வல்லினம் வந்தால் வந்த வல்லெழுத்தும் உகரமும் பெறும். மெல்லினமும் வகரமும் வந்தால் உகரம் மட்டும் பெறும்.

(எ-டு) அல்வழி

மண்ணுக்கடிது

மண்ணுப்பெரிது

மண்ணு ஞான்றது

மண்ணு வலிது

வேற்றுமை

மண்ணுக்கடுமை

மண்ணுப்பெருமை

மண்ணுஞாற்சி

மண்ணு வலிமை

"தொழிற்பெயரெல்லாம் தொழிற்பெயர் இயல" (தொல் - எழுத்து - 307)

ணகர வீற்றுக் கிளைப்பெயர் (உமண்)

ணகர வீற்றுக் கிளைப்பெயராகிய உமண் என்பது இயல்பாகவே முடியும்.

(எ-டு) உமண் + குடி - உமண்குடி

உமண் + சேரி - உமண்சேரி

உமண் + தோட்டம் - உமண்தோட்டம்

உமண் + பாடி - உமண்பாடி

"கிளைப்பெயரெல்லாம் கொளத்திரிபு இலவே" (தொல் - எழுத்து - 308)

எண் உணவுப்பொருள்)

அல்வழியிலும் வேற்றுமையைப் போலத்திரிந்து முடிதலும் பெறும்.

(எ-டு) எண் + கடிது - எட்கடிது

எண் + சிறிது - எட்சிறிது

எண் + பெரிது - எட்பெரிது

உம்மையால் 'எண் கடிது' என்ற இயல்பே பெரும்பான்மை என அறியலாம்.

"வேற்றுமை அல்வழி எண் என் உணவுப்பொருள்
வேற்றுமை இயற்கை நிலையலும் உரித்தே" (தொல் - எழுத்து - 309)

3. முரண் என்னும் தொழிற்பெயர் எவ்வாறு வரும்?

முரண் (தொழிற்பெயர்)

முரண் என்று சொல்லப்படும் தொழிற்பெயர் அவ்வழியில் இயல்பாகவும் வேற்றுமையில் திரிபாகவும் முடிவு பெறும்.

(எ-டு) முரண் கடிது
முரண் சிறிது
முரண் தீது
முரண் பெரிது
} அல்வழி (இயல்பாதல்)

முரண் + கடுமை - முரட்கடுமை
முரண் + சேனை - முரட்சேனை
முரண் + பாறை - முரட்பாறை
} வேற்றுமை (திரிதல்)

"முரண் என் தொழிற்பெயர் முதலில் நிலைபெறும்"

(தொல் - எழுத்து - 310)

4 ம்

வேற்றுமைப் புணர்ச்சியின் மகர ஈற்றுப் பெயர்ச்சொல் புணரும்போது இறுதி மகரம் கெட்டு வருமொழிக்கு ஏற்ப வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) மரம் + கோடு - மரக்கோடு

மரம் + செதில் - மரச்செதில்

மரம் + பூ - மரப்பூ

வல்லினமல்லாமல் பிற இன எழுத்து வரின் மகரம் கெட்டு இயல்பாய் முடியும்.

(எ-டு) மரம் + ஞாண் - மரஞாண்

மரம் + வட்டு - மரவட்டு

மரம + உரி - மரஉரி

நீலம் + நீர் - நீலநீர்

பவளம் + வாய் - பவளவாய்

மகரவீற்றுச்சொற்களில் மெல்ழெுத்தோடு உறழ்ந்து முடியும். சொற்களும் உள்ளன. வழக்கின்கண் வழங்கும் இடத்தால் அறியப்படும்.

(எ-டு) குளம் + கரை } குளக்கரை / குளங்கரை

குளம் + சேறு } குளச்சேறு / குளஞ்சேறு

அல்வழிப்புணர்ச்சியாயின் மகர ஈறு மெல்லெழுத்தாககத் திரியும்

(எ-டு) மரம் + குறிது - மரங்குறிது
மரம் + சிறிது - மரஞ்சிறிது
மரம் + தீது - மரந்தீது

"மகர இறுதி வேற்றுமையாயின்
துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே"

"மெல்லெழுத்து உறழும் மொழிமார் உளவே
செல்வழி அறிதல் வழக்கத்தான"

"அல்வழி எல்லாம் மெல்லெழுத்து ஆகும்"

(தொல் - எ்ழுத்து - 311, 313, 315)

இங்குத் தொல்காப்பியர் மரம் + அடி-மரவடி என்று அமைவதுடன் மராஅடி என்று ஈற்றின் கண் அகரம் நீடலும் உரித்து என்கிறார்.

குளம் + ஆம்பல் - குள ஆம்பல் எனவரும் வருமொழி முதலில் நின்ற அகர ஆகாரங்கள் இத்தகைய மாற்றத்தை உருவாக்குவது இக்காலத்தில் இல்லை. மரவடி, குளவாம்பல் என் நீடாமலும் வருதல் உண்டு.

"அகர ஆகாரம் வரூஉம் காலை
ஈற்று மிசை அகரம் நீடலும் உரித்தே" (தொல் - எழுத்து - 312)

இல்லம் (மரப்பெயர்)

இல்லம் என்னும் மரத்தினை உணர்த்த நின்ற பெயர். விசை என்ற மரத்தின் இயல்பாக முடியும். ஈற்று மகரம் கெட்டு நின்று, வந்த வல்லினத்திற்கு இனமாகிய மெல்லின எழுத்து வரும்.

(எ-டு) இல்லங்கோடு, இல்லந்தோல்
இல்லஞ்செதிள் இல்லம்பூ

"இல்ல மரப்பெயர் விசைமர, இயற்றே
அல்வழி எல்லாம் மெல்லெழுத்தாகும்" (தொல் - எழுத்து - 312, 315)

அகம்

அகம் என்ற சொல்லுக்கு முன் கை எனும் சொல்வரின் அகரம் நீங்கலாக அனைத்தும் கெட்டு முடிதலும் உண்டு. அவை கெடாது நிற்றலும் உண்டு. இருநிலையிலும் மெல்லெழுத்து மிக்கு முடியப்பெறும்.

(எ-டு) அகம் + கை - அங்கை
அகம் + கை - அகங்கை

"அகம் என் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை ஒழிய முன்னவை கெடுதலும்
வரை நிலை இன்றே ஆசிரியர்க்க
மெல்லெழுத்து மிகுதல் ஆவயினான" (தொல் - எழுத்து - 316)

இங்கு உண்மையில் "அகம்" என்பதில் ககரம் மட்டுமே கெடுகின்றது.

இலம்

இலம் என்ற சொல்லின் முன் படு என்ற சொல் வரின் நிலை மொழியின் ஈற்று மகரம் கெடாது நிலைபெறும்.

(எ-டு) இலம்படு புலவர்

"இலமென் கிளவிக்குப் படுவரு காலை
நிலையலும் உரித்தே செய்யுளான" (தொல் - எழுத்து - 317)

ஆயிரம்

ஆயிரம் என்ற எண்ணுப்பெயரின் மகரமெய் தனக்கு அகப்பட்ட தன்னிலும் சிறிய எண்ணுப்பெயர் வருங்கால் அத்துச்சாரியைபெறும்.

(எ-டு) ஆயிரம் + ஒன்று
ஆயிரம் + அத்து + ஒன்று > ஆயிரத்தொன்று

ஆயிரத்து முந்நூறு

ஆயிரம் என்ற அப்பெயர் அடையொடு நின்றாலும் அவ்வாறே வரும்.

(எ-டு) பதினாயிரம் + ஒன்று -
பதினாயிரத்து + அத்து + ஒன்று } பதினாயிரத்தொன்று

ஆயிரம் என்ற அப்பெயரின் முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்தால் அது வேற்றமைப்புணர்ச்சியைப்போல் மகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) ஆயிரம் + கலம் - ஆயிரக்கலம்

ஆயிரம் + பானை - ஆயிரப்பானை

ஆயிரம் + கழஞ்சு - ஆயிரக்கழஞ்சு

ஆயிரம் + தொடி - ஆயிரத்தொடி

"அத்தோடு சிவனும் ஆயிரத்து இறுதி

ஒத்த எண்ணு முன்வரு காலை"

"அடையொடு தோன்றினும் அதனோ ரற்றே"

"அளவும் நிறையும் வேற்றுமை இயல"

(தொல் - எழுத்து - 318, 319, 320)

எல்லாரும், எல்லீரும், தாம், யாம், நாம்

மகர வீற்று மூவிடப்பெயர்களை உருபியலில் விளக்கினார். இங்கும் நினைவு படுத்துகிறார் தொல்காப்பியர்.

எல்லாரும் தாம் என்னும் படர்க்கைப் பெயர்களும், எல்லீரும் என்னும் முன்னிலைப் பெயரும், நாம், யாம் என்னும் தன்மைப் பெயர்களும், வேற்றுமைப்புணர்ச்சியாயின் உருபு புணரியலில் சொல்லியவாறு இயல்பாய் நிற்கும். ஈறு கெட்டு இடையிலும் ஈற்றிலும் சாரியை பெறுவன பெறும். நெடு முதல் குறுகுவன நெடுமுதல் குறுகும், நெடுமுதல் குறுகும் மொழிக்கண் மெல்லெழுத்து மிகும்.

(எ-டு) எல்லாரும் + கை - எல்லார் + தம் + கை +

உம் - எல்லார் தங்கையும்

எல்லீரும் + கை - எல்லீர் + நும் + கை + உம் - எல்லீர் நுங்கையும்

எல்லாரும் + செவி - எல்லார்தஞ்செவியும்

எல்லீரும் + தலை - எல்லீர் நுந்தலையும்

எல்லாரும் எல்லீரும் என்பவற்றில்

ஈற்று உறுப்பாகிய உம் என்பது முறையே தம், நம், என்பவற்றை அடுத்து இடப்பெயர்ச்சி அடைகின்றன. எனவே உம் என்பதனைச் சாரியை எனல் இயலாது.

தாம் + கை, தம் + கை - தங்கை

நாம் + செவி, நம் + செவி - நஞ்செவி

யாம் + தலை, எம் + தலை - எம்தலை

எல்லாரும், எல்லீரும் என்ற இப்பெயர்களும் தாம், நாம், யாம் என்ற பெயர்களும் அல்வழிப்புணர்ச்சியில் இயல்பாய் முடியும்.

(எ-டு) எல்லாரும் + சிறியர் - எல்லாருஞ்சிறியர்

எல்லீரும் + பெரியீர் - எல்லீரும்பெரியர்

“படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் தொடக்கம்
குறுகும் பெயர் நிலைக்கிளவியும்
வேற்றுமை யாயின் உருபியல் நிலையும்
மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான ”.

“அல்லது கிளப்பின் இயற்கை ஆகும்” (தொல் - எழுத்து - 321, 322)

எல்லாம்

எல்லாம் என்னும் பெயர் அல்வழியிடத்தும் வேற்றுமைப்புணர்ச்சி யிடத்தும் உருபியலில் கூறப்பட்டதைப்போல முடியும். வேற்றுமையில் வற்றுச் சாரியையும், இறுதியில் உம்முச் சாரியையும் பெற்று முடியும். அல்வழியில் இப்பெயர் சாரியை பெறாது முடியும் எல்லாம் என்பது வுரவுத்திணைப்பெயர் அல்வழியில் மெல்லெழுத்து மிகுதலும் உண்டு.

(எ-டு) வேற்றுமை

எல்லாவற்றுக்கோடும் - அஃறிணை

எல்லாநங்கையும் - உயர்திணை

அல்வழி

எல்லா குறியவும் - அஃறிணை

எல்லாங்குறியவும் - அஃறிணை

எல்லாக் குறியரும் - உயர்திணை

எல்லாங்குறியரும் - உயர்திணை

“அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லாம் எனும் பெயர் உருபியல் நிலையும்
வேற்றுமை அல்வழிச் சாரியை நிலையாது”

"மெல்லெழுத்து மிகினும் மானம் இல்லை"

(தொல் - எழுத்து - 323 & 324)

எல்லாம் என்பது உயர்திணைப் பெயராயின் அது உருபுப் புணர்ச்சியின் இயல்பிலேயே நின்று ஆண்டுக்கூறிய நம்முச் சாரியை பெற்று முடியும்.

(எ-டு) எல்லா நங்கையும்

எல்லா நஞ்செவியும்

எல்லா நந்தலையும்

"உயர்திணையாயின் உருபியல் நிலையும்" (தொல் - எழுத்து - 325)

<u>நும்</u>

நும் எனப்படும் விரவுப்பெயர் வேற்றுமைக்கண் மெல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) நுங்கை, நுஞ்செவி, நும்புறம்

"நும்மென் ஒருபெயர் மெல்லெழுத்து மிகுமே" (தொல் - எழுத்து - 326)

வேற்றுமைப் புணர்ச்சியிலேயே நும் என்ற பெயர் பயன்படும். அல்வழிப்புணர்ச்சியில் நீயிர் என்ற பெயரே நிலைபெறும்.

(எ-டு) அல்வழி - நீயீர், குறியீர், நீயிர் சிறியீர் நீயிர் தீயிர்

"அல்லதன் மருங்கின் சொல்லும் காலை

உக்கெட நின்ற மெய்வயின் ஈவர

இஇடை நிலை இ ஈறுகெடரகரம்

நிற்றல் வேண்டும் புள்ளியோடு புணர்ந்தே

அப்பான் மொழிவயின் இயற்கை ஆகும்" (தொல் - எழுத்து - 327)

<u>மகரவீற்றுத் தொழிற்பெயர்</u>

இவை அல்வழியிலும் வேற்றுமையிலும் ஞ க ர வீற்றுத் தொழிற்பெயர் போல வல்லினம் வரின் உகரமும் வல்லெழுத்துப் பெறும், இடையினமும் மெல்லினமும் வரின் உகரம் பெற்று முடியும்.

<u>அல்வழி</u> செம் + கடிது - செம்முக்கடிது

செம் + சிறிது - செம்முச்சிறிது

செம் + நீண்டது - செம்மு நீண்டது

வேற்றுமை      செம் + கடுமை - செம்முக்கடுமை

செம் + சிறுமை - செம்முச்சிறுமை

"தொழிற் பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல"

(தொல் - எழுத்து 328)

ஈம், கம், உரும்

இம்மூன்று பெயரும் இருவழிகளிலும் மேற்சொன்ன தொழிற்பெயரைப் போலவே வல்லெழுத்து வரின் உகரமும், வல்லெழுத்தும் பெற்று முடியும். இடையினமும் மெல்லினமும் வரின் உகரம் பெற்று முடியும்.

| அல்வழி | வேற்றுமை |
|---|---|
| ஈமுக்கடிது | ஈமுக்கடுமை |
| கம்முச்சிறிது | கம்முச்சிறுமை |
| உருமுப்பெரிது | உருமுப்பெருமை |
| ஈமு வலிது | ஈமுவலிமை |
| கம்மு நீண்டது | கம்மு நீட்சி |

அவற்றுள் வேற்றுமைப்புணர்ச்சியின்பொழுது ஈம், கம் என்ற இரண்டு பெயரும் அக்குச் சாரியை பெற்றுமுடியும்.

(எ-டு) ஈம் + குடம் - ஈமக்குடம்

கம் + பானை - கம்மப்பானை

"ஈமும் கம்மும் உருமென் கிளவியும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன"
"வேற்றுமை யாயின் ஏனை இரண்டும்
தோற்றம் வேண்டும் அக்கு என் சாரியை" (தொல் - எழுத்து - 329, 330)

மகரக்குறுக்கம்

போன்ம் - என்ற சொல்லில் மகரம் குறுகுவதை மொழி மரபில் கற்றோம். இங்கு புணர்மொழிக் கண் மகரம் குறுகுவதைக் காண்போம்.

(எ-டு) நிலம் + வலிது, வரும், வளவன்

"வகார மிசையும் மகாரம் குறுகும்" தொல் - எழுத்து - 331)

நாட்பெயர் (மகம்)

மகம் என்பது மகரவீற்று நாட்பெயர்ச் சொல், அச்சொல் புணர்ச்சியின் போது அத்துச் சாரியையும் ஆன் சாரியையும் பெறும். மகம் என்பதன் ஈற்று மகரம் கெடும்.

(எ-டு) மகம் + கொண்டான்

மகம் + அத்து + ஆன் + கொண்டான் } மகத்தாற்கொாண்டான்

"நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன

அத்தும் ஆன் மிசை வரைநிலை இன்றே

ஒற்று மெய் கெடுதல் என்மனார் புலவர்" (தொல் - எழுத்து - 332)

5. ன்

னகரம் றகரம் ஆதல்

னகர வீற்றுப் பெயரை அடுத்து வேற்றுமைப்புணர்ச்சியின்போது வல்லெழுத்து வருமொழியாக வரின் ஈற்று னகரம் றகரம் ஆகும்.

(எ-டு) பொன் + குடம் - பொற்குடம்

பொன் + பானை - பொற்பானை

பொன் + சிலை - பொற்சிலை

இதே போன்ற மன், சின், ஆன், ஈன், முன், பின், செயின் ஆகிய சொற்களும் மேற்கூறிய இயல்பில் னகரம் றகரமாய் முடியும்.

(எ-டு) அரு மற்கொண் கண் தேரே

காப்பும் பூண்டிசிற் கடையும் போகல்

ஆற்கொண்டான், ஈற்கொண்டான்

பிற்கொண்டான், முற்கொண்டான் வரிற் கொள்ளும்

இவ்வாறின்றி ஆன்கொண்டபின், ஈன்கொண்டான், முன் கொண்டான், பின்கொண்டான் எனத் திரியாமல் முடிபவற்றையும் குறிப்பிடலாம்.

வயின்

இனி வயின் என்ற சொல்லும் சுட்டையும் வினாவையும் ஒட்டி அவ்வயின் இவ்வயின் உவ்வயின் எவ்வயின் என வரும்போது வல்லின எழுத்து வருமொழி வந்தால் ஈற்று னகரம் றகரமாகும். தன்மையுடையது.

(எ-டு) அவ்வயிற் கொண்டான்

இவ்வயிற் கொண்டான்

எவ்வயிற் போயினான்

"னகர இறுதி வல்லெழுத்து இயையின்

றகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே" (தொல் - எழுத்து - 333)

"மன்னும் சின்னும் ஆனும் ஈனும்
பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும்
அன்ன இயல என் மனார் புலவர்"

"சுட்டு முதல் வயினும் எகர முதல் வயினும்
அப்பண்பு நிலையும் இயற்கைய என்ப" (தொல் - எழுத்து - 334 & 335)

4. குயின் என்ற சொல் எவ்வாறு முடியும்?

குயின்

குயின் என்ற சொல்லானது புணர்ச்சியல் திரியாது இயல்பாய் முடியும்.

(எ-டு) குயின் குழாம், குயின் செலவு
குயின் தோற்றம், குயின் மறைவு

"குயின் என் கிளவி இயற்கை ஆகும்" (தொல் - எழுத்து - 336)

எகின்

எகின் என்ற சொல்லானது மரத்தையும் குறிக்கும். பறவையையும் குறிக்கும். எகின் என்பது மரப்பெயராயின் அம் சாரியை பெறும். பறவையின் பெயராயின் அகரச் சாரியை பெற்று வந்து வல்லெழுத்து மிகப்பெறும்.

மரம் : எகினங்கோடு எகினஞ்செதிள்
எகினம்பூ, எகினந் தோல்

பறவை: எகினக்கால், எகினச்செவி
எகினத்லை, எகினப் புறம்

"எகின்மரம் ஆயின் ஆண் மர இயற்றே" (தொல் - எழுத்து - 337)

"ஏனை எகினே அகரம் வருமே
வல்லெழுத்து இயற்கை மிகுதல் வேண்டும்" (தொல் - எழுத்து - 338)

கிளைப்பெயர்

னகர ஈற்றுக் கிளைப்பெயர் எல்லாம் ணகர ஈற்றுக் கிளைப்பெயர் போலவே முடியும்.

(எ-டு) எயின்குடி, எயின்சேரி
எயின்பாடி, எயின்தோட்டம்

"கிளைப்பெயர் எல்லாம் கிளைப்பெயர் இயல"

(தொல் - எழுத்து - 339)

5. மீன் என்ற சொல் எவ்வாறு வரும்?

மீன்

மீன் என்ற சொல்லானது உறழ்ச்சியாய் பெற்றுவரும்.

(எ-டு) மீன்கண், மீற்கண்

மீன் சினை, மீற்சினை

மீன் தலை, மீற்றலை,

மீன்புறம், மீற்புறம்

"மீன் என் கிளவி வல்லெழுத்து உறழ்வே" (தொல் - எழுத்து - 340)

தேன்

தேன் என்ற சொல்லானது புணர்ச்சியின் போது

1. மீன் என்ற சொல்லைப்போல உறழ்ந்து வரும்.
2. ஈற்று னகரம் கெட்டு வருமொழி வல்லெழுத்து மிகப்பெற்று வரும்.

(எ-டு) தேன்குடம், தேற்குடம்,

தேன்சாடி தேற்சாடி

தேன் பானை, தேற்பானை என உறழ்ந்து வரும்.

தேக்குடம், தேப்பானை, என ஈற்று னகரம் கெட்டு வந்த வல்லெழுத்து மிக்கு முடியினும் குற்றம் இல்லை.

தேன் என்ற சொல்லானது வல்லெழுத்து மிகுதலே அன்றி மெல்லெழுத்து மிகப்பெற்று வரும்.

(எ-டு) தேன் + குடம் - தேங்குடம்

தேன் + சாடி - தேஞ்சாடி

தேன் + பானை - தேம்பானை

தேன் என்ற சொல்லினை அடுத்து மெல்லெழுத்து வருமொழி வந்தால் னகர ஒற்றுக்கெடுதலும் கெடாமையும் ஆகிய உறழ்ச்சி நிலையை அடையும்.

(எ-டு)

தேன் + ஞெரி } தேன்ஞெரி / தேஞெரி

தேன் + நுனி } தேன் நுனி / தேநுனி

தேன் + முரி } தேன்முரி / தேமுரி

தேன் என்ற சொல்லின் முன் இறால் என்ற சொல்வரின் ஈற்று னகரம் கெடுவதில்லை. இயற்கையாகவே புணரும்.

(எ-டு) தேன் + இறால் - தேனிறால்

தேன் இறால் என்ற இப்புணர்ச்சி வேறுபடுவதுண்டு. தேன் என்பதன் ஈற்று னகரம் கெட்டுத்தகர ஒற்றுத் தோன்றி இரட்டிக்கும்.

தேன் + இறால் - தேத்திறால்

தேன் + அடை - தேத்தடை

தேன் + ஈ - தேத்தீ

என்று வருவனவும் உண்டு.

"தேன் என் கிளவி வல்லெழுத்து இயையின்
மேல்நிலை ஒத்தலும் வல்லெழுத்து மிகுதலும்
ஆமுறை இரண்டும் உரிமையும் உடைத்தே
வல்லெழுத்துமிகுவழி இறுதியும் இல்லை" (தொல் - எழுத்து - 341)

"மெல்லெழுத்துமிகினும் மானம் இல்லை
மெல்லெழுத்து இயையின் இறுதியோடு உறழும்
இறாஅல் தோற்றம் இயற்கை ஆகும்
ஒற்றுமிகு தகரமோடு நிற்றலும் உரித்தே"

(தொல் - எழுத்து - 342, 43, 44, 45)

தேன் என்பது தே என உறழ்ந்து வரும் நிலையில் அத்துச் சாரியை ஏற்றுத் தேத்திறால் ஆயிற்று என்பாரும் உண்டு. வட்டார வழக்கின் வேறுபாட்டு நிலையே இத்தகு மாற்றங்களுக்கு ஏதுவாக இருக்கலாம் என்பாரும் உண்டு.

மின், பின், பன், கன்

இந்நான்கு சொல்லும் வேற்றுமையிலும் அல்வழியிலும் முன்னே சொன்ன ஞகர ஈற்றுத் தொழிற்பெயர்போல வல்லெழுத்து வந்தால் உகரமும் வந்த வல்லெழுத்தும் மிகப் பெறும். இடையினமோ, மெல்லினமோ வந்தால் உகரம் மட்டும் பெற்று முடியும்.

(எ-டு) அல்வழி

மின் + கடிது - மின்னுக்கடிது

பின் + சிறிது - பின்னுச்சிறிது

பன் + நீண்டது - பன்னு நீண்டது

கன் + வலிது - கன்னுவலிது

வேற்றுமை

மின் + கடுமை - மின்னுக்கடுமை

பின் + சிறுமை - பின்னுச்சிறுமை

பன் + நீட்சி - பன்னுநீட்சி

கன் + வலிமை - கன்னுவலிமை

மின்னுச்செய்விளக்கம், பின்னுப் பிணி அவிழ்ந்த என இலக்கிய வழக்கில் காணலாம். இவற்றுள் கன் என்ற சொல் வேற்றுமைப் புணர்ச்சியுள் எகின் (அன்னம்) எனும் பறவைப்பெயர் போல அகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும்.

(எ-டு) கன் + குடம் - கன்னக்குடம்

கன் + பானை - கன்னப்பானை

கன் + மாட்சி - கன்னமாட்சி

கன் + வலிமை - கன்னவலிமை

"மினினும் பின்னும் பன்னும் கன்னும்
அந்நாற் சொல்லும் தொழிற்பெயர் இயல
வேற்றுமையாயின் ஏனை எகினோடு
தோற்றம் ஒக்கும் கன் என் கிளவி" (தொல் - எழுத்து - 347

னகர ஈற்று இயற்பெயர்கள்

சாத்தான், ஆதன், பூதன், கொற்றன், தான், பேன், கோன் போன்ற இயற்பெயர்களின் முன் தந்தை மகன் போன்ற முறைப்பெயர் வரும்போது ஏற்படும் திரிபுகளை உணர்த்துகிறார். சாத்தன் தந்தை, னகரவீற்று இயற்பெயர் முன்னர்த் தந்தை என்னும் முறைப்பெயர் வந்தால் நிலைமொழியாகிய இயற்பெயரின் ஈற்றில் உள்ள அன்கெடும் வருமொழியாகிய 'தந்தை' என்பதன் தகர மெய் மட்டும் கெடும்.

சாத்தான் + தந்தை - சாத்த் + அந்தை - சாத்தந்தை

கொற்றன் + தந்தை - கொற்ற் + அந்தை - கொற்றந்தை

ஆதன் தந்தை

மேற்கூறிய இயற்பெயர்களுள் ஆதன், பூதன் என்ற பெயர்கள் புணர்ச்சியில் சற்று வேறுபடுவன.

ஆதன் + தந்தை என்று புணரும்போது, ஆதன் என்றாலும் நிலை மொழிப்பெயரின் ஈற்று அன்னும், அது ஏறி நின்ற ஒற்றும் கெடும், தந்தை என்னும் வருமொழி பெயரின் தகர வொற்றும் அதன் மீதேறிய அகர உயிரும் கெடும். ஆதன் தந்தை என்பதும் இவ்வாறே திரியும்.

ஆதன் + தந்தை - ஆ + ந்தை - ஆந்தை

பூதன் + தந்தை - பூ + ந்தை - பூந்தை

பெயரொற்றும் அகரமும் கெடாமலே ஆதந்தை பூதந்தை என முடிவனவற்றையும் ஏற்க.

இயற்பெயருக்கு ஒரு சிறப்பு அடைமொழி சேர்ந்து நின்றால் அப்போது புணர்ச்சி இயல்பாகவே முடியும்.

இயற்பெயர்கள் இன்னார்க்கு முன் எனும் பொருளில் இணையும்போது நிலைமொழியின் ஈற்று ஆன் கெடும். அங்கு அம் முச்சாரியைத் தோன்றும்.

(எ-டு) தான் + தந்தை - தான்தந்தை

பேன் + தந்தை - பேன் தந்தை

தான் + கொற்றன் - தாகொற்றன்

கோன் + கொற்றன் - கோன் கொற்றன்

"இயற்பெயர் முன்னர்த்தந்தை முறைவரின்

முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்

மெய்யொழித்து அன்கெடும் அவ்வியற்பெயரே"

ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு

பெயரொற்று அகரம் துவரக்கெடுமே

சிறப்பொடு வருவழிய இயற்கை ஆகும்

அப்பெயர் மெய்யொழித்து அன்கெடு வழியும்

நிற்றலும் உரித்தே அம்மென் சாரியை

மக்கள் முறைதொகூஉம் மருங்கினான

தானும் பேனும் கோனும் என்னும்

ஆமுறை இயற்பெயர் திரிபு இடன் இலவே

(தொல் - எழுத்து - 348, 49, 50, 51, 52)

தான், யான்

தான், யான் என்னும் பெயர்கள் முன்னே உருபுப் புணர்ச்சியில் கூறிய இயல்பின் கண்ணே, நிலைபெற்றுத்தான் என்பது நெடுமுதல் குறுகித் தன் எனவும், யான் என்பது யகரம் கெட்டு ஆகாரம் எகரமாய் என் எனவும் முடியும்.

தான் + கை - தன்கை

தான் + மணி - தன்மணி

யான் + செவி - என்செவி

யான் + வட்டு - என்வெட்டு

தான் + செவி - தன்செவி

யான் + புறம் - என்புறம்

வேற்றுமைப்புணர்ச்சியில் இவ்வாறு நெடுமுதல் குறுகல் நிகழும், ஈற்று னகரம் திரிதலும் நிகழும். அல்வழிப் புணர்ச்சியில் நெடுமுதல் குறுகவில்லை. நகரம் திரிதலும் இல்லை.

வேற்றமை

தன் + பகை - தன்பகை
தற்பகை

யான் + கை என்பகை
எற்பகை

அல்வழி

தானகுறியன், தான்பெயரின், தான்மான்டன் யான் குறியன், யான் பெரியன், யான் மாண்டேன்.

தான்யான்எனும் பெயர் உருபியல் நிலையும் (தொல் - எழுத்து - 353)
வேற்றுமை அல்வழிக் குறுகலும் திரிதலும்
வேற்றுமை இல்லை என்மனார் புலவர் (தொல் - எழுத்து - 354)

அழன்

அழன் என்னும் சொல் னகரம் கெடவருமொழி வல்லெழுத்து முடியும்.
(எ-டு)

அழன் + குடம் - அழக்குடம்

அழன் + பானை - அழப்பானை

"அழன் என் இறுதி கெட வல்லெழுத்து மிகுமே""
(தொல் - எழுத்து - 355)

முன்

இச்சொல்லுக்கு முன்னே இல் என்ற சொல் வந்து புணரும்போது இல் என்ற சொல்லின் மேல் றகரவொற்று வந்து முடிதல் தொன்மையாக மருவி வந்த இலக்கணம் ஆகும்.

முன் + இல் - முன் + ற் + இல் முற்றில்

"முன்னென் கிளவி முன்னர்த் தோன்றும்
இல்லென் கிளவிமிசை றகரம் ஒற்றும்
தொல்லியன் மருங்கில் மரீஇய மரபே"

(தொல் - எழுத்து - 356)

பொன்

பொன் என்னும் சொல்லானது பகர வருமொழி வரும்போது ஈற்று னகரம் கெட அதன் முன்னே லகரமும் மகரமும் தோன்றி முடியும். இது செய்யுளில் நிகழ்வது.

"பொலம்படை பொலிந்த கொய் சுவற்புரவி"

"பொன் என் கிளவி ஈறு கெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகரம் மகாரம்
செய்யுள் மருங்கின் தொடரியலான" (தொல் - எழுத்து - 357)

## 9.3 இடையொற்று ஈறுகள்

யகர வீறு வல்லெழுத்து மிகுதல்

யகர வீற்றுப்பெயர் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிகண் வருமொழி வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) நாய் + கால் - நாய்க்கால்
நாய் + செவி - நாய்ச்செவி

"யகர இறுதி வேற்றுமைப் பொருள்வரின்
வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே" (தொல் - எழுத்து - 358)

தாய்

யகர வீற்றுப்பெயர்களிலே தாய் என்ற பெயர் மட்டும் வல்லெழுத்து மிகாமல் இயல்பாய் முடியும்.

)எ-டு) தாய் + கை - தாய்கை
தாய் + செவி - தாய்செவி

ஆனால் அத்தாய் எனும் சொல் மகனது வினையைக் கிளந்து சொல்லுமிடத்து வல்லெழுத்து மிக்கு முடியும்.

6. தாய் என்ற பெயர் எவ்வாறு முடியும்?

(எ-டு) மகன்றாய் + கலாம் - மகன்றாய்க்கலாம்

மகன்றாய் + செரு - மகன்றாய்ச் செரு

மகன்றாய் + படை - மகன்றாய்ப்படை

"தாய்தன்கிளவி இயற்கை ஆகும்

மகன்வினை கிளப்பின் முதனிலை இயற்றே"

(தொல் - எழுத்து - 359, 360)

யகர ஈறுமெல்லெழுத்து உறழ்தல்

யகர ஈற்றுச் சொற்களில் சில மேற்சொன்னபடி வல்லெழுத்து மிக்கு முடிதலேயன்றி மெல்லெழுத்து உறழ்ச்சியும் பெறும்.

(எ-டு)

வேய்+குறை — வேய்க்குறை / வேய்ங்குறை

வேய்+தலை — வேய்த்தலை / வேய்ந்தலை

வேய்+சிறை — வேய்ச்சிறை / வேய்ஞ்சிறை

"மெல்லெழுத்து உறழும் மொழியுமாருளவே" (தொல் - எழுத்து - 361)

7. யகர, ஈறு எப்போது இயல்பாக முடியும்?

யகர ஈறு இயல்பாதல்

அல்வழிப்புணர்ச்சியில் யகர வீற்றுச்சொற்கள் எல்லாம் இயல்பாய் முடியும்.

(எ-டு) நாய் கடிது, வேய் சிறிது

பொய் பெரிது, பொய் தீது

"அல்வழி எல்லாம் இயல்பென மொழிப" (தொல் - எழுத்து - 362)

2. ர்

ரகர ஈறு - வல்லெழுத்து மிகுதல்

ரகர ஈற்றுப் பெயர்கள் யாவும் வேற்றுமைப்புணர்ச்சிக்கண் யகரவீற்றுச் சொல்லைப்போல் வந்த வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு) தேர் + கால் - தேர்க்கால்

தேர் + தட்டு - தேர்த்தட்டு

தேர் + சிற்பம் - தேர்ச்சிற்பம்

"ரகார இறுதி யகார இயற்றே" (தொல் - எழுத்து - 363)

ஆர், வெதிர், சார், பீர் மெல்லெழுத்து மிகுதல்

ரகர ஈற்றுச் சொற்களில் ஆர் வெதிர், சார், பீர் போன்ற சொற்கள் மெல்லெழுத்து மிக்கு முடியப் பெறும்.

ஆர் + கோடு - ஆர்ங்கோடு

சார் + செதிள் - சார்ஞ்செதிள்

வெதிர் + தோள் - வெதிர்ந்தோல்

பீர் + பூ - பீர்ம்பூ

அவற்றுள் சார் என்ற சொல்லானது காழ் என்ற சொல்லோடு புணரும்போது வல்லெழுத்து மிகும்.

சார் + காழ் - சார்க்காழ் (காழ் + வித்து)

அவற்றுள் பீர் என்ற சொல்லானது அம்முச்சாரியையும் எய்தப்பெறும்

பீர் + கோடு - பீரங்கோடு

பீர் + கோடு - பீரந்தோல்

பீர் + பூ - பீரம்பூ

"ஆரும் வெதிரும் சாரும் பீரும்

மெல்லெழுத்து மிகுதல்மெய் பெறத்தோன்றும்"

"சார்என் கிளவி காழ்வயின் வலிக்கும்"

"பீர் என்கிளவி அம்மொடு சிவணும்"

(தொல் - எழுத்து - 364, 365, 366)

3 ல்

லகர ஈறு வேற்றுமைப் புணர்ச்சியில் திரிதல்

னகர ஈற்றுப்பெயர் போல லகர ஈற்றுப் பெயர்களும் வேற்றுமைப் புணர்ச்சியில் வல்லெழுத்து வரும்போது லகரம் றகரமாகத்திரிந்து திரிந்து முடியும்.

(எ-டு) சொல் + செறிவு - சொற்செறிவு

வில் + போர் - விற்போர்

நெல் + குப்பை - நெற்குப்பை

கல் + சட்டை - கற்சட்டி

"லகார இறுதி னகார இயற்றே" (தொல் - எழுத்து - 367)

வருமொழி முதலில் மெல்லெழுத்து வரப்பெறின் லகர ஈறு னகரமாகத் திரிந்ததையும் இணைக்கலாம்.

(எ-டு) கல் + ஞெரி - கன்ஞெரி

கல் + முனை - கன்முனை

கல் + மாண்டது - கன்மாண்டது

கல் + ஞெரிந்தது - கன்ஞெரிந்தது

என அல்வழியிலும் லகரம் னகரமாகத் திரிந்ததையும் கொள்ள வேண்டும்

"மெல்லெழுத்து இயையின் னகாரம் ஆகும்"

(தொல் - எழுத்து - 368)

லகர ஈறு உறழ்தல்

அல்வழிப்புணர்ச்சியில் லகர ஈறு உறழ்ந்து முடியும்

(எ-டு)

கல் + குறிது — கல் குறிது / கற்குறிது

கல் + தீது — கல்தீது / கற்றீது

வில் + பெரிது — வில்பெரிது / விற்பெரிது

"அல்வழி எல்லாம் உறழ்வு எனமொழிப" (தொல் - எழுத்து - 369)

வருமொழி முதலில் தகரம் வரும்போது லகர ஈறானது றகரமாகத் திரிவதோடு ஆய்தமாகத்திரிந்து நிற்பதும் உண்டு

(எ-டு)

கல் + தீது — கற்றீது / கஃறீது

பல் + துளி - பஃறுளி

"தகரம் வரும் வழி ஆய்தம் நிலையலும்

புகரின்று என்மனார் புலமையோரே" (தொல் - எழுத்து - 370)

லகர ஈறு இயல்பாதல்

நெடடெழுத்தை அடுத்து நிற்கும் லகரமானது உறழ்ந்து வருதலோடு இயல்பாக நிற்பதும் உண்டு.

(எ-டு) பால் + கடிது (இயல்பு)

வேல்கடிது
(உறழ்ச்சி)
வேற்கடிது

"நெடியதன் இறுதி இயல்புமார் உளவே" (தொல் - எழுத்து - 371)

நெல், செல், கொல், சொல்

நெல், செல், கொல், சொல் என்ற நான்கு மொழிகளும் அல் வழிப் புணர்ச்சியிலும், வேற்றுமைப் புணர்ச்சியைப் போல லகரம் றகரமாகத் திரிந்து முடியும்.

(எ-டு) நெல் + கடிது - நெற்கடிது
செல் + பெரிது - செற் பெரிது
கொல் + தீது - கொற்றீது
சொல் + சிறிது - சொற்சிறிது

நெல்லும் செல்லும்கொல்லும் சொல்லும்
அல்லது கிளப்பினும் வேற்றுமைஇயல (தொல் - எழுத்து - 372)

அல்

இன்மையை உணர்த்துகின்ற அல் என்ற சொல்லானது புணர்ச்சியின் போது,

1. ஐகாரம் பெறுதல்
2. வல்லெழுத்து மிகப்பெறுதல்
3. இயல்பாதல்
4. ஆகாரம் பெறுதல் என்ற நான்கு நிலைகளையும் உறும்.

(எ-டு) இல் + கல் - இல்லை கல், இல்லைக்கல், இல்கல், இல்லாக்கல்
"இல்லென் கிளவி இன்மை செப்பின்
வல்லெழுத்துமிகுதலும் ஐஇடைவருதலும்
இயற்கை ஆதலும் ஆகாரம் வருதலும்
கொளத்தகு மரபின் ஆகிடன் உடைத்தே" (தொல் - எழுத்து - 373)

வல்

வல் என்ற சொல்லானது அல்வழியிலும் வேற்றமையிலும் தொழிற்பெயர் இயல்பினதாய் உகரம் பெற்று முடியும். நாய் பலகை என்ற வருமொழிகள் வந்தால் உகரம் கெட்டு அகரம் நிலைபெறும்.

(எ-டு) வல் + கடிது - வல்லுக்கடிது

வல் + நீண்டது - வல்லுநீண்டது

வல் + கடுமை - வல்லுக்கடுமை

வல் + நீட்சி - வல்லுநீட்சி

வல் + பலகை - வல்லப்பலகை

வல் + நாய் - வல்லநாய்

"வல்லென் கிளவி தொழிற்பெயர் இயற்றே" (தொல் - எழுத்து - 374)

"நாயும் பலகையும் வரூஉம் காலை
ஆவயின் உகரம் கெடுதலும் உரித்தே
உகரம் கெடுவழி அகரம் நிலையும்" (தொல் - எழுத்து - 375)

பூல், வேல், ஆல்

பூல், வேல், ஆல் என்ற பெயர்கள் வேற்றுமைக்கண் அம்முச் சாரியை இடைவந்து நிற்கப்பெறும். இவை மரப்பெயர்களாம்.

(எ-டு) பூல் + கொம்பு - பூலங்கொம்பு

வேல் + காடு - வேலங்காடு

ஆல் + பழம் - ஆலம்பழம்

"பூல் வேல் என்றா ஆல் என் கிளவியோடு
ஆமுப்பெயர்களும் அம்இடை வருமே" (தொல் - எழுத்து - 376)

லகர ஈற்றுத் தொழிற்பெயர்

லகர ஈற்றுத் தொழிற்பெயர் எல்லாம் ஞகரவீற்றுத் தொழிற்பெயர் போல அல்வழியிலும் வேற்றுமையிலும் வல்லினம் வந்தால் வல்லெழுத்தும் உகரமும் பெறும். மெல்லினமும் இடையினமும் வந்தால் உகரமும் பெற்று வரும்.

(எ-டு) கல் (தொழிற்பெயர்)

கல்லுக்கடிது, கல்லுச்சிறிது
கல்லுநீண்டது, கல்லுவலிது } அல்வழி

கல்லுப்பெருமை, கல்லுவலிமை
கல்லுநீட்சி, கல்லுவண்மை } வேற்றுமை

"தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல" (தொல்-எழுத்து - 377)

வெயில்

வெயில் என்னும் சொல்லானது மழை என்னும் சொல் போல் நின்று அத்து சாரியையும் இன் சாரியையும் பெற்று முடியும்.

8. வெய்யில் என்ன பெற்று முடியும்?

வெயில் + கொண்டான் — வெயிலத்துக்கொண்டான் / வெயிலிற்கொண்டான்

“வெயிலென் கிளவி மழை இயல் நிலையும்” (தொல் - எழுத்து - 378)

4 வ்

அவ், உவ், இவ்

1. சுட்டெழுத்தை முதலாக உடைய வகர ஈற்றுச் சொற்கள் முன்னே சொன்ன உருபியல் விதிப்படியே வற்றுச் சாரியை பெற்றுப்புணரும்.

(எ-டு) அவ் + கோடு - அவற்றுக்கோடு

இவ் + செவி - இவற்றுச்செவி

உவ் + தலை - உவற்றுத்தலை

“சுட்டுமுதலாகிய வகர இறுதி
முற்படக்கிடந்த உருபியல் நிலையும்” (தொல் - எழுத்து - 379)

2. சுட்டு முதலாகிய அவ்வகரஈறுகள் அல்வழிப்புணர்ச்சியில் ஆய்தம் ஆதலும் உண்டு.

அவ் + கடிய - அஃகடிய

“வேற்றுமை அல்வழி ஆய்தம் ஆகும்” (தொல் - எழுத்து - 380)

3. சுட்டு முதலாகிய அவ் வகர ஈறுகள் மெல்லெழுத்து வருமொழி வரும்போது தாமும் அம் மெல்லெழுத்தாய்த் திரிந்து முடியும்.

அவ் + ஞாண் - - அஞ்ஞாண்

இவ் + நூல் - இந்நூல்

உவ் + மணி - உம்மணி

4. சுட்டு முதலாகிய அவ்வகர ஈறுகள் இடையின எழுத்தும் உயிரெழுத்தும் வருமொழியாய் வரும்போது திரிபடையாமல் இயல்பாய் நிற்கும்.

(எ-டு) அவ் + யாழ் - அவ்யாழ்

இவ் + வட்டு - இவ்வட்டு

அவ் + ஆடை - அவ்வாடை

"மெல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து ஆகும்

ஏனைய புணரின் இயல்பென மொழிப" (தொல் - எழுத்து - 381, 82)

தெவ்

தெவ் என்ற வகர ஈற்றுச் சொல்லானது ஞகர வீற்றுத் தொழிற் பெயரைப் போல வல்லெழுத்து வரும்பொழுது வல்லெழுத்தும் உகரமும் பெறும். இடையின எழுத்தும் மெல்லின எழுத்தும் வரின் உகரம் பெற்றுப் புணரும்.

(எ-டு)

| | |
|---|---|
| தெவ் + பெரிது - தெவ்வுப்பெரிது<br>தெவ் + கடிது - தெவ்வுக்கடிது<br>தெவ் + நீண்டது - தெவ்வுநீண்டது<br>தெவ் + வலிது - தெவ்வுவலிது | அல்வழி |
| தெவ் + பெருமை - தெவ்வுப்பெருமை<br>தெவ் + கடுமை - தெவ்வுக் கடுமை<br>தெவ் + நீட்சி - தெவ்வுநீட்சி<br>தெவ் + வலிமை - தெவ்வுவலிமை | வேற்றுமை |

"ஏனைய வகரம் தொழிற்பெயர் இயற்றே" (தொல் - எழுத்து - 383)

5 ழ்

ழகர ஈறு - வல்லெழுத்து மிகுதல்

ழகர ஈற்றுப் பெயர்கள் வேற்றுமை புணர்ச்சியில் வல்லினம் வரும்போது னகர ஈற்றுப் புணர்ச்சியைப்போல் வல்லெழுத்து மிக்கு முடியும்.

(எ-டு)

பூழ் + கால் - பூழ்க்கால்

பூழ் + தலை - பூழ்த்தலை

பூழ் + சிறது - பூழ்ச்சிறது

"ழகார இறுதி னகார இயற்றே" (தொல் - எழுத்து - 384)

தாழ்

தாழ் என்ற சொல்லானது கோல் என்ற சொல்லோடும் புணரும் இடத்து அக்குச் சாரியை இடையே வருதலும் உண்டு.

1. தாழ் + கோல் - தாழ்க்கோல்

2. தாழ் + கோல் - தாழ் + அக்கு + கோல் - தாழக்கோல்

எனவும் புணரும்.

9. தாழ் எச்சாரியை பெறும்?

தமிழ்

தமிழ் என்ற சொல்லும் அதே போன்று வல்லெழுத்து மிகுதலேயன்றி அக்கும் பெற்று முடியும்.

(எ-டு) 1. தமிழ் + கூத்து - தமிழ்க்கூத்து

2. தமிழ் + கூத்து - தமிழக்கூத்து

தமிழ்ச் சேரி — தமிழ்ச்சேரி / தமிழச்சேரி

தமிழ் + பள்ளி — தமிழ்ப்பள்ளி / தமிழப்பள்ளி

"தாழ் என் கிளவி கோலோடு புணரின்

அக்கிடை வருதல் உரித்தும் ஆகும்" (தொல் - எழுத்து - 385)

"தமிழ் என்கிளவியும் அதனோரற்றே" (தொல் - எழுத்து - 386)

குமிழ்

குமிழ் என்ற சொல்லானது குமிழ் மரத்தைக் குறித்தது என்றால் அது 'பீர்' என்ற சொல்லைப்போல அம்முச்சாரியைப்பெற்றுப்புணரும். மெல்லெழுத்து மிக்கும் புணரும்.

குமிழ் + பூ — குமிழம்பூ / குமிழ்ம்பூ

குமிழ் + கோடு — குமிழங்கோடு / குமிழ்ங்கோடு

10. பாழ் எனுஞ் சொல் என்ன பெறும்?

"குமிழ் என் கிளவி மரப்பெயராயின்

பீர் என் கிளவியோடு ஓர் இயற்றாகும்" (தொல் - எழுத்து - 387)

பாழ்

பாழ் என்ற சொல்லோ வல்லெழுத்தோடு மெல்லெழுத்தும் உறழ்ச்சி பெறும்.

பாழ் + கிணறு } பாழ்க்கிணறு / பாழ்ங்கிணறு

பால் + சேரி } பாழ்ச்சேரி / பாழ்ஞ்சேரி

"பாழ் என் கிளவி மெல்லெழுத்து உறழவே" (தொல் - எழுத்து - 388)

ஏழ்

1. ஏழ் என்னும் எண்ணுப்பெயரானது முன்னே உருபுப்புணர்ச்சியுள் சொன்னது போல் அன் சாரியை பெற்று முடியும்.

ஏழ் + காயம் - ஏழன்காயம்

ஏழ் + சுக்கு - ஏழன்சுக்கு

ஏழ் + பயறு - ஏழன்பயறு

2. ஏழ் என்ற பெயரின் முன் அளவுப் பெயரும் நிறைப்பெயரும் எண்ணுப்பெயரும் வருமொழியாய் வருமிடத்து ஏழ் என்பதன் நெடுமுதல் குறுகும். ஈற்றில் உகரம் சேரும்.

ஏழ் + எழ் - எழு

ஏழ் + கலம் - எழுகலம்

ஏழ் + தொடி - எழுதொடி

ஏழ் + நான்கு - எழுநான்கு

எழுகழஞ்சு, எழுசாடி, எழுதூதை, எழு பானை, எழு மண்டை, எழுவட்டி எழுபலன் எனவரும்.

3. ஏழ் என்பதனோடு பத்து என்ற சொல் புணரும்போது பத்து என்பதன் இடைஒற்றுக்கெடும் ஆய்தம் நிலைபெறும்.

ஏழ் + பத்து - எழுபஃது

4. ஆயிரம் என்ற சொல் வருமொழியாக வந்தால் உகரம் பெறுவதில்லை.

ஏழ் + ஆயிரம் - ஏழாயிரம்

5. நூறாயிரம் என்ற சொல் வருமொழியாக வந்தால் ஏழ் என்பது நெடுமுதல் குறுகாது, உகரம் பெறாது.

ஏழ் + நூறாயிரம் - ஏழ்நூறாயிரம்

ஏழாயிரம் என வருதல் வழக்கு

6. ஐ (தாமரை), அம் (வெள்ளம்) பல் (ஆம்பல்) என்று முடிகிற எண்ணுப்பெயர்கள் வருமொழியாக வரினும் ஏழ் நெடுமுதல் குறுகாது உகரம் பெறாது.

ஏழ் + தாமரை - ஏழ்தாமரை

ஏழ் + வெள்ளம் - ஏழ்வெள்ளம்

ஏழ் + ஆம்பல் - ஏழாம்பல்

உயிர் முதலாகிய வருமொழியிலும் அவ்வாறே முடியும்.

ஏழ் + அகல் - ஏழகல்

ஏழ் + இரண்டு - ஏழிரண்டு

ஏழ் + ஒன்று - ஏழொன்று

"ஏழென் கிளவி உருபியல் இலையும்"

"அளவும் நிறையும் எண்ணும் உருவழி
நெடுமுதல் குறுகலு உகர வருதலும்
கடிநிலை இன்றே ஆசிரியர்க்க"

"பத்தென் கிளவி ஒற்றிடை கெடுவழி
நிற்றல் வேண்டும் ஆய்தப்புள்ளி
ஆயிரம் வருவழி உகரம் கெடுமே

"நூறுர்ந்து வருஉம் ஆயிரக்கிளவிக்கு
கூறிய நெடுமுதல் குறுக்கம் இன்றே"

"ஐ ஆம் பல்லென வரூஉம் இறுதி
அப்பெயர் எண்ணும் ஆயியல் நிலையும்"

"உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது"

(தொல் - எழுத்து - 389, 90, 91, 92, 93, 94, 95)

கீழ்

கீழ் என்ற சொல் உறழ்ச்சியாக முடியும்.

(எ-டு கீழ்க்குளம், கீழ்குளம்

"கீழ்என் கிளவி உறழத்தோன்றும்"

6. ள்

1. ளகர வீறு வேற்றுமைப்புணர்ச்சியில் திரிதல்.

முள் + கொடி - முட்கொடி

முள் + செடி - முட்செடி

முள் + தலை - முட்டலை

முள் + பூ - முட்பூ

2. மெல்லெழுத்து வருமொழியாய் வந்தால் ஈற்று ளகரம் ணகரமாகும்.

(எ-டு) முள் + மலர் - முண்மலர்

முள் + நுனி - முண்ணுனி

முள் + ஞெரி - முண்ஞெரி

மண்ணீண்டது, முண் மாண்டது என்று அவ்வழிக்கும் ளகரம் ணகரமாதல் உண்டு.

"ளகார இறுதி ணகார இயற்றே"

"மெல்லெழுத்து இயையின் ணகாரம் ஆகும்"

(தொல் - எழுத்து - 397 & 398)

ளகர ஈறு அல்வழி

1. அல் வழிப் புணர்ச்சியில் ளகர ஈறு திரிந்தும் திரியாதும் உறழ்ந்து முடியும்.

(எ-டு)

| | |
|---|---|
| முள் + கடிது | முள் கடிது<br>முட்கடிது |
| முன் + தீது | முள் தீது<br>முட்தீது |
| முள் + சிறிது | முள் சிறிது<br>முட்சிறிது |

"அல்வழி எல்லாம் உறழ் என மொழிப" (தொல் - எழுத்து - 399)

2. அல் வழியிலும் தகர வருமொழியிடத்து ளகரம் ஆய்தமாகத்திரிதலும் உரித்து.

முள் + தீது - முட்தீது முஃடிது

"ஆய்தம் நிலையலும் வரைநிலை இன்றே

தகரம் வரூஉம் காலை யான" (தொல் - எழுத்து - 400)

3. நெட்டெழுத்தை அடுத்து வரும் ளகரம், டகரமாகத்திரியாமல் இயல்பாய் முடிவதுண்டு. அல்வழிப்புணர்ச்சியில் வேற்றுமைப்புணர்ச்சியைப் போலத் திரிந்து முடிவனவும் உண்டு.

(எ-டு)

1. வாள்கடிது, கோள்கடிது எனத்திரியாமல் இயல்பாய் வந்தன.
2. தேட்கடிது, நாட்கடிது எனத் திரிந்து வந்தன.

"நெடியதன் இறுதி இயல்பாகுநவும்
வேற்றுமை அல்வழி வேற்றுமை நிலையலும்
போற்றல் வேண்டும் மொழியுமார் உளவே" (தொல் - எழுத்து 40)

ளகர ஈற்றுத் தொழிற்பெயர்

ளகர ஈற்றுத் தொழிற்பெயர் எல்லாம் ஞகர ஈற்றுத் தொழிற்பெயரைப் போல வேற்றுமைக்கண்ணும், அல்வழிக் கண்ணும் வல்லெழுத்துவரின் உகரமும் வல்லெழுத்தும் மிகப்பெறும். மெல்லினமும் இடையினமும் வரின் உகரம் மட்டும் மிகப்பெறும்.

| | |
|---|---|
| துள் + கடிது - துள்ளுக்கடிது<br>துள் + தீது - துள்ளுத்தீது<br>துள் + வலிது - துள்ளுவலிது<br>து:ன + நீண்டது - துள்ளுநீண்டது | அல் வழி |
| துள் + கடுமை - துள்ளுக்கடுமை<br>வள் + தீமை - துள்ளுத்தீமை<br>துள் + வன்மை - துள்ளுவன்மை<br>துள் + நீட்சி - துள்ளு நீட்சி | வேற்றுமை |

"தொழிற்பெயரெல்லாம் தொழிற்பெயர் இயல"

(தொல் - எழுத்து - 402)

இருள்

இருள் என்ற சொல்லானது வெயில் என்ற சொல்லைப் போல அத்து, இன் என்ற சாரியைகளைப் பெறும்.

(எ-டு)

இருள் + கொண்டான் — இருளத்துக்கொண்டான் / இருளிற்கொண்டான்

"இருள் என் கிளவி வெயிலியல் திரியும்" (தொல் - எழுத்து - 403)

புள், வள்

புள், வள் என்ற இருசொல்லும் தொழிற்பெயரைப் போல புணரும்.

(எ-டு) புள்ளுக்கடிது, வள்ளுக்கடிது
புள்ளுச்சிறிது, வள்ளுச்சிறிது
புள்ளுநீண்டது, வள்ளுநீண்டது
புள்ளுவலிது, வள்ளுவலிது
புள்ளுக்கடுமை, வள்ளுக்கடுமை
புள்ளுநீட்சி, வள்ளுநீட்சி
புள்ளுவன்மை, வள்ளுவன்மை.

இது புட்கடிது, வட்கடிது, புட்கடுமை, வட்கடுமை என்றும் வரும்.

"புள்ளும் வள்ளும் தொழிற்பெயர் இயல" (தொல் - எழுத்து - 404)

மக்கள்

மக்கள் என்ற பெயர்ச் சொல்லானது தக்க இடமறிந்து வல்லொற்றாய்த் திரியும்.

(எ-டு) மக்கள் + கை - மக்கட்கை
மக்கள் + தலை - மக்கட்தலை
மக்கள் + செவி - மக்கட்செவி
மக்கள் + புறம் - மக்கட்புறம்

"மக்கள் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
தக்கவழி அறிந்து வலித்தலும் உரித்தே" (தொல் - எழுத்து - 405)

## 9,4 புறனடைச்செய்திகள்

இனித் தொல்காப்பியர் இவ்வியலுக்குப் புறனடைவகுக்கிறார். சுட்டிச்சொல்லிய புணரியல் மருங்கில் மேற்கூறிய முடிபுகளே அன்றி வழக்கில் கண்டு செயற்குரிய முடிவுகளும் அமையலாம். அவற்றையும் கருத்திற்கொள்க என்கிறார்.

ன - வேற்றுமையில் இயல்பாதல்

விழன் குளம்
விழன் சேறு

அக்குச்சாரியை பெறல்

பொன்னப்பத்தம்

ர - உறழ்ச்சி

வேர் குறிது, வேர்க்குறிது

மிகுதி

அம்பர்க்கொண்டான், இம்பர்ச் சென்றான் - உருபு வராதது உருபின் பொருள் பட வந்தபோது வல்லினம் மிக்கது.

தகர்க்குட்டி இருபெயரொட்டுப்பண்புத் தொகையில் வல்லினம் மிக்கது.

ல - அம்முச்சாரியை பெறுதல்

உசிலங்கோடு

அல்வழியில் கல்லம்பாறை

லகர வீறு அத்துச் சாரியை பெறல்

அழலத்துக் கொண்டான்

ழ கரம் அல்வழியில் உறழ்தல்

தாழ்ப்பாவை, தாழ்பாவை

"உணரக்கூடிய புணரியல் மருங்கின்
கண்டு செயற்கு உரியவை கண்ணினர் கொளலே"

(தொல் - எழுத்து - 409)

மாணவச் செல்வங்களே!

இதுவரை இப்பாடத்தில் நாம் புள்ளி மயங்கியலில் மெல்லொற்று ஈறுகள், இடையின ஈறுகள் எவ்வாறு மயங்கிப் புணர்ந்து நின்றன என்பதையும், அதற்கான புறனடைச் செய்திகளையும் தொல்காப்பியர் வழிநின்று கண்டோம். இனி அடுத்த பாடத்தில் குற்றியலுகரப் புணரியல் பற்றிக் காண்போம்.

## I சுயதிறனறி வினாக்களுக்குரிய விடைகள்

1. மெய்யீறுகளின் புணர்ச்சி இலக்கணம்
2. அத்துச்சாரியை
3. அல்வழியில் இயல்பாகவும், வேற்றுமையில் திரிந்தும் வரும்.
4. இயல்பாய் முடியும்.
5. உறழ்ந்து வரும்.
6. வலிமிகாது இயல்பாய் முடியும்.
7. அல்வழிப்புணர்ச்சியில்
8. அத்துச்சாரியையும், இன் சாரியையும் பெற்று முடியும்.
9. அக்குச் சாரியை
10. உறழ்ச்சி

## பயிற்சி வினாக்கள்

## II குறு வினாக்கள்

1. ண கர ஈற்றுச் சொல் புணரும் விதிகளை எழுதுக.
2. ம் எனும் ஈறு வேற்றுமை அல்வழியில் எவ்வாறு மாற்றம்பெறும்?
3. தேன் எனும் கிளவி அடையும் மாற்றங்களை எடுத்துரைக்க.
4. சுட்டெழுத்துக்களை முதலாக உடைய சொற்களின் புணர்ச்சி நிலைகள் யாவை?
5. ஏழ் எனும் எண்ணுப்பெயர் இருவழியிலும் புணருமாற்றை எடுத்துரைக்க.
6. புள்ளி மயங்கியலுக்குப் புறனடையாகத் தொல்காப்பியர் கூறுவன யாவை?

## III நெடு வினாக்கள்

1. மெல்லின ஈறுகளின் புணர்ச்சி நிலைகளைத் தொல்காப்பியர் வழிநின்று விளக்குக.
2. இடையின ஈறுகளின் இருவழிப்புணர்ச்சி முறைகளை விளக்கி உரைக்க.

அலகு - 10

# குற்றியலுகரப் புணரியல்


10.1 குற்றியலுகரப் புணரியல் செய்திகள்

10.2 குற்றியலுகரம் அமையும் சொற்களின் வகை

10.3 நிலைமொழிக் குற்றியலுகர எண்ணுப்பெயர் அல்லாத இடத்து நிகழும் மாற்றங்கள்

10.4 குற்றியலுகர எண்ணுப்பெயர்ப்புணர்ச்சி

10.5 புறனடைச் செய்திகள்

# குற்றியலுகரப்புணரியல்

அன்பான மாணவர்களே!

நாம் இதுவரை தொல்காப்பியம் பற்றிய செய்திகள், நூல் மரபு, மொழி மரபு, பிறப்பியல், புணரியல், தொகை மரபு, உருபியல் உயிர் மயங்கியல் புள்ளி மயங்கியல் என்பன பற்றித் தொல்காப்பியர் கூறிய கருத்துக்கள் என ஒன்பது பாடங்களைக் கற்றோம். இப்போது நாம் இறுதியாக பத்தாம் பாடத்திற்கு வந்துள்ளோம்.

இப்பாடம் உங்களுக்குக் குற்றியலுகரப் புணரியல் பற்றி கருத்துக்களை விளக்கவிருக்கிறது.

**முதன்மை நோக்கம்**

மாணவன் குற்றியலுகரம் நிலைமொழி ஈறாக இருக்கப்புணர்ச்சியில் நிகழும் மாறுதல்களை அறிந்து கொள்கிறான்.

**துணைமை நோக்கங்கள்**

- குற்றியலுகரம் வரும் சொற்களின் வகைகளை அறிந்துகொள்கிறான்.
- நிலைமொழி, குற்றியலுகர எண்ணுப்பெயர் அல்லாத இடத்து நிகழும் மாற்றங்களைத் தெரிந்துகொள்கிறான்
- வருமொழி எண்ணுப்பெயர், அளவுப் பெயர் வரும்போது நிகழும் மாற்றங்கள் இவையெனத் தெரிந்துகொள்கிறான்.

## 10.1 குற்றியலுகரப்புணரியல் செய்திகள்

குற்றியலுகர நிலைமொழி ஈறாய் இருக்கப் புணர்ச்சியில் நிகழும் மாறுதல்களையும் குறிப்பது குற்றியலுகரப் புணரியல்.

அளவுநிலை எண்ணுப்பெயர்கள் வாழ்வில் அதிகம் பயின்று வருபவை. எடுத்து விளக்கும் அளவுக்கு அவை நிறைய இருப்பதால் தனி இயலாகக்கூற வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.. மேலும் உகரத்தின் கீழ் விளக்கினால் இயல் அமைப்பு எல்லை மீறவும், இடம் ஏற்படும், உகர ஈறு போலன்றி உயிர்த்தொடர், மென்தொடர், வன்தொடர் என்னும் தொடர்நிலைக்கு ஏற்பவும் குற்றியலுகரப்புணர்ச்சி மாறுபடுதவதால் தனித்துக்கூற வேண்டியதாயிற்று.

1. குற்றியலுகரம் வரும் சொற்களின் வகை
2. நிலைமொழிக் குற்றியலுகர எண்ணுப்பெயர் அல்லாத இடத்து நிகழும் மாறுதல்கள்.
3. நிலைமொழி எண்ணுப்பெயராய் இருக்க வருமொழி எண்ணுப்பெயர் அளவுப்பெயர் என வரும்போது நிகழும் மாற்றங்கள்.
4. உருபியல் உயிர் மயங்கியல் புள்ளி மயங்கியல் ஆகியவற்றிக்கும் புறனடை நூற்பாக்கள்.

என நான்கு நிலைகளில் தொல்காப்பியர் கூறும் கருத்துக்கள் யாதெனக் காண்போம்.

சுயதிறனறி வினாக்கள்

## 10.2 குற்றியலுகரம் அமையும் சொற்களின் வகை

1. ஈரெழுத்து ஒரு மொழி எவ்வாறு அழைக்கப்படும்?

நெட்டெழுத்தினைக் கொண்ட ஈரெழுத்து ஒருமொழி, உயிர்த்தொடர் மொழி, இடைத்தொடர் மொழி, ஆய்தத் தொடர்மொழி, வன்தொடர் மொழி, மென்றொடர் மொழி ஆகிய ஆறு இடங்களில் உகரம் குறுகும்.

ஈரெழுத்து ஒரு மொழியினை நெடில் தொடர்க் குற்றியலுகரம் என்றும் கூறுவர்.

(எ-டு) ஈரெழுத்து ஒருமொழி - நாகு
உயிர்த்தொடர் - வரகு
இடைத்தொடர் - தெள்ளு
ஆய்தத்தொடர் - எஃகு
வன்றொடர் - கொக்கு
மென்றொடர் - குரங்கு

"ஈரெழுத்து ஒருமொழி உயிர்த்தொடர்இடைத்தொடர்
ஆய்தத்தொடர்மொழி வன்தொடர் மென்தொடர்
ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன்" (தொல் - எழுத்து - 407)

குற்றியலுகரம் இயல்பில் குறுகாது

அல்வழி வேற்றுமை ஆகிய இரண்டிலும் அறுவகைப்பட்ட இறுதிக்கண்ணும் குற்றியலுகரம் குறுகாது. இயல்பாகிய அரைமாத்திரை பெற்று நிறைந்து நிற்கும்.

"அல்லது கிளப்பினும் வேற்றுமைக்கண்ணும்
எல்லா இறுதியும் உகரம் நிறையும்" (தொல் - எழுத்து - 409)

## 10.3 நிலைமொழி குற்றியலுகர எண்ணுப்பெயர் அல்லாத இடத்து நிகழும் மாற்றங்கள்

குற்றியலுகரம் மேலும் குறுகும் இடங்கள்

வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றியலுகரம் வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வருமிடத்து இடைப்படின் குறுகும் (எழுத்து - 37) என்பதனால் அரை மாத்திரையினும் குறுகி ஒலிக்கும்.

(எ-டு) கொக்கு + கடிது - கொக்குக்கடிது

"வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்
தொல்லை இயற்கை நிலையிலும் உரித்தே" (தொல் - எழுத்து - 410)

குற்றியலுகரம் அமையுமாறு

வருமொழி முதல் யகரமாய் இருக்க நிலைமொழியிறுதியாகிய உகரம் முற்றிலுமே கெட அவ்விடத்தில் குற்றியலிகரம் வந்து குறுகும்.

(எ-டு) நாகு + யாது - நாகியாது (இகரம் குற்றியலிகரம்)

"யகரம் வருவழி இகரம் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது" (தொல் - எழுத்து - 411)

நெடில் தொடர் உயிர்த்தொடர்ப்புணர்ச்சி

ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும் நிலை மொழியாயிருக்க வேற்றுமையிடத்து அவற்றின் இறுதிக் குற்றியலுகரத்தின் இன ஒற்று இடையில் மிக நிலை மொழியின் பின்னர் வல்லெழுத்தும் மிகும்.

(எ-டு) ஆறு + இடை - ஆற்றிடை

களிறு + கோடு - களிற்றுக்கோடு

"ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்
வேற்றுமை ஆயின் ஒற்றுஇடை இனமிகத்
தோற்றம் வேண்டும் வல்லெழுத்துமிகுதி" (தொல் - எழுத்து - 412)

ஒற்று இடைமிகாமொழி

இடையில் இன ஒற்று மிகுதியில்லா மொழியும் உள்ளன. அம்மொழிகளில் வல்லெழுத்து மிகுதியும் இல்லை.

(எ-டு) நாகு + கால் - நாகுகால்

"ஒற்றுஇடை இனமிகா மொழியுமாருளவே
அத்திறத்து இல்லை வல்லெழுத்து மிகலே" (தொல் - எழுத்து - 413)

## இடைத்தொடர் ஆய்தத்தொடர்

இடைஒற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும் வல்லெழுத்து வரும்போது இன ஒற்று இடையில் மிகாதும், வல்லெழுத்து மிகுதி பெறாதும் ஆகும்.

(எ-டு) தெள்கு + கால் - தெள்குகால்

எஃகு + கால் - எஃகுகால்

"இடைஒற்றுத் தொரும் ஆய்தத்தொடரும்

நடை ஆஇயல என்மனார் புலவர்" (தொல் - எழுத்து - 414)

## வன்தொடர் மென்தொடர்ப்புணர்ச்சி

குற்றியலுகர இறுதியாகிய வன்தொடர் மொழி, மென்தொடர் மொழி ஆகியவற்றின் பின் வல்லெழுத்து வந்தால் வந்த வல்லொற்று இடையில் மிகும்.

மென்தொடர்மொழி, வல்லொற்றை இறுதியில் கொண்ட கிளைப்பெயராயின் மென்தொடர் மொழியிலுள்ள மெல்லொற்று கிளை வல்லொற்று ஆகும்.

(எ-டு) கொக்கு + கால் - கொக்குக்கால் - வல்லொற்று மிக்கது.

குரங்கு + கால் - குரக்குக்கால் - மெல்லொற்று - வல்லொற்றாகியது,

எண்கு + குட்டி - எட்குக்குட்டி வல்லொற்று மிக்கது.

"வன்றொடர் மொழியும் மென்தொடர் மொழியும்

வந்த வல்லொழுத்து ஒற்றிடை மிகுமே

மெலொற்றுத் தொடர்மொழி மெல்லொற்றெல்லாம்

வல்லொற்று இறுதி கிளை ஒற்று ஆகும்" (தொல் - எழுத்து - 415)

2. மென்தொடர் மொழியுள் வல்ழெுத்து வரும்போது என்ன சாரியை பெறும்?

## மென்தொடர்ச் சிறப்பு விதி

அத்தகைய மென்தொடர்மொழியுள் வல்லெழுத்து வரும்போது மெல்லொற்று வல்லொற்று ஆகாது அக்குச்சாரியை பெற்றுவருவனவும் உண்டு.

(எ-டு) குன்று + கூகை - குன்றக்கூகை

"ஒற்று நிலை திரியாது அக்கொடுவரூஉம்

அக்கிளை மொழியும் உளவென மொழிப" (தொல் - எழுத்து - 419)

### வன்தொடர் மென்தொடர் மரப்பெயர்

குற்றியலுகர இறுதி மரப்பெயர்கள் வன்தொடர் மென்தொடராக இருப்பின் வல்லெழுத்து வருமொழியாக வரும்போது அம்சாரியை இடையில் வரும்.

(எ-டு) தேக்கு + கோடு - தேக்கங்கோடு

வேம்பு + கோடு - வேப்பங்கோடு

### மரப்பெயருக்கு சிறப்பு விதி

மரம் உணர்த்தும் மென்தொடர் மொழியுள் மெல்லொற்று வல்லொற்று ஆகாத சொற்களும் உள.

(எ-டு) குருந்தங்கோடு, புன்கங் கோடு

"மெல் ஒற்று வலியா மரப்பெயரும் உளவே" (தொல் - எழுத்து - 417)

3. வல்லெழுத்து வருமொழியாய் வந்தால் வல்லொற்றுத் தொடர் என்ன சாரியை பெறும்?

### ஈரெழுத்துமொழி, வல்லொற்றுத்தொடர்

குற்றியலுகரத்து இறுதியாகிய ஈரெழுத்து ஒருமொழியும் வன்தொடரும் நிலைமொழியாக இருக்க வல்லெழுத்து முதன் மொழி வருமொழியாய் வந்தால் இடையில் அம்முச்சாரியை வரக்கூடிய சொற்களும் உண்டு. அவை அவ்விலக்கணத்தோடு ஒழுகும் மொழிகளிடத்துக் காணப்படும்.

(எ-டு) ஏறு + கோள் - ஏறங்கோள்

வட்டு + போர் - வட்டம்போர் (வட்டு - சூதாடும் கருவி)

"ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத்தொடரும்
அம்மிடைவரற்கும் உரியவை உளவே
அம்மரபு ஒழுகும் மொழிவயின் ஆன" (தொல் - எழுத்து - 418)

4. வண்டு என்ற சொல்லின் பின் வல்லெழுத்து வரின் என்ன பெறும்?

### வண்டு பெண்டு

வண்டு, பெண்டு என்ற சொற்களின் பின்னர் வல்லெழுத்து வருமொழி அவை இன்சாரியையொடு பொருந்தும். பெண்டு என்ற சொல் அன் சாரியையும் பெற்றுவரும்.

(எ-டு) வண்டு + கால் - வண்டின் கால்

பெண்டு + கால் - பெண்டின்கால்

பெண்டு + கை - பெண்டன்கை

வண்டும் பெண்டும் இன்னொடு சிவனும்
பெண்டென் கிளவிக்கு அன்னும் வரையார்

(தொல் - எழுத்து - 421-422)

வினா, சுட்டு

யாது, அஃது, இஃது, உஃது ஆகிய குற்றியலுகர ஈற்றுச்சொற்கள் வல்லெழுத்து வருமொழியாய் வரும்போது யாது என்பது அன் பெற்றும் ஏனைய மூன்றும் அன்பெறுவதுடன் ஆய்தக்கேட்டினையும் கொள்ளும்.

(எ-டு) யாது + கோடு - யாதன்கோடு

அஃது + கோடு -அதன்கோடு

அஃது + கடிது - அது கடிது

"யாதென் இறுதியும் சுட்டு முதலாகிய
ஆய்த இறுதியும் உருபியல் நிலையும்
முன்னுயிர் வருடமித்து ஆய்தப் புள்ளி
மன்னல் வேண்டும் அல்வழி யான"

"ஏனாமுன் வரினே தானிலை இன்றே"

(தொல் - எழுத்து 423, 424, 425)

அல்வழிப்புணர்ச்சி

குற்றியலுகர ஈற்று எல்லா மொழியும் வல்லெழுத்து வருமொழியாக வந்தால் அல்வழியில் இயல்பாய் முடியும் வல்லொற்று வேற்றுமைத்தொடரில் மட்டும் வல்லினம் மிகும்.

(எ-டு) நாகு + கடிது நாகுகடிது

கொக்கு + கடிது - கொக்குகடிது

"அல்லது கிளப்பின் எல்லா மொழியும்
சொல்லிய பண்பின் இயற்கை ஆகும்"

"வல்லொற்றுத் தொடர் மொழி வல்லெழுத்து மிகுமே"

(தொல் - எழுத்து - 426, 27)

சுட்டு நீண்ட குற்றுகர ஈறுகள்

ஆங்கு, ஈங்கு ஊங்கு என்பன சுட்டுச்சினை நீடிய மென்தொடர் மொழிகள், யாங்கு என்பது வினாப்பொருளை உணர்த்தும் மென்தொடர்மொழி இவைகளுக்கு முன் வல்லெழுத்து வரின் மிக்கு முடியும்.

ஒருசில இடத்து யா என்ற வினாவினை முதலாகக் கொண்டமென் தொடர்மொழி வல்லெழுத்து வரும்போது இயல்பாய் முடியும்.

மேற்கூறிய நான்கு மொழித்தொடர்களிலுள்ள மெல்லொற்று வல்லெழுத்து வரும்போது திரியாது முடியும்.

(எ-டு) ஆங்குக்கொண்டான்
ஈங்குக்கொண்டான்
ஊங்குக்கொண்டான்
யாங்குப் பெரிதாயினும் } மிகை
யாங்கு கொண்டபின் இயல்பு

"சுட்டுச் சினை நீடிய மென் தொடர் மொழியும்
யாவினா முதலிய மென்தொடர் மொழியும்
ஆயியல் திரியா வல் எழுத்து இயற்கை"

"யாவினா மொழியே இயல்பும் ஆகும்"
"அந்நான் மொழியும் தம் நிலை திரியா"

(தொல் - எழுத்து - 428, 429, 430)

உண்டு

உண்மை என்ற பொருளில் வருகின்ற உண்டு என்ற சொல்லின் பின்னர் வல்லெழுத்து வரின் டுகரம் கெட்டு ணகரம் ளகரமாய்த் திரிதற்கு உரிமையுண்டு

(எ-டு) உண்டு + பொருள் - உண்பொருள்
உள் + பொருள் - உள்பொருள்

"உண்டென் கிளவி உண்மை செப்பின்
முந்தை இறுதி மெய்யொடும் கெடுதலும்
மேனியை ஒற்றே ளகாரம் ஆதலும்ங
ஆமுறை இரண்டும் உரிமையும் உடைத்தே
வல் எழுத்து வரூஉம் காலையான" (தொல் - எழுத்து - 421)

திசைப்பெயர்

குற்றியலுகர இறுதியாகிய திசைப்பெயரும் மற்றத்திசைப்பெயரோடு புணரும்போது இடையில் ஏகாரம் வரும்.

இருதிசை சொற்களும் இருதிசை குறிக்காது அவற்றிலிருந்து திரிந்த கோணத்திசைகளைக் குறிப்பின் நிலைமொழி இறுதியும் தான் ஏறி நின்ற மெய்யும் அதன் முன்னுள்ள ஒற்றுக்கெடும்.

நிலைமொழி 'தெற்கு' என்ற சொல்லாயிருப்பின் இறுதி மெய்யுடன் கெட ஈற்றுமெய் னகரமாகும்

(எ-டு) வடக்கு + தெற்கு - வடக்கேதெற்கு

வடக்கு + கிழக்கு - வடகிழக்கு

தெற்கு + மேற்கு - தென்மேற்கு

"இரு திசை புணரின் ஏ இடைவருமே"

"திரிபு வேறுகிளப்பின் ஒற்றும் இறுதியும்
கெடுதல் வேண்டும் என்மனார் புலவர்
ஈற்றுமெய் திரிந்து னகாரம் ஆகும்
தெற்கொடு புணரும் காலை யான" (தொல் - எழுத்து - 432, 433)

## 10.4 குற்றுகரஎண்ணுப்பெயர்ப்புணர்ச்சி

5. குற்றுகரம் எண்ணுப்பெயர் புணர்ச்சியில் வல்லெழுத்து வந்தால் என்ன சாரியை பெற்று முடியும்?

குற்றியலுகர இறுதியாகிய எண்ணுப்பெயர்கள் நிலைமொழியாயிருக்க வல்லெழுத்து வந்தால் உருபியலிற் கூறியவாறு அன் சாரியை பெற்று முடியும்.

(எ-டு) ஒன்று + காயம் - ஒன்றன்காயம்

"எண்ணுப்பெயர்க்கிளவி உருபியல் நிலையும்"

(தொல் - எழுத்து - 420)

<u>பத்தின் முன் பிற எண்கள்</u>

பத்து என்பதன் முன்னர் ஒன்று முதல் எட்டு இறுதியாக உள்ள எல்லா எண்ணுப்பெயர்களும் வரின் 'து' கெடும். இரண்டு அல்லாத ஏனைய பெயர்கள் வருமிடத்து இடையில் இன் சாரியை வரும்.

(எ-டு) பத்து + ஒன்று - பதினொன்று

பத்து + இரண்டு - பன்னிரண்டு

பத்து + மூன்று - பதின்மூன்று

பத்து + நான்கு - பதினான்கு

பத்து + ஐந்து - பதினைந்து

பத்து + ஆறு - பதினாறு

பத்து + ஏழு - பதினேழு

பத்து + எட்டு - பதினெட்டு

"ஒன்று முதலாக எட்டன் இறுதி
எல்லா எண்ணும் பத்தன் முன்வரின்
குற்றியலுகரம் மெய்யொடும் கெடுமே
முற்றஇன் வரூஉம் இரண்டலங்கடையே"
(தொல் - எழுத்து - 434)

பத்து என்பதன் பின்னர் இரண்டு வரும்போது துகரம் கெட்ட பின்னர்த் தகர ஒற்றுக்கெட அவ்விடத்து னகரம் இரட்டுமே.

(எ-டு) பத்து + இரண்டு - பதி + இரண்டு
பன் + இரண்டு - பன்னிரண்டு

"பத்தன் ஒற்றுக்கெட னகாரம் இரட்டல்
ஒத்தது என்பஇரண்டுவரு காலை" (தொல் - எழுத்து - 435)

6. பத்தின் பின்னர் ஆயிரம் வரின் என்ன நிகழும்?

பத்தின் பின் ஆயிரம்

பத்து என்றதன் பின்னர் ஆயிரம் வரினும் இன் சாரியை பெறும்.

(எ-டு) பதினாயிரம்

"ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது" (தொல் - எழுத்து - 436)

பத்தின் முன்நிறை, அளவுப்பெயர்

பத்து என்பதன் பின்னர் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் வருமிடத்து இடையில் இன் என்ற சாரியை வரும்.

(எ-டு) பதின் கழஞ்சு, பதின்கலம்,

"நிறையும் அளவும் வரூஉம் காலையும்
குறையா தாகும் இன் என் சாரியை" (தொல் - எழுத்து - 437)

பத்தின் முன் எண்கள்

ஒன்று முதல் ஒன்பது இறுதியாக உள்ள குற்றியலுகர இறுதிச் சொற்கள் நிலைமொழியாகவும் பத்து வருமொழியாகவும் இருக்கப்பத்து என்றதில் தகர ஒற்றுக் கெட, அவ்விடத்து னகரம் இரட்டும்

(எ-டு) பத்து + இரண்டு - பத் + இரண்டு
பன் + இரண்டு -பன்னிரண்டு

"பத்தன் ஒற்றுக்கெட னகாரம் இரட்டல்
ஒத்தது என்ப இரண்டு வருகாலை" (தொல் - எழுத்து - 435)

பத்தின் முன் எண்கள்

ஒன்று முதல் ஒன்பது இறுதியாக உள்ள குற்றியலுகர இறுதிச் சொற்கள் நிலைமொழியாகவும், பத்து வருமொழியாகவும் இருக்க பத்து என்பதில் உள்ள தகர ஒற்றுக்கெட அவ்விடத்தில் ஆய்தம் வருதல் உண்டு. நிலைமொழிகளுள் ஆறு என்றதைத் தவிர ஏனையவற்றுள் குற்றியலுகரம் முன்னர் கூறப்பட்ட தன்மையதாக மெய்யாகக் கெடும்.

(எ-டு) ஒன்று + பத்து

ஒன் + பஃது

ஓர் + பஃது

ஓர் + உ+பஃது - ஒருபஃது

இரண்டு + பஃது

இலர் + உ + பத்து

இரரு + பஃது

இரு + பஃது - இருபது

"முதல் ஈர் எண்ணின் ஒற்று ரகரம் ஆகும்
உகரம் வருதல் ஆவயினான"
"இடைநிலை ரகரம் இரண்டென் எண்ணிற்கு
நடைமருங்கு இன்றே பொருந்துவயினான"

(தொல் - எழுத்து - 439-440)

மூன்று ஆறு முன் பத்து

மூன்று, ஆறு இவற்றின் நெடுமுதல் குறுகும். மூன்றின் னகர ஒற்று பகர ஒற்றாகும்.

(எ-டு) மூன்று + பத்து

முன் + பஃது

முப் + பஃது - முப்பது

ஆறு + பத்து

அறு + பஃது - அறுபது

"மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்
மூன்றன் ஒற்றே பகாரம் ஆகும்" (தொல் - எழுத்து - 441)

நான்கு முன் பத்து

நான்கு என்பதன் னகரஒற்று றகரமாகும்.

(எ-டு) நான்கு + பத்து - நான்கு + பஃது

நாற் + பஃது - நாற்பஃது

"நான்கன் ஒற்றே றகாரம் ஆகும்" (தொல் - எழுத்து - 442)

ஐந்து முன் பத்து

ஐந்து என்பதன் நகர ஒற்று மகரஒற்றாகும்

(எ-டு) ஐந்து + பத்து - ஐந் + பஃது

ஐம் + பஃது - ஐம்பஃது - ஐம்பது

"ஐந்தின் ஒற்றே மகாரம் ஆகும்" (தொல் - எழுத்து - 443)

எட்டு முன் பத்து

எட்டு என்பதன் டகர ஒற்று ணகர ஒற்றாகும்.

எட்டு + பத்து - எட்டு + பஃது

எட் + பஃது - எண் + பஃது - எண்பஃது - எண்பது

"எட்டன் ஒற்றே ணகாரம் ஆகும்" (தொல் - எழுத்து - 444)

ஒன்பதன் முன்பத்து

ஒன்பது என்ற சொல்லில் ஒகரத்திற்கு முன் தகர ஒற்றுத்தோன்றும் அதன் பின் னகர ஒற்று இரண்டு ளகர ஒற்றாக மாறும். நிலைமொழி வருமொழி இரண்டிலுமுள்ள பத்து என்ற சொல்லின் பகரமும் ஆய்தமும் கெடும். அங்கு ஊகாரம் தோன்றும். வருமொழி குறுகிக் குற்றியலுகரத்து முன்னருள்ள தகர ஒற்று றகர ஒற்றாகும்.

(எ-டு) ஒன்பஃது + பத்து

த் + ஒன்பஃது + பத்து

தொன்பஃது + பஃது

தொன் + து

தொண் + து

தொண்ண் + ஊ + து

தொண்ண் + ஊ + று - தொண்ணூறு

"ஒன்பான் ஒகரமிசை தகரம் ஒற்றும்
முந்தை ஒற்றே ணகரம் இரட்டும்
பத்தென் கிளவி ஆய்த பகரம் கெட
நிற்றல் வேண்டும் ஊகாரக் கிளவி
ஒற்றிய தகரம் றகரமாகும்" (தொல் - எழுத்து - 445)

ஒன்று முதல் ஒன்பதன் முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும்

ஒன்பது முதல் ஒன்பான்வரை நிலைமொழியாய் இருக்க அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வருமொழியாய் வந்தால் முன்பு எண்ணுப்பெயருக்குக் கூறியது போலவே முடியும்.

(எ-டு) ஒரு கலம், இரு கலம்
நாற்கலம், ஆறுகலம், எண்கலம்
"அளந்தறி கிளவியும் நிறையென் கிளவியும்
கிளந்த இயல தோன்றும் காலை" (தொல் - எழுத்து - 445)

மூன்றன்முன் அளவு நிறை

மூன்று + கலம் - மூன்+கலம் - முன் + கலம் - முக் + கலம் - முக்கலம்
"மூன்றன் ஒற்றே வந்தது ஒக்கும்" (தொல் - எழுத்து - 447)

ஐந்து முன் அளவு, நிறை

ஐந்தன் ஒற்று வருமொழி முதலில் இன மெல்லெழுத்தாகும்.
ஐந்து + கலம் - ஐந் கலம் - ஐ கலம் - ஐங்கலம்
வருமொழி முதல் க ச த ப வர நிலைமொழியாகவுள்ள மூன்று ஐந்து என்னும் இவற்றின் னகர நகர ஒற்றுக்கள் முறையே வந்தமெல்லெழுத்து ஆகும்.
க ச த ப முதன்மொழி வரூஉங்காலை (தொல் - எழுத்து - 449)

எட்டன்முன் அளவு நிறை

எட்டு என்பதன் முன்னர் முற்கூறப்பட்ட வல்லெழுத்துக்களோடு ந, ம வ அ என இவை வரின் எட்டன் ஒற்று அதாவது ட் என்ற மெய் 'ண்' என மாறும்.

(எ-டு) எட்டு + கலம் - எட்கலம்
எண் + கலம் - எண்கலம்
எட்டு + நாழி - எண்ணாழி

"நமவ என்னும் மூன்றொடு சிவணி
அகரம் வரினும் எட்டன்முன் இயல்பே" (தொல் - எழுத்து - 450)

<u>ஐந்து முன் பின் ந ம மொழிகள்</u>

ஐந்து மூன்று இவற்றின் பின்னர் வருமொழி முதலில் ந, ம இவை வரும்போது அவற்றின் நகர னகரங்கள் ந ம வாக மாறும்.

(எ-டு) மூன்று + நாழி - முந்நாழி
மூன்று + மண்டை - மும்மண்டை
ஐந்து + நாழி - ஐந்நாழி
ஐந்து + மண்டை - ஐம்மண்டை

"ஐந்து மூன்று நமவரும் காலை
வந்தது ஒக்கும் ஒற்றியல் நிலையே" (தொல் - எழுத்து - 451)

<u>மூன்றின் முன் வகர அளவுப்பெயர்</u>

வகரம் வருமொழி முதலாக வரும்போது மூன்று என்றதன் னகர ஒற்று பின்னர்த் தோன்றிய வகரத்தின் வடிவாகும்.

7. நான்கன்முன் வகர அளவுப்பெயர் எவ்வாறு வரும்?

(எ-டு) மூன்று + வட்டி - முன்வட்டி
முன் + வட்டி - முவ்+வட்டி - முவ்வட்டி
"மூன்றன் ஒற்றே வகாரம் வருவழித்
தோன்றிய வகாரத்து உருவாகும்மே" (தொல் - எழுத்து - 452)

<u>நான்கன்பின் வகர அளவுப்பெயர்</u>

வகரம் வருவழி நான்கு என்றதன் னகர ஒற்று லகர ஒற்றாகும்.

(எ-டு) நான்கு + வட்டி; நான் + வட்டி; நால் + வட்டி - நால்வடி

ந்ான்கன் ஒற்றேலகாரம் ஆகும் (தொ்ல் - எழுத்து - 453)

<u>ஐந்தன் முன் வகரம் அளவுப்பெயர்</u>

வகரம் வருவழி ஐந்தன் நகர ஒற்றுக்கெடும்.

(எ-டு) ஐந்து + வட்டி; ஐந் + வட்டி; ஐ + வட்டி ஐவட்டி

"ஐந்தன் ஒற்றே முந்தையது கெடுமே" (தொல் - எழுத்து - 454)

எண்ணுப்பெயர் முன் உயிர் முதல் அளவுப்பெயர்

முதல் ஈ ரெண் முன்

ஒன்று இரண்டு என்பதன்பின் உயிர் முதல் அளவுப்பெயர் வருமிடத்து உகரம் கெடும். முதல் எழுத்து நீட்சியடையும்.

(எ-டு) ஒன்று + அகல் - ஓர் + அகல் ஓரகல்

ஈர் + கல் - ஈரகல்

"முதல் ஈர் எண்ணின் முன் உயிர்வருகாலைத்
தவலென மொழிப உகரக் கிளவி
முதனிலை நீடல் ஆவயினான" (தொல் - எழுத்து - 455)

<u>மூன்று நான்கு ஐந்து</u>

மூன்று, நான்கு, ஐந்து எண்கள் வகரத்திற்குக் கூறியவாறே வரும். உழக்கு வரும்போது மட்டும் மூன்றின் முதல் நீடும்.

(எ-டு) மூன்று + அகல் - மூவ்வகல்

நான்கு + அகல் - நாலகல்

ஐந்து + அகல் - ஐயகல்

மூன்று + உழக்கு - மூவுழக்கு

"மூன்றும் நான்கும் ஐந்தன் கிளவியும்
தோன்றிய வகரத்து இயற்கை ஆகும்
மூன்றன் முதனிலை நீடலும் உரித்தே
உழக்கென் கிளவி வழக்கத் தான" (தொல் - எழுத்து - 456-457)

ஆறுமுன் உயிர்

ஆறு என்பதன் பின் உயிர் வருகாலை முதல் நீளும்

(எ-டு) ஆறு + அகல் - ஆறகல்

"ஆறென் கிளவி முதல் நீடும்மே" (தொல் - எழுத்து - 458)

<u>ஒன்பதன்முன்</u>

ஒன்பது என்றதன் இறுதியுலுள்ள பது என்றது தன் வடிவிற் கெடாது இன் என்ற சாரியை மொழியைப் பெறுதல் வேண்டும்.

(எ-டு) ஒன்பதின் கலம்

ஒன்பதின் கல்

ஒன்பதினுழக்கு

"ஒன்பான் இறுதி உருபு நிலைதிரியாது
இன்பெறல் வேண்டும் சாரியை மொழிபே" (தொல் - எழுத்து - 459)

வருமொழி நூறு

ஒன்று முதல் ஒன்பது இறுதியாகிய சொற்களின் பின்னர் நூறுவரினும் பத்து என்றது பின் வரும்போது பெற்ற புணர்ச்சித் தன்மையையே கொண்டு முடியும்.

(எ-டு) ஒன்று + நூறு - ஒரு நூறு
இரண்டு + நூறு - இரு நூறு

"நூறுமுன் வரினும் கூறிய இயல்பே" (தொல் - எழுத்து - 460)

மூன்று முன் நூறு

நூறு வருமொழியில் வரும்போது மூன்று என்பதின் னகரம் நகரமாகும்

(எ-டு) மூன்று + நூறு - முன் + நூறு
முந் + நூறு - முந்நூறு

"மூன்றன் ஒற்றே நகாரம் ஆகும்" (தொல் - எழுத்து - 461)

நான்கு ஐந்து முன் நூறு

நான்கு ஐந்து இவற்றின் ஒற்றுக்கள் தம் உருவத்திலிருந்து வேறுபடா

(எ-டு) நான்கு + நூறு
நான் + நூறு - நானூறு
ஐந்து + நூறு
ஐந் + நூறு - ஐந்நூறு

"நான்கும் ஐந்தும் ஒற்றுமெய் திரியா" (தொல் - எழுத்து - 462)

ஒன்பதன் முன் நூறு

ஒன்பது நிலை மொழியாகவும், நூறு வருமொழியாகவும் அமையும்போது ஒன்பது என்பதிலுள்ள முதல் எழுத்து தொண்ணூறு என்ற புணர்ச்சிக்குக் கூறியது போலத் தன்முன் 'த' என்ற மெய்பெறும் அதன்பின் உள்ள ன்ப என்பது கெட அதனிடத்து ஒற்றாகிய ளகரம் இரட்டும் 'நூறு' என்றதன் நகாரம் கெட ஊ, ஆ ஆகுந் தன்மை பெறும், அவ்விடத்து ஆகாரத்திற்கும் இறுதி எழுத்திற்கும் இடையில் 'இர' வருதல் வேண்டும். இறுதி மெய்யாகிற 'று' கெட்டு மகர ஒற்று மிகும்.

(எ-டு) ஒன்பது + நூறு

த் + ஒன்ப + நூறு

தொன்ப + நூறு

தொள்ள + நூறு

தொள்ள + ஆறு

தொள்ள + ஆ இரறு

தொள்ள + ஆஇரம் - தொள்ளாயிரம்

"ஒன்பான் முதனிலை முந்துகிளந்தற்றே
முந்தை ஒற்றேளகாரம் இரட்டும்
நூறன் கிளவி நகார மெய் கெட
ஊ அ ஆகும். இயற்கைத்து என்ப
ஆயிடை வருதல் இகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகாரம் ஒற்றும்"

(தொல் - எழுத்து - 463)

<u>வருமொழி ஆயிரமானால் அடையும்மாற்றம் ஒன்று இரண்டு முன் ஆயிரம்</u>

ஆயிரம் என்பது வருமொழியாய் இருக்க நிலைமொழியிலுள்ள ஒன்று இரண்டு என்பதன் உகரம் கெடும். ஒரு. இரு. எனுமிற்றின் முதல் எழுத்து நீட்சி பெறினும் குற்றமில்லை.

(எ-டு) ஒன்று + ஆயிரம்

ஒன் + ஆயிரம்

ஓர் + ஆயிரம்

ஒரு + ஆயிரம்

ஒர் + ஆயிரம் - ஒராயிரம்

ஓர் + ஆயிரம் - ஓராயிரம்

இங்கு 'ஒன்று' இரண்டு என்பன ஒருஇரு என ஆகுமென்று கூறிய பின்னரே ஆங்குள்ள உகரம் கெடும் எனக் கூறுதல் பொருந்தும்.

"ஆயிரக் கிளவி வரூஉம் காலை
முற்கூறியற்கை பெறுதலும் உரித்தே
ஆயிரக்கிளவி வரூஉம்காலை
முதல் ஈர் எண்ணின் உகரம் கெடுமே"
முதல்நிலை நீட்டினும் மானம் இல்லை (தொல் - எழுத்து - 464-465)

மூன்றன் முன் ஆயிரம்

மூன்று என்பதன் பின் ஆயிரம் வரின் அதன் னகர ஒற்று வகாரம் ஆகும்.

(எ-டு) மூன்று + ஆயிரம்

மூன் + ஆயிரம்

மூவ் + ஆயிரம் = மூவாயிரம்

"மூன்றன் ஒற்றே வகாரம் ஆகும்." (தொல் - எழுத்து - 466)

8. நான்கு முன் ஆயிரம் வந்தால் என்னவாகும்?

நான்கன் முன் ஆயிரம்

நான்கு என்பதன் பின்னர் ஆயிரம் வரின் அதன் னகர ஒற்று லகர ஒற்றாகும்.

(எ-டு) நான்கு + ஆயிரம்

நான் + ஆயிரம்

நால் + ஆயிரம் - நாலாயிரம்

"நான்கன் ஒற்றே லகாரம் ஆகும்" (தொல் - எழுத்து - 467)

ஐந்தன் முன் ஆயிரம்

ஐந்து என்பதன் பின்னர் ஆயிரம் வரின் அதன் நகர ஒற்று யகரம் ஆகும்.

(எ-டு) ஐந்து + ஆயிரம்

ஐந் + ஆயிரம்

ஐய் + ஆயிரம் - ஐயாயிரம்

"ஐந்தன் ஒற்றே யகாரம் ஆகும்." (தொல் - எழுத்து - 468)

ஆறன் முன் ஆயிரம்

ஆறு என்பதன் பின் ஆயிரம் வந்தால் குற்றியலுகரம் தனக்குப் பற்றுக்கோடாகிய மெய்யை விட்டு நீங்கும்

(எ-டு) ஆறு + ஆயிரம்

ஆற் + ஆயிரம்

ஆற் + ஆயிரம் - ஆறாயிரம்

"ஆறன் மருங்கின் மருங்கின் குற்றியலுகரம்

ஈற்று மெய் ஒழியக் கெடுதல் வேண்டும்" (தொல் - எழுத்து - 469)

ஒன்பது முன் ஆயிரம்

ஒன்பது என்றதன்பின் ஆயிரம் வந்தால் இறுதி எழுத்துகளின் வடிவம் திரியாது இன் சாரியை பெற்று வரும்.

(எ-டு) ஒன்பது + ஆயிரம்

ஒன்பதினாயிரம்

"ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது

இன்பெறல் வேண்டும் சாரியை மரபே" (தொல் - எழுத்து - 470)

எண்ணுப்பெயர் முன் நூறாயிரம்

ஒன்று முதல் ஒன்பான் வரையுள்ள எண்ணின் பின்னர் நூறாயிரம் வருமொழியாய் வருமிடத்து, முதலில் கூறப்பட்ட ஒன்று என்றசொல் நூறு என்றது வருமொழியாய் வருமிடத்து 'ஒரு' என மாறும்.

(எ-டு) ஒன்று + நூறாயிரம்

ஒரு நூறாயிரம்

"நூறாயிரமுன் வருஉம் காலை

நூறன் இயற்கை முதனிலைக் கிளவி" (தொல் - எழுத்து - 471)

நூறுமுன் எண்ணுப்பெயர்

நூறு என்பதன் பின்னர் ஒன்று முதல் ஒன்பான் வரை வருமொழியாய் வருமிடத்து நிலைமொழி இறுதிக் குற்றியலுகரம் நிற்க, இன ஒற்றுமிடுமே ஒன்று முதல் ஒன்பான் வரையுள்ள எண்ணைப் பத்து ஊர்ந்து வந்தாலும் இவ்வாறே முடியும்.

(எ-டு) நூறு + ஒன்று; நூற்று + ஒன்று - நூற்றொன்று

நூறு + ஒருபஃது - நூற்றொருப்ஃது

"நூறென் கிளவி ஒன்று முதல் ஒன்பாற்கு

ஈறுசினை ஒழிய இனஒற்று மிடுமே"

"அவையூர் பத்தினும் அத்தொழிற்று ஆகும்"

(தொல் - எழுத்து - 472, 473)

நூறு என்பதன் பின் அளவு, நிறைப்பெயர்

நூறு என்பதன் பின்னர் அளவு நிறைப்பெயர் வரின் இன ஒற்று மிகும். குற்றியலுகரம் வல்லொற்றுத் தொடரின் இயற்கையாகயி வல்லெழுத்து மிகும்.

(எ-டு) நூறு + கலம் - நூற்றுக்கலம்

நூறு + கழஞ்சு - நூற்றுக்கழஞ்சு

"அளவும் நிறையும் ஆயியல் இயற்கையும்

குற்றியலுகரம் வல்லெழுத்து இயற்கையும்

முற்கிளந்தன்ன என் மனார் புலவர்." (தொல் - எழுத்து - 474)

ஒருபஃது முதலியவற்றின்முன் ஒன்று முதல் ஒன்பது வரல்

ஒருபஃது, இருபஃது முப்பஃபூ, முதலிய சொற்களின் பின்னர் ஒன்று முதல் ஒன்பது வரைவரின் ஆய்தம் நிலைமொழியில் கெடும். ஒற்று இடை மிகும்.

(எ-டு) ஒருபஃது + ஒன்று

ஒருபது + ஒன்று

ஒருபத்து + ஒன்று - ஒருபத்தொன்று

"ஒன்றுமுதல் ஆகிய பத்தூர் கிளவி
ஒன்றுமுதல் ஒன்பாற்கு ஒற்று இடைமிகுமே
நின்ற ஆய்தம் கெடுதல் வேண்டும்" (தொல் + எழுத்து - 475)

ஒருபஃது முதலியவற்றின் முன் ஆயிரம் அளவுப்பெயர் முதலியன

ஒருபஃது, இருபஃது முதலியவற்றின் பின்னர் ஆயிரம் வரின் இன்சாரியை தோன்றும். அப்போது ஒற்று இடையில் மிகாது ஆய்தம் கெடும். அளவு, நிறைப்பெயர் வந்தாலும் அவ்வாறே முடியும்.

(எ-டு) ஒருபஃது + ஆயிரம்

ஒருபது + ஆயிரம்

ஒருபது + இன் + ஆயிரம் - ஒருபதினாயிரம்

ஒருபது + கலம் + ஒருபதின்கலம்

ஒருபது + கழஞ்சு - ஒருபதின் கழஞ்சு

"ஆயிரம் வரினே இன் என் சாரியை
ஆவயின் ஒற்றிடை மிகுதல் இல்லை"
(தொல் - எழுத்து - 476)

"அளவும் நிறைவும் ஆயியல் திரியா" (தொல் - எழுத்து - 477)

ஒன்று முன் வல்லெழுத்து ஞ், ந், ம், ய், வ்

ஒன்று என்ற சொல்லின் பின்னர் வல்லெழுத்து ஞ், ந், ம், ய், வ் ஆகிய வரின் முற்கூறியவாறு முடியும். அதாவது, நிலைமொழி ஈறுகெட்டு னகரம், ரகரமாக மாறி உகர உயிர் பெற்று முடியும்.

ஒன்று + கல்

ஒன் + கல்

ஓர் + உ + கல் - ஒருகல்

ஓர் + ஞாண் - ஒருஞாண்

"முன்னிலை எண்ணின் முன் வல்லெழுத்து வரினும்
ஞநம தோன்றினும் யவ வந்தியையினும்
முதனிலை இயற்கை என்மனார் புலவர்." (தொல் - எழுத்து - 478)

ஒன்றின் பின் உயிரும் மாவும்

ஒன்று என்பதன் முன் உயிரும் யாவும் வந்தால் நிலைமொழி ஒன்று ஒகரம் ஓகாரமாகும். ரகரத்து உகரம் முழுமையும் கெடும்.

(எ-டு) ஒன்று + ஆடை
ஒன் + ஆடை
ஓர் + ஆடை
ஒரு + ஆடை
ஓர் + ஆடை
ஓர் + ஆடை ஓராடை
ஒன்று + யாழ் - ஓர் யாழ்

"அதனிலை உயிர்க்கும் யாவருகாலையும்
முதனிலை ஒகரம் ஓவாகும்மே
ரகரத்து உகரம் துவரக் கெடும்." (தொல் - எழுத்து - 479)

9. இரண்டு + மா எவ்வாறு வரும்?

இரண்டு முதல் ஒன்பது + மா

இரண்டு முதல் ஒன்பது வரையுள்ள சொற்களின் பின்னர் வழக்கிலுள்ள மா என்ற சொல்வரின் மகர முதளவுப்பெயரொடு ஒரு தன்மைத்து ஆதலும் உரித்து

(எ-டு) இரண்டு + மா - இருமா
"இரண்டு முதல் ஒன்பான் இறுதி முன்னர்
வழங்கியல் மா என் கிளவி தோன்றின்
மகர அளபொடு நிகரலும் உரித்தே." (தொல் - எழுத்து - 480)

## 10.5 புறனடைச் செய்திகள்

லகார னகார ஈற்றுச்செய்யுள் முடிவு

ல், ன் இவற்றினை ஈற்றில் கொண்ட மொழியின் பின்னர் செய்யுளில் தொடர் வந்தால் இடையில் உம் + கெழு எனவும், பிற சாரியைகளும் வேற்றுமைப் பொருள் புணர்ச்சியில் தோன்றும்.

(எ-டு) வான வரி வில்லுத்திங்களும்
மாநிதிக் கிழவனும் போன்ம்
கல்கெழு காணவர்
கான்கெழு நாடு

"லன என உரூஉம் புள்ளி இறுதிமுன்
உம்மும் கெழுவும் உளப்படப் பிறவும்
அன்னமரபின் மொழியிடைத் தோன்றிடச்
செய்யுள் தொடர் வயின் மெய்பெற நிலையும்
வேற்றுமை குறித்த பொருள் வயினான" (தொல் - எழுத்து - 481)

உயிர் ஈறு மெய் ஈறு ஆகியவற்றிற்குப் புறனடை

உயிர், புள்ளி இவற்றை உறுதியாகக் கொண்ட உரிச்சொல், உயர் திணை, அஃறினை இவற்றைச் சார்ந்த ஐம்பாலினையும் அறிவிக்கும்.

எழுத்துக்கள் தொக்கப் பண்புத்தொகைச் சொற்கள், தம் தன்மை காட்டும் வினைப்பகுதி தொகும் வினைத் தொகைச் சொற்கள் தன் தன்மையைக் குறிக்கத் தன்முன் தாம் உரூஉம் எண்ணுப்பெயர்களாகிய தொகைச் சொற்கள் ஆகியன உலகில் வழக்கின் வரப்பட்டனவாய்ப் புணரியலில் விளங்கத் தோன்றாது.

10 மருவின் பாத்திய என்று தொல்காப்பியர் கூறுவதன் பொருள் யாது?

வழக்கில் உள்ளவற்றை அப்படியே கொள்ளல் வேண்டுமேயன்றி அவை புணரும் விதிகள் முற்றிலும் இங்கு கூறப்படவில்லை. புணரியலில் கூறப்படாதவனவும், பிணைப்புச்சொற்களும் வழக்கில் உண்டு அவற்றினை மருவின் பாத்திய என்பார் தொல்காப்பியர்

(எ-டு) விண்விளைத்தது - குறிப்பு

கார் கறுத்தது - பண்பு

ஒல்ஒலித்தது - இசை

நன்மக்கள் - பண்புதொகுமொழி

கொல்யானை - தொழில் தொகுமொழி

ஒரொன்று - எண்ணின் தொகுதி

"உயிரும் புள்ளியும் இறுதி ஆகிக்
குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி
நெறிப்பட வாராக் குறைச்சொல் கிளவியும்
உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும்
செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்யொருங் கியலு தொழில் தொகு மெய்யும்
தம்மியல் கிளப்பின் தம்முன் தாம் உரூஉம்
எண்ணின் தொகுதி உளப்படப் பிறவும்
அன்னவை எல்லாம் மருவின் பாத்திய
புணரியல் நிலையிடை உணரத்தோன்றா"

(தொல் - எழுத்து - 482)

எழுத்ததிகாரத்திற்குப் புறனடை

முன்பு கூறப்பட்ட நூற்பாக்களில் கூறாது விடுத்த செய்திகள் செய்யுளில் திரிந்து வருவனவும், வழக்கில் வருவனவும் உண்டு. அவை கூறப்பட்ட விதிகளுக்கு மாறுபடத் தோன்றின் வழக்கினை உணர்ந்து நடத்தல் அறிவுடையார் செயல் என்று கூறியுள்ளார் தொல்காப்பியர்.

(எ-டு) ஏவலந்தண்மொழில்
நெய்தலஞ்சிறுபறை } இருவழியிலும் அம்சாரியை வந்தன

தெவ் + முனை - தெம்முனை
சோழ + நாடு - சோணாடு
மலையமானாடு - மலாடு } மருவி வந்தன

ஏழு, எழுகலம் போன்றன வேறுபடத்தோன்றின. பொதுவில் என்பது பொதியில் என வேறுபடத் தோன்றின.

"கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்
வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய இயற்கையின் வேறுபடத் தொன்றின்
வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்க
நன்மதி நாட்டத்து என்மனார் புவலர்" (தொல் - எழுத்து - 483)

இவ்வாறாக தொல்காப்பியர் தமிழ் மொழியின் எழுத்தியல் பற்றிக்கூறிய கருத்துக்களையெல்லாம் வகைப்படுத்திக்கண்டோம். தொல்காப்பியர், தொல்காப்பியச்செய்திகள், நூல்மரபு, மொழிமரபு, பிறப்பியல், புணரியல், தொகை மரபு, உருபியல், உயிர் மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப்புணரியல் எனப் பத்து பாடங்களாகத் தமிழின் எழுத்தியல் பற்றி அறிந்து கொண்டோம். இவ்வெழுத்தியல் செய்திகளே மொழிக்கு அடிப்படையானவை. இது அடித்தளமாக அமைய அதன்பின்னரே நாம் சொல், பொருள் ஆகியன பற்றி அறிந்து கொள்வதில் துலக்கம் பெறமுடியும். மொழிச்செப்பம் தொன்றுதற்கு ஆதாரமாக விளங்கும் தொல்காப்பிய எழுத்ததிகாரச்செய்திகளை மீண்டும், மீண்டும் கற்றறிந்து மொழித்திறன் மேம்பாடு பெறுவீர்களாக

வாழ்த்துக்கள் நன்மதிப்பெண் பெற, சுயதிறனறிவிடைகளையும், பயிற்சி வினாக்களுக்கான விடைகளையும் தயாரித்து வைத்துக்கொண்டு, பாடம்பாடமாக வினாவிடைகளைத் தயாரித்து கோப்பிட்டு வைத்துக்கொண்டு தொடர்ந்து கற்பீர்களேயானால் உங்களை வெல்ல வையகத்தில் ஆளே இல்லை. மொழிப்புலமை பிறந்ததின் பயனாகும்.

## I சுயதிறனறி வினாவுக்குரிய விடைகள்

1. நெடிற்றொடர்க்குற்றியலுகரம்
2. அக்குச்சாரியை
3. அம்முச்சாரியை
4. இன்சாரியை
5. அன்சாரியை
6. இன்சாரியைபெறும்
7. னகரஒற்று லகரமாக மாறும்
8. ஒற்றே லகரம் ஆகும்
9. இருமா எனவரும்
10. புணரியல் நிலையிடைக்கூறாத பிணைப்புச்சொற்களும் வழக்கில் உண்டு. அவற்றை மருவின் பாத்திய என்பர்.

## பயிற்சி வினாக்கள்

## II குறு வினாக்கள்

1. திசைப்பெயர் புணர்ச்சி குறித்து எழுதுக.
2. பத்தின் முன் எண்கள் எவ்வாறு இணையும்?
3. ஒன்று முதல் ஒன்பதன் முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வரும் விதங்களைக் குறிப்பிடுக.
4. வருமொழி ஆயிரமானால் அடையும் மாற்றங்கள் யாவை?
5. உயிர் ஈறு மெய் ஈறு இவற்றைத் தொல்காப்பியர் புறனடையாகக்கூறும் கருத்துக்கள் யாவை?

## III நெடு வினாக்கள்

1. குற்றியலுகரம் வரும் சொற்களின் வகைகளை விவரி.
2. குற்றியலுகர எண்ணுப்பெயர் அல்லாத இடத்து நிலைமொழியில் நிகழும் மாற்றங்கள் யாவை?
3. குற்றியலுகர எண்ணுப்பெயர்ப்புணர்ச்சி பற்றி விளக்குக.
4. உருபியல், உயிர்மயங்கியல், புள்ளி மயங்கியல் ஆகியவற்றுக்குத் தொல்காப்பியர் கூறிய புறனடைச் செய்திகளைத் தொகுத்துரைக்க.